உ

திருச்சிற்றம்பலம்.

# வேதாந்தவிலக்கணம்.

இது
திருத்துருத்தி
இந்திரபீடம் சாபாத்திரசுவாமிகள்
ஆதினத்துக்குரிய
**ஸ்ரீகுரு-சச்சிதானந்தசுவாமிகளால்**
தமது சுவாநுபூதியில் உதித்தவாறு
அருளிச்செய்யப்பட்டு,

சென்னை அத்துவைத சபையார்
விருப்பத்தின்படி,

ஷை- சுவாமிகள் மாணாக்கர்
கோவளம்
**துரைசாமிநாயுடவர்களால்**

சென்னை:
ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

விரோதி௵ மிதுன௴
இதன் விலை அணா - ௧௦.

உ

கடவுள்துணை.

# புத்தகவிளம்பரம்.

இதனாலறிவிப்பது யாதெனின், இதனடியிறகண்டுள்ள புத்தகங்களை வேண்டுவோர் சென்னை தங்கசாலைவீதியில் 191-வது கதவிலக்கமுள்ள வீட்டில் ம-஀-஀-ஸ்ரீ இரத்தினவேலு முதலியாரவர்களிடத்திலும், ஜெனரல் போஸ்டாபீஸ் ஹெட்கிளர்க்கு ம-஀-஀-ஸ்ரீ கோ. துரைசாமிநாயுடு அவர்களிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம். வெளியூர்க்காரர் ஷையாருக்கு முன்பணமனுப்பாமலே வாலியூபேயபில் போஸ்டிலேயே பெற்றுக்கொள்ளலாம். இதற்குமுன் அச்சிட்ட நூற்களில் குறித்த புத்தகங்களின் விலை தப்பிதம்.

அச்சிட்டிருக்கும் நூல்கள்.

| | ரு. | அ. | பை |
|---|---|---|---|
| பிரபுலிங்கலீலை மூலமும் உரையும் காப்பி 1-க்கு | 2 | 8 | 0 |
| சுவானுபூதிவிளக்கம், சீவகாருணியவிளக்கம் ... | 0 | 6 | 0 |
| உபநிடத விருத்தியுரை ... ... | 0 | 5 | 0 |
| வேதாந்த சூளாமணி உரை ... ... | 2 | 6 | 0 |
| தசகாரிய மகாவாக்கியவுரை ... ... | 0 | 10 | 0 |
| திருக்குத்திரிசிய விவேகவுரை ... ... | 1 | 0 | 0 |
| உத்தமவாதம் ... ... ... | 0 | 10 | 0 |
| கைவல்லியநவநீத விருத்தியுரை (2d Edition-in the Press.) ... ... ... | 2 | 0 | 0 |
| சர்வமதசித்தாந்த விளக்கவினாவிடை. ... | 1 | 0 | 0 |
| தத்துவநிஜானுபோகசாரம் (முதல்வால்யம்) ... | 2 | 0 | 0 |
| சுகர் கைவல்லியம் ... ... ... | 0 | 2 | 0 |
| சொரூபசார மூலம் ... ... ... | 0 | 2 | 0 |
| பிரத்தியக்ஷானுபூதிவிளக்கம் ... ... | 0 | 10 | 0 |
| சசிவன்னபோதவுரை ... ... ... | 0 | 10 | 0 |
| எதார்த்தவாதம் ... ... ... | 0 | 4 | 0 |
| சொரூபசாரம் மூலமும், உரையும் ... ... | 0 | 8 | 0 |
| வேதாந்த இலக்கணவுரை ... ... | 0 | 10 | 0 |

இனி அச்சிடப்படும் நூல்.

பகவற்கீதை விருத்தியுரை.

# சிறப்புப்பாயிரம்.

திருமயிலை-வித்வான்

## சண்முகம்பிள்ளையவர்கள் பாடிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்பூத்தவேதமுதற்கலையனைத்துமறமுதனாற்பயன்றெரிக்கும், ஏர்பூத்தவப்பயனான்முதற்றறமென்றெவ்வெவருமியற்பானிற்கும், பேர்பூத்தவவ்வறமேவடிவாயவுமையதனைப்பெரிதுநாடிப், பார்பூத்தகாஞ்சியிடைப்புரிந்ததனாற் சிறந்தொழிற்பாலிநாடு. (௧)

அந்நாடுசெய்தவமென்றனைத்துலகுங்கிளக்குமருநீர்மைத்தாகிப், பொன்னாடுஞ்சிகரிவான்மிசைப்பொலிந்தன்னதனைவைப்பொறிப்பவோங்கி, முன்னாடுபல்வளனுந்துதைந்தெவருமினிதுறையுமூதூரொன்னத், தென்றூரும்பொழின்மலியுமீருமொன்றெருநகராஞ்சிறக்குமாலோ. (௨)

அன்னநகர்வயினோர்நான்மறையின்முடிபனைத்துநனியந்திலாய்ந்து, துன்னியசீர்கெழுமூருத்திரமெனநானிலத்துநிறீஇத், தொகுத்தகேள்வி, மன்னியநம்வாதராயணனென்னத்தன்னனுபூதியின்வயங்கும், நன்னர்நவநவமாயவிரதமெலாஞ்சூத்திரயாப்பினியைந்து. (௩)

அஞ்ஞான்றுசெந்தமிழினிலக்கியக்குக்குறுமுனியுமதங்கோட்டாசான், மெய்ஞ்ஞான்றகடாவினுக்கொன்றுழியாமேயிறைநவில்மேதக்கோனும், இஞ்ஞான்றின்னவையென்னத்தன்னிலக்கியக்கோரிலக்கணமென்றெவரும்போற்றச், செஞ்ஞாயிறெனத்தகுநாமனச்சச்சிதானந்ததேசிகேசன். (௪)

அந்தன்றியினிதுணுக்குறையொன்றுநனிநிலைத்தன்னுளோர்ந்து, முந்துசீர்க்குருகைவருமறையோனுந்தான்மொழிநூன்முடிபுமோங்க, அந்நிலைமைவிரித்தாங்குத்தான்மொழிவேதாந்தவிலக்கணக்கன்றாய்ந்து, சிந்தைமகிழ்ச்சியினுதவவ்வுரைநூல்கடலுலகிற்சிறந்ததன்றே. (௫)

அன்னதுணர்ந்தவனடித்தொண்டனச்சிறக்குமத்துவிதச்சைவநெறிஞன்றோர், இன்னதெவருந்தம்போற்பயன்றுய்ப்பான்சிந்தையினோர்ந்திசைந்துகூவி, நன்னாச்சிட்டுவெனவன்னதுமேற்கொண்டினிதுநயந்தளித்தான், பொன்னனையருணைத்துறைசாமிக்குரிசில்கோவளமாபுரத்தன்மாதோ. (௬)

பேறை-தசாவதானம்

செகநாதபிள்ளைபாடிய விருத்தம்.

தன்னையுணர்த்தனுபூதிநிலையதனையின்றுநான்றுதகைசாெ ப், பொன்னகர்செய்தவமெனுநந் சச்சிதானந்தவள்ளல்ட ளோர்க்குப், பன்னருஞ்சீர்வேதாந்தவிலக்கணமென்றியற் கப்பரிவினன்ன, நன்னர்நூற்கோருரையைவகுத்தருளுமே யப்போநாவல்லீரே.

இந்நூலாசிரியர் மாணாக்கர்

அ. முநிசாமிநாயகரவர்களியற்றிய வெண்பா.

வேதாந்தத்துண்மைவிரும்புகின்றபக்குவர்க்கு
வேதாந்தலக்ஷணநூல்மேன்மைபெறப் - போதாந்த
தத்துவனுமீசூர்வாழ்சச்சிதானந்தனிதி
உத்தமமாய்சொன்னானுணர்ந்து.

இந்நூலாசிரியர் மாணாக்கர்

சேலம்-திரு. கோமளேஸ்வரமுதலியாரியற்றிய

நிலமண்டிலயாசிரியப்பா.

மதிமலிமாட மாண்பொலி மாளிகை-துதிமலிகூட கே த்தொகுதி, துன்னுறுஞ்சீர்த்திருத் துருத்திக்கண்ணே - ம றுமிந்திர மாண்பெரும்பீடத், தினிதமர்ந்தியற்று மேகாந் சாம்-புனிதகரபாத்ர போதனுதினை, மரபுதழைத்திட மாநில னிற்-பிரபலதலமெனப் பிறங்கும்பிறைநகையிற், றேன்றிய ரியோன் றெல்லருணசல - பூன்றமுத்தனும் புனிதன்மல சூடியசென்னியன் சொல்லருந்தன்னியன் - வீடியல்நெறி விண்டிடும்வித்தகன், உச்சிதஞான வொண்பொருணிச்ச சச்சிதானந்தந் தானுந்தயாநிதி, தரணியிற்றன்னைத் தானெ காண்பான்-றருணம்வாய்ந்தள தன்மையொவருங், கல்வி யில கற்றுங்கலங்கிப் - பல்வகைத்துறைதக்கணும் பயில்வெ யொருவி, வித்தைதக்குவித்தையாய் விளங்கல்பிரம-வித்தை யன்றி வேறிலையுலகில், என்னுமுடிபின் றுணிவைபவெளிதெ உன்னியுணர்ந்தே யுறுதியெய்திட, இயற்றமிழ்க்குரிய வில ணமுறையின்-இயல்பலதொகுத்தும் இனம்படவகுத்தும், நிரப்பிரயோகத் தொடர்புக்கியைந்த-பாத்திரவுரைமைய ன்படவிரித்தும், இயம்பினனேர்நூ லிம்பருமும்பரும்-வி றுமற்புத வேதாந்தவிலக்கண, மென்னுநாமத்தோ டென்ற ன்புகழ்-மன்னிவாழ்கென வாழ்த்துதிமனமே.

ஸ்ரீமத் சுவங்யானந்தப் பிரமயோகீந்திரர்

மாணாக்கரும்,

அத்வைதவிவேக சமாஜஸ்தாபகருமாகிய

ஸ்ரீமான் மணிமங்கலம்

# திருவேங்கட முதலியாராலியற்றப்பட்டது.



வேதாந்தத் திரும்பொருளி னியலறிந்து சூத்திரமா
    விரித்திட்டானைப்
போதாந்தப் புலவர்தொழும் புகழ்தன்சச்சி தானந்தப்
    போதமேலோன்
வாதார்ந்த மதத்தினர்பால் வாய்மதத்தை யதமாக்கி
    வயங்குமுண்மை
ஏதாந்த மாகவைத்த பூதியுற்றிங் கெவருமிடர்
    தீர்கமாதோ.

திருச்சிற்றம்பலம்.

# வேதாந்தவிலக்கணம்.



காப்பு.

நேரிசைவெண்பா.

தானே பரமாதி யாகத் தடித்ததூஉம்
தானே யலவாத் தனித்ததூஉம் - தானே
இருந்தபடி நிற்பதூஉ மென்றா லுணலென்
பெருங்காப்பி னூற்கிதுவே பேறு.

## கடவுள்வாழ்த்து.

உண்டிலை யாமன் றெனப்படா அ முதலை
அங்ஙன மாத லதுவழுத் தலபிற.

(இதன்பொருள்.) இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், உண்டெனற்கும், இன்றெனற்கும், ஆமெனற்கும், அன்றெனற்கும் உடன்படாது ஒளிர்வதாகிய ஓர் முதற்பரம்பொருளைத்தன்மையாதி மூன்றிடமில்லாவிடத்து எங்ஙனம் வழுத்தல் கூடும். கூடாததால் அஃதெங்ஙனமோ அங்ஙனமாகத் தனது சேட்டையின்றி நிற்றல் வழுத்தலெனப்படும். இதற்குமாறாக நின்று வழுத்தல்அனைத்தும் வழுத்தலன்று பிறவாதலின்.—என்றவாறு.

தனக்கயலான வஸ்துவைக்கருதி இந்நால்வகையானும், இவற்றுள் யாதானு மொன்றானும் நிலையுறுத்தப்புகுந்தால் முரணு யமைவதன்றி என்றுந் தொலையாவழக்காய் முடியும்; முடிவதைப்பற்றி இங்ஙனங்கூறியதென்க. இல்லையென்பது-இலையென்றும், அல்லவென்பது - அலவென்றுந் தொகுத்தல் பெற்றன. அது - எழுவாய், வழுத்து-பயனிலை, பிற-எழுவாய், அல - பயனிலை. சுசாதியாதி விகற்பமிறந்ததை வழுத்தியது இந்நூல் இனிதுமுடியப் பலவாறாக விரிந்துள்ள பற்பல பாஷைகளி

லொன்றாகிய தமிழென்னும் இலக்கியமும், அதனைத் தாய்த
கற்கியைந்த எழுத்துமுதலிய பஞ்சவிலக்கணமும்போல அனே
மதப்பிரவாகபேத முரணுயுள்ள நிச்சயங்களனைத்தும் புத்தி
ற்பத்தாலாயதெனச் சோதனைஞாயம்பொருந்த முகத்தாலஞ்
து நின்று அவற்றைப் பூர்வபட்சமாக்கற்கும், அவர்போற் சொ
ல்லாலல்லது வாச்சியம், இலட்சியமென்னும்அர்த்தங்காரணமா
அன்றோர் திசைகாணுதகறற்கும், அபிமானத்தாலல்லது ய
ர்த்தமாய் நின்று உண்மையை விளக்கற்கும் சர்வமத சோபானமி
மெனல். இதனைமதாபிமான மற்றோர் யாண்டு மேற்றற்கும், அ
ஙனம் உண்மையாக வேற்றுஅனுசந்தானஞ் செய்தோர்க்கு ம
மையிலென்பதின்றி இம்மைக்கண்ணேதானே துக்க நிவிர்த்
யும், தடையற்ற ஆனந்தமுமெய்தற்கும் செய்யுமிக்க வலியு
ளது வேதாந்தமாதலினானும், இதனை ஏற்றற்பாலார் விட
தோடதிருட்டி மிக்கோராதலினானும், இவ்வனம் எவற்றினு
சிறந்த மேலா மனுபூதிநிலை வடிவாயமைந்த ஏகமேவாத்வை
சுயம்பிரகாச சைதன்யத்தைதமாத்திரம் பிரதிபாதிக்கும் ஞா
காண்டத்திற் கூறப்படும் விடயம் பின்னர் ஏகமாக்கற்கு மு
னர் திருக்கு திருசியமெனப்படுவது. இங்ஙனங்கூறப்படுவது
சகசீவபர விகற்பபேதங்களை அகற்றற்காதல் இனிது பொ
ந்தும். திருக்கு திருசியமென்பவற்றிற்குச் சச்சிதானந்த நித்தி
பரிபூரணமெனவும், அநார்த சடதுக்க அநித்திய கண்டமெ
வும் இலக்கணமிருப்பதால் இவ்விரண்டையும் இலக்கியமாக்
இந்நூல் கூறப்புகுதலின் இதனை வேதாந்தவிலக்கணமெனக்க
ரணக்குறியாக மூதுணர்வோர் ஏற்கப் பெயர் தந்ததென்க. இ
வேதாந்த விலக்கியமும், இலக்கணமும், இவற்றை யவ
துக்கூறுந் தமிழிலக்கியமும் இலக்கணமும் விக்கினமின்றினி
வேறக் கடவுள்வாழ்த்துக் கூறியதென்க. இலக்கண மிலக்கிய
தின் அமைதியாதலினானும், இலக்கியங்கண்டதற்கு இலக்கண
மென விதியிருப்பதினானும், வேதாந்தவிலக்கியம் இன்னதென
றறியார் தமது இலக்கணம் எங்ஙனந் தெளிதற்பாலார். அதனை
விளக்குவிப்பான் இந்நூல் கூறப்புகுந்ததென்க.

## குருவணக்கம்.

தனைத்தா னெங்கணு நானென லுன்று
வுயிர்பர மிலையென் றோர்ந்தென் பானுள
நானென வினையதென் றுணர்த்தப் பலநா
னென்று மென்னக் கண்டனை யன்றி
யின்றே பரமிறு வாக முறைப்பெய
ரனைத்துமா நின்றுளன் போற்பிறை யாறெனு
நன்னிலத் துதித்த வருணா சலகுரு
வுய்ந்தன னயலா காதிக் கணமே.

(இ-ள்.) இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின்; யாதிடத்துந் தன்னைத்தானே நானென்றுன்றுத உயிரும் பரமும் இல்லையென்று ஐயந்திரிபறத்தெளிந்து என்னிடத்துமுள்ள நானென்பது இணையதெனப் பிறையாறென்னும் இவ்வியத்தலத்தில் அவதரித்த அருணாசலகுருவென்போன் அனுக்கிரகிக்க, அதனாற் பலவாறாக விகற்பித்துள்ள நானெனல் அனைத்தும் ஒன்றெனவும்முப்பாட்டன், பாட்டன், தந்தை, அண்ணன், தம்பி, மைத்துனன், மருகன், மகன், முதலிய முறைப்பெயரனைத்தும் ஒருவனே பெற்று நின்றாற்போல யானென்பது முதல் ஈசனென்பதுவரைக்கும் என்னைத்தவிரத் தினைத்துணையும் இல்லையெனவும் பிரத்தியட்சமாகக்கண்டு எனதுண்மைவடிவுக் கயலாகப் பரிணமியாமல் இக்கணமே பிழைத்தேன்.—எ-று.

தனையென்பது தொகுத்தல். குருபரன் தனதருளால் என்னை எனக்கு விளக்கச் சமஸ்தமும் நானெனவும், இங்ஙனமாகவே விளங்கியதால் பலநானென்றுமெனவும்; பலவேறு விகற்பித்து வழங்கப்பட்டு நின்றுள்ள உயிர் பரங்களின் நாமங்களனைத்தும் என்னைத்தவிர இல்லையாதலால், எனையன்றி யின்றே பரமிறுவாகவெனவும்; ஒருவனுக்கே தன்குமாரன், மருகன், பேரன், பாட்டன், மாமன், தந்தை முதலியவைகளைப்பற்றித் தனக்குத் தந்தை, மாமன், பாட்டன், பேரன், மருகன், மகன் என வழங்கிவருகின்றதை யுவமைகூறவந்தார்; முறைப்பெயர் அனைத்துமாய் நின்றுளன்போலெனவுங் கூறியவாறு காண்க. கருத்து—ஆசிரியராற்பெற்ற பேறினையென்பது முறைபற்றி வருதலின் முறைப்பெயரென்றும்.

# வேதாந்தவிலக்கணம்.

## பொதுப்பாயிரம்.

பாயிர மென்னன் முகவுரை யாகும்.

(இ-ள்.) பாயிரமெனப்படுவது - பாயிரத்தினிலக்கணங் முன்னுணர்ந்தாலன்றி நூலியற்றலும், அதனைத் தக்கோரோ லுங் கூடாமையின், அதுபற்றி நூன்முகத்துரைப்பது; ஞன் முகவுரையெனப்பட்டதாம்.—எ-று.

எல்லாநூற்குமாதலின் முகவுரையென்றார். (

(அதுதான்.)

பொதுச்சிறப் பென்னப் பெயரிரு பாற்றே.

(இ-ள்.) அப்பாயிரமானது-பொதுப்பாயிரமெனவும், சி புப்பாயிரமெனவும் பெயர்பெற்று இருபாகுபாடுடையதாய் கும்.—எ-று.

அதுதான் என்பது கூன்பற்றிவந்தது. (

உலகுயிர் நிலையு முணர்த்துந் திறனுங்
கேட்குந் திறனு மிவற்றெதிர் திறனும்
நிற்குந் திறனு மைந்தெனல் பொதுவே.

(இ-ள்.) பொதுப்பாயிரமென்பது - உலகினிலையும், உயி னிலையும், இவற்றையயந்திரிபற வுணர்த்துந்திறனும், கே டுக்கொள்ளுந்திறனும், இவற்றிற்குமாறாகவுணர்த்தல் கேட்ட திறனும், இவ்விருதிறத்தினரும் நிற்கும் நிலைத்திறனும் ஆகி இவ்வைந்து முணர்த்தற்பாலது.—எ-று.

இனிவகையாக்கலாலிது தொகையெனவுணர்க. (

உலகுயிர் நிலையை யுணர்த்துங் காலைக்
கிழமை யிருவகைத் தாக வியலும்
என்ப ரிவ்விரு நிலைகடந் தோரே.

(இ-ள்.) உலகினிலையினையதெனவும், உயிர்நிலையினையதெ வும் உணர்த்துமிடத்து, அவை இருவகைக்கிழமையாக நடக் மெனக் கூறுவர்; இவ்விருவகை நிலையினையுங்கடந்த சத்து கள்.—எ-று.

(

பகுதி விகுதி யிடைநிலை தழீஇக்
கிழமைதான் றெனவுங் கிளத்தினர் புலவர்.

(இ-ள்.) கிழமையொடு பகுதி விகுதி இடைநிலையைத்தழுவி உலகுயிர் நடப்பதால், நான்கெனவுங் கூறுகிற்பர் மெய்யுணர்ச்சியினையுடையோர்.—எ-று.

இந்நான்கங்கத்தது உலகுயிர்நிலை இங்ஙனங் கூறுவாருமுளர். இதுவும் பொருள்பற்றியேயென்க. (௬)

கிழமை யென்ன துரிமைப் பொருளது.

(இ-ள்.) கிழமையென்பது சுதந்தரப்பொருளாய்நிற்பது. எ-று.

தன்னொடு பிறிதெனல் கிழமை யிருவகை.

(இ-ள்.) மேல்கிழமை யிருவகையென்றார், அது தற்கிழமையும், பிறிதின் கிழமையுமெனப்படுவதாம்.—எ-று.

தற்கிழமையைத் தன்னேடென்றார். (எ)

தற்கிழ மைச்சினை குணந்தொழி லென்ப.

(இ-ள்.) தற்கிழமையென்பது - சினைகுணந்தொழிலாக நிற்பதென்றறிஞர் கூறுவர்.—எ-று. (அ)

பிறிதின் கிழமை பொருளிடங் காலம்.

(இ-ள்.) பிறிதின்கிழமை என்பது பொருளிடங்காலமாய் நிற்பது.—எ-று. (௯)

பகுதி யெனலுபக் கிரம தாகும்.

(இ-ள்.) பகுதியென்பது உபக்கிரமோப சங்காரமென்பவற்றில் உபக்கிரம நிலையாய் நிற்பது. (௧௦)

விகுதி யுபசங் கார மென்னல்.

(இ-ள்.) விகுதியென்பது உபசங்காரமென்னும் நிலையினதாம்.—எ-று. (௧௧)

இடைநிலை யென்ன லபேத மாய
காரண காரிய மாகியு மாகாத்
திறத்த தென்ப தெளிந்திசி னோரே.

(இ-ள்.) இடைநிலையென்பது அபேத காரணகாரியமாகியும், அங்ஙனம் ஆகாததிறத்ததாகியும் இருக்கும் நிலையதெனத் தெளிந்த மகான்கள் கூறுவர்.—எ-று.

இவற்றின் விவரஞ் சற்றுத்தெரிப்பாம். அதாவது உலகை உயிரையுந் தனித்தனி விசாரிக்குமிடத்துப் பொருள், இட காலம், சினை, குணம், தொழிலாகவும்; பருதி, விருதி, இ நிலையாகவும் நிற்குமெனக்கண்டாம். இஃது அறிருக்குமவு வுடையார்க்கியையும். (க

இங்ஙனந் தெளியி னுலகுயி ரொன்றே
அன்றே யெனுமயக் ககலுந் தானே.

(இ-ள்.) இவ்வாறு ஐயந்திரிபகலத்தெளியின், உலகுமுயி ருமொன்றே, அன்றேயென்னு மயக்கம் அக்கணத்தேயகலு

சிந்தை யுணர்தல் செகமது தோற்றல்
உண்மை யாக வன்றெனக் கிளத்தூ .

(இ-ள்.) சித்தத்தின் தருமம் சகத்தையறிதலும், சகத்தி தருமம் அறிவுக்குக்காணப்படலும் உண்மையாகவன்று; ஆே பமேயெனச் சத்துக்கள் சொல்லுவர்.—எ-று. (க

சிந்தையெவ் வாறே செகம தவ்வணம்
செகமதெவ் வாறே சிந்தை யவ்வணம்
ஆக வெவர்க்குங் காண்டலி னென்றுந்
தொலையா மயக்காத் தொடர்தலி னறிஞர்
பொருளைப் பொருளாத் துணிந்தனமை தனே.

(இ-ள்.) சித்தமெவ்வண்ணமோ அவ்வண்ணஞ் சகத்து சகத்து எவ்வண்ணமோ அவ்வண்ணஞ் சித்தமுமாக எவர் குங் காணப்படுதலினாலும், இஃது என்றுந் தொலையா மயக்கா தொடர்ந்துவருதலினாலும், இங்ஙனமாதலை ஊன்றியுணர்ந் அறிவிற்சிறந்தோர் அங்ஙனமாதலைவிட்டுப் பொருளைப்பொ ளாக ஐயந்திரிபறத் துணிந்தமைநிபெற்றனர்.—எ-று.

சித்தம் எவ்வெவ்வாறு பிரதிபலித்ததோ அவ்வவ்வாறு சக தாதலாகக்காண்டலும், இவ்வளவு அறியாவிடத்துச் சகத்தெ பாகவே வெவ்வேறு விகற்பங்களாகத் தோற்றுவதாகக்கருதி அவ்வண்ணஞ் சித்தமாதலாகக் காண்டலும் எவர்க்கும் அநுப வமாதலினாலும், இஃதாற்றுணராவிடத்துத் தொலையா மயக்க முடிதலினாலும், இதனை விசாரித்துத் தெளிந்தோரோ கலக் யில் சிந்தையாய் நிற்பரெனப் பொருள்கொள்க. (கரு

இவ்வா றெல்லாந் தெளியாக் கடையுப
சாந்த மாக விலையெனு மறையே.

(இ-ள்.) இவ்வாறு நின்றுள்ள மயக்கங்களையெல்லாந் தெளியாவிடத்து உபசாந்த நிலையதாதல் எங்ஙனம் வாய்க்குமென நான்மறைகளுரு முறையிடும்.—எ-று.

சிரவணாதிகளை ஐயந்திரிபற வேண்டாவிடத்து எங்ஙனஞ் சித்தப்பிராந்தி சகற்பிராந்தியின்றி நிலையுறுவதொன்பது. (கசு)

உணர்ந்தூந் திறனே யோதுங் காலை
யையந் திரிபி னகல நின்று
கொள்ளுமா கொள்ள வுணர்த்தல் வேண்டும்
அன்றேற் பிதற்ற லாகு மென்ப.

(இ-ள்.) இங்ஙனம் நின்றுள்ள மேலாய அருத்தங்களைப் பிறர்க்குப் புலப்படுமாறுணர்த்துந் திறனைச் சொல்லுமிடத்து, தான் ஐயந்திரிபினின்றகல நின்று பிறர்கொள்ளுந் திறனெவ்வளவோ அவ்வளவு கொள்ளப் போதிக்கவேண்டும். அங்ஙனம் அளவறிந்துணர்த்தாது மிகைபடக்கூறின், அவனுக்குப் பயன்படாமையாற் பிதற்றலாகவே முடியுமெனக்கூறுவர்.—எ-று.

எனவே சத்தியறிந்து கூறவேண்டுமெனப்பெற்றாம். இது உணர்த்தும் விதம். (கஎ)

கேட்குந் திறனைக் கிளக்குங் காலை
யுணர்த்தற் கிடையூ றெய்தா தொழுகி
நெஞ்சந் திகையாக் கேட்குமா கேட்டு
மனனந் தெளிதற் கையந் தீரீஇத்
தன்னிலை தன்னிற் றுறை குவதே.

(இ-ள்.) ஆசிரியனிடத்திற் கேட்டுக்கொள்ளுந் திறனைக்குறித்துச் சொல்லுங்கால், நன்குணர்த்தற் கிடையூறு சற்றும் வராது அவன் குறிப்பினொழுகி, அங்ஙனம் ஒழுகலால் மனமுவந்துணர்த்துவதைச் சற்றும் நெஞ்சந்திகையாது நின்று, கேட்குமுறைப்படி கேட்டுச் சிந்தித்துத் தெளிதற்கையந்தவாறு நின்று, தானுநின்ற நிலை யாதோ அதனையறிந்து அஃது எவ்வண்ணமோ அவ்வண்ணமாகத் தானேதானுருவதாம்.—எ-று.

இது கேட்டுக்கொள்ளும் விதம். (கஅ)

இவற்றெதிர் திறன தியம்புங் காலை
யுணர்த்துந் திறனு முணருந் திறனு
மில்லாக் கடைப்பய னவல மென்ப.

(இ-ள்.) இங்ஙனங் கூறிவந்த இவ்வுடன்பாடெட்கு எதி றையாய திறனைச்சொல்லுங்கால், போதிக்குந் திறனும் அதை கேட்டுணரும் திறனும், இல்லாதவிடத்துப் பயனே விவா மென்றே அறிஞர் கூறுவர்.—எ-று. (க

ஐயந் திரிபனு காவண நின்று
சொல்வோன் கேட்போ னிற்குந் திறனது
கற்பனை யனைத்துந் தானே யன்று
யிலகக் கிடக்கை யிறுதி யென்ப.

(இ-ள்.) சற்குருவுஞ் சற்புத்திரனும் இனிச் சந்தேக வி துஞ் சற்றும் வராதவகை நிற்குமாறு நின்று தெளியுந் திற வது, தேகாதி சமஸ்தமுங் கற்பனைவடிவமெனக்காணுதவிடத் அவையனைத்துந் தானாகியும், கண்டவிடத்து அல்லவாகியும் இ க்கிடத்தல் முடிந்த நிலையெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று

கற்பிதமாவதும் அல்லவாவதுந் தானாதலால் இவ்விருபகுதி ன் தானெனல் யாது? ஒன்றுமன்றே. இங்ஙனமிருக்க, ஒன்றெனி பலவெனவும், பலவெனில் ஒன்றெனவும் தொலையாவழக்கெ துதற்கு ஏது வென்னைகொலோ, இத்துணியறியார்போலு தானெனல் பல்வாறு விகற்பித்துள்ள விடயமாய் நின்றபோ விடயமாயும், சகல கற்பிதமுங் கடந்து ஒன்றுமொளிருஞ் சு பிரகாசமாய் நின்றபோது அதன்மயமாயும் நிற்றல்; இனி இவ் ருவகையுள் யாதென்பம்; கூடாதாதலின் ஒன்றெனலும் இரண் டெனலுஞ் சொல்வாதமேயன்றி அர்த்தமேயன்று. அர்த்தவாதம தன்னைத் தானாகக்காண்டல். ஆதலினிறுதியெனப்பட்டது. உ

பொதுப்பாயிரமுற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.

# வேதாந்தவிலக்கணம்.

முதலாவது

## முறையியல்.

### வஸ்துவணக்கம்.

அறிவறி யாமை யாகியு மாகா
விறையுள வாறென் னகமிருந் திடுக.

(இ-ள்.) ஞானாகாரமாயும், அஞ்ஞானாகாரமாயும், ஆகாமலும் நின்றுள்ள பகவானிலே யெங்ஙனமாயதோ, அங்ஙனமாக எனது இதயமிருந்திடுக.—எ-று.

இஃது அபேதவழுத்து. எனவே இணைபாலிடச் சங்கற்ப விழப்பே வழுத்தெனக்காட்ட நின்றதென்க. இருவகைச்சமாதி முடிந்தோரே இதனையறிந்தோராவர்.

### நூல்.

ஒன்று மன்று முளதா மிலதாய்த்
தானு மன்றாய்த் தனித்த பொருளை
அண்மையுஞ் சேய்மையு மறவுளத் தமைத்திங்
கண்ண திலக்கிய மாக்கிய தற்குறித்
தாரு மிலக்கண மைந்து மதன்றிரி
பிலக்கிய விலக்கண மைந்துஞ் சூத்திர
முகமாத் தெரிக்கச் சான்றோர் போலப்
புகுந்தன னடியேன் புதுமையென் னிறுவே.

(இ-ள்) ஏகமாகியும், அல்லாததாகியும், உள்ளதாகியும், இல்லாததாகியும், தானாகியும், அல்லாததாகியும், இவற்றிற்கெல்லா

முடன்பாடு எதிர்மறையாக நிற்றலின், அப்பொருளைத் தனி
பொருளெனத் துணிந்தாம்; இங்ஙனந் துணிந்த பொரு
சமீபமுந் தூரமுமென்னலின்றி யுள்ளத்தின்கண்ணிருந்தி
விடந் தன்னிலையதாயபொருளை இலக்கியமாக்கி, அதற்கி
அமைந்துள்ள சத்துமுதலிய சுத்தவிலக்கண மைந்தையும்,
பரம்பொருளின் திரிபாகிய மாயாசத்தியென்னும் இலக்கி
னமைதியாய் நின்றுள்ள அசத்துமுதலிய அசுத்தவிலக்க
ஐந்தையுஞ் சூத்திரங் காரணமாகத்தெரிவிக்க நன்குணர்ந்த
துக்கள்போல அடியேன் கூறப்புகுந்தனன்; இம்மடமை
ன்ன புதுமை.—எ-று.

அனைத்தும் வேறன்றாதலின் ஒன்றுயெனவும், அனை
னன்மையின் அன்றுயெனவும், ஆணவமிறந்த அவசரத்தி
லின் உளதாயெனவும், இறவாத அவசரத்திலாதலின் இ
யெனவும், அந்தர்முக நோக்கிறுதலின் தாறுயெனவும், ப
முகத்திறுதலின் அன்றுயெனவும், இங்ஙனமாக எல்லாம்
ன்படாதாதலின் தனித்த பொருளெனவுங் கூறியவாறுகாண

அதன்றிரி பெனலே யறிய வுணர்த்துதும்.

(இ-ள்.) முன்னர் முதற்பரம்பொருளின் திரிபே மாயை
ன்றும்; அஃதினையதெனை யாவருமறிய நன்குணர்த்துதும். (

பெயர்வினை முதலோ டுயிர்மெய் விண்போலன்
முதற்பரம் பொருளே மாயை யென்னல்.

(இ-ள்.) முதற்பரம்பொருளே மாயையெனப்படுவது-பெ
ரும் எழுவாயும்போலவும், உயிர்மெய்போலவும், ஆகாயம்போ
லவுமிருக்கும். உயிர்மெய் என்றது-நிர்விகாரமாய் நின்ற மெ
யெழுத்து உயிரொழுத்தின் புணர்ப்பால் கோடு, கால், மே
விலங்கு, கீழ்விலங்கு முதலியன பெற்று விகாரித்ததனற்கு
விண்ணென்றது-நிர்விகாரமாய் நின்ற சுத்த வாகாயம் ஏனை
நான்குபூதங்களாகப் பரிணமித்ததனற்குமென்க. (

(இதனை) அறிவறி யாமை யகலா ரெவரும்
ஆதலிற் றத்தமிற் காண்ட லாகும்
கடபட முகந்தா லென்மனார் புலவர்.

(இ-ள்.) பரம் மாயை என்பவற்றினிலையை இன்னும் விளங்க அறியவேண்டின், அறிவறியாமையினின்றகன்றார் எவரும் எங்கணும் இலராதலின், கடபடமென்னும் உதாரணமுகத்தால் எவருந் தத்தமிடத்திற் காணக்கூடுமென்று அறிஞர் கூறுவர்.

அறிவறியாமை யென்னல்-அறிவே அறியாமையாய் நிற்றலை, பஞ்சபூதாம்ச சையோகத்தையன்றி ஓர் முதலாகவுஞ் சுயம்பாகவும் உடலிருப்பதாகக் காண்டல் அறிவேனும் பொருளைப் பொருளென்றறியாததால் அறியாமையெனப்படும். உடலைப் பஞ்சபூதாம்ச சையோகமாக்காண்டல் அறிவு. ஆதலின் அறிவே அறியாமையெனப்பட்டது. யாதுபோலெனின், மண்ணையன்றிக் கடமும், நூலையன்றிப் படமுமில்லாதவாறுபோலெங்க. எந்த வறிவு சுயம்பல்லாத வுடலைச் சுயம்பென்றுணரப்போந்ததோ அந்த அறிவே சுயம்பன்றெனவுணர்தலின், அறிவே யறியாமையென்றாம். பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்தலும், பொருளைப் பொருளென்றுணர்தலும் அறிவொன்றே. ஆயினும் அன்மை உண்மையாகுமா? உண்மை அன்மையாகுமா? ஆகாததால் இரண்டெனல் வேண்டும். உணர்தல் இருவகையும் புடைபெயர்ச்சியாதலின் இவை வினைமுதலாகா. அறிவையன்றி யிவ்விருபுடை பெயர்ச்சியுமெழற் கிடமின்றே. ஆதலின் இரண்டெனல் பொருந்தாதென்க. அன்மையை உண்மையெனக்கோடல் பிரவிர்த்தியெனவும், அன்மையை அன்மையெனக்கோடல் நிவிர்த்தியெனவும் பெயர்பெறும். பெருகுமாதலிற் சுருக்கியுரைத்தாம். (ச)

அறிவறி யாமை யனேக வடுக்கே
மேலுங் கீழு மென்மனார் புலவர்.

(இ-ள்.) ஊர்த்துவமுகமாகவும், அதோமுகமாகவும் நின்றுள்ள அறிவறியாமை யடுக்குப்பேதங்கள் எண்ணலளவையிற் புகாவெனச் சாத்துக்கள் கூறுவர்.—எ-று.

தேகஞ் சுயம்பெனவுணர்தல் அறிவு, அஸ்தி மாமிசாதியன்றி யின்றென வுணர்ந்ததும் அவ்வறிவே; அறிவால் ஒன்றாயினுமுணர்தலாற் பேதமிருப்பதுபற்றிப் புடைபெயர்ச்சியையே வினைமுதலாகக்கொண்டு வழங்குதலால், அறிவுக்கே அறிவறி

யாமையெனக் காரணக்குறி வந்ததென்க. தேகங்கற்பி
க்கண்ட இவ்வவசர அறிவுக்குத் தேகம் எதார்த்தமெ
ட அவ்வவசரவறிவு அறியாமையெனவும், அவ்வறிவுக்
வறிவு அறிவெனவும் வருமாறுபோன்று அஸ்தி மாயிரா
உண்மையெனின், இவை ஐம்பூதமன்றிக் கண்டிலம். எ
டத்தில் இவ்வவசர அறிவுக்கு அவ்வவசர அறிவு அறி
யாயிற்று. இங்ஙனம் இருமுகத்தும் அளவுகடந்து சே
இங்ஙனங் கூறினொன்க. அன்றெனமுடிவது அறிய
ஆமெனமுடிவது அறிவு. எனவே பூர்வபட்சம் அறியாமை
தாந்தபட்சம் அறிவு என்றாயிற்று. ஆகவே ஆமென்பது
லாம் அன்றெனச்சேறலால் முடிவின்று. இங்ஙனம் மு
ருதலே ஆமெனலன்றி வேறின்மையின், மோனமென்ப
னவரம்பென்றார்; அனுபூதி முடிபு இஃதென விளங்கிற்று.
ங்கவே ஏனைய மோனமெல்லாம் பூர்வபட்சமாதற்கு இட
றுமாறு காட்டிற்றென்க. இங்கிலைகளை எளிதிலெட்டாது.

முன்பி னிலக்கண மைந்து மைந்துஞ்
சுத்த மசுத்த மென்மனர் புலவர்.

(இ-ள்.) முன்னதாகக் கூறப்படுஞ் சத்தாதி ஐந்தும், பி
தாகக்கூறப்படும் அசத்தாதி ஐந்துமாகிய இலக்கணங்களை
தமெனவும்,அசுத்தமெனவும் முறையே அறிஞர்கூறுவர்—
பிரமம் அதிஷ்டானமாதலிற் சுத்தமெனவும், மாயை ஆ
பமாதலின் அசுத்தமெனவும் கூறினமை காண்க.

சுத்தமென் பானே னசுத்தம் பற்றி.

(இ-ள்.) பிரமத்தைச் சுத்தமெனக் கூறுவது எவற்றி
மாயை என்பது அசுத்தமாய் இருப்பதுபற்றி.—எ-று.

மும்மலம், முக்குற்றம், விவர்த்தமாதிகளாய் நிற்கும் வ
மே மாயையெனப்படுதலின் அசுத்தமெனவும், இங்ஙனம்
லாம் ஆகாது, என்றும் ஒருதகைத்தாய் விளங்கும் வியாபக
க்கமே பிரமமெனப்படுதலிற் சுத்தமெனவும் வந்ததென்க.

சுத்த மிருவகை யசுத்த மிருவகை
மருளு மிருவகை தெருளு மிருவகை
யாகக் கண்ட லெவர்க்கு மென்ப.

(இ-ள்.) யாவருந்தாங் களங்கரகிதமாயின், பிரமமும் அங்ஙனங் காணப்படும். இதுபோலவே தாம் அசுத்தம், மருள், தெருளாய் நிற்கின் அங்ஙனமங்ஙனமாகப் பிரமமுங் காணப்படும்; ஆதலின் ஒவ்வொன்றும் இரண்டிரண்டாம் எனப்பட்டது. இங்ஙனமாதல் யாவர்க்குமெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

தான் எங்ஙனமெங்ஙனமோ அங்ஙனமங்ஙனம் பிரமங் காணப்படுமென்பது கருத்து. எனவே தமது குற்றம், தமது சுத்தம், தமது மருள், தமது தெருள், அயல்போல் எதிரில் காணப்படுவதேயன்றி அங்குளதாக மயங்கற்க வென்பது பெற்றாம். தான் இங்ஙனமெல்லாம் ஆகாது தன்னைக்காக்க. (அ)

அபேத காரண காரிய மாகவும்
பிம்பப் பிரதி பிம்ப மாகவும்
அவிகார விகார மாகவுங் குணகுணி
யாகவு மம்சாம்ச மாகவு மேயிம்
முறையே சென்று முடியு மென்ப.

(இ-ள்.) பிரமமும் மாயையும் அபேதமாகக் காரணகாரியமாகவும், பிம்பப் பிரதிபிம்பமாகவும், அவிகார விகாரமாகவும், குணகுணியாகவும், அம்சாம்சமாகவும் இம்முறையே இடையில் வழுவாது சென்று முடியுமென்று அறிஞர் கூறுவர்.—எ-று.

மட்கடம், நூற்படம் என்பன காரணகாரியம். வானசந்திரன் சலசந்திரன்போல்வன பிம்பப்பிரதிபிம்பம். பால்தயிர், அரிசிநொய் இவைபோல்வன அவிகாரவிகாரம். கருங்குதிரை, செந்தாமரை இவைபோல்வன குணகுணி. நீர்க்குமிழி, நீர்த்தரங்கம் இவைபோல்வன அம்சாம்சம். பிரமத்திற்கும் மாயைக்கும் அபேதஞ் சாதித்தலிற் பேதவாதங் கூறாதொழிந்தனம். சகவிபரம் மாயையன்றி எங்ஙனமில்லையோ அதுபோல இம்மாயையும், பிரமத்தையன்றி இன்றென்பது நியாயஞ் சோதனைக்கியைதலின் அபேதமே எமது கருத்து. பேதவாதங் கூறப்படுவதெல்லாஞ் சோபாதிகத்திற்கேயன்றி நிருபாதிகத்திற்கன்று. ஆதலின் விடுத்தாம். இது கன்மகாண்டி பத்தி காண்டிகட்கே உரியது. இந்நூல் ஞானகாண்டிக்கே உரியது. (கூ)

சுத்த மூர்த்த மசுத்த மதோமுகம்
வழியிது வன்றி வழிவே றிலையே.

(இ-ள்.) சுத்தம் அந்தர்முகத்திற்கும், அசுத்தம் பகிர்முக
ற்கும் ஏற்ற மார்க்கமாம். இங்ஙனமன்றிச் சுத்தத்திற்கும் அ
தத்திற்கும் மார்க்கம் வேறில்லையாம் —எ-று.

அந்தர்முகம் துக்கநிவிர்த்தி தடையற்ற ஆனந்தத்திற்
இயைதலின் அதனைச் சுத்தமெனவும், பகிர்முகம் அல்லலுக்
இடமாய் நிற்றலின் அதனை அசுத்தமெனவும் பொருந்து
ன்க. 'அல்லலறுத்து ஆனந்தமாக்கியதே' என்பதனுற்காண்க

ஊர்த்த முத்தி யதோமுகம் பந்தம்.

(இ-ள்.) அந்தர்முகமென்பது முத்தியும், பகிர்முகமென்
து பந்தமுமெனப்படும்.—எ-று.

ஊர்த்தம் மேல், அதோமுகம் கீழ். எனவே அதோமுக
தலைகீழாதல், ஊர்த்தமுகம் நிதானமாதல் எனப்பட்டன. (கக

முத்தி யென்ன லறிவறி யாமை
அகன்ற நிலையென லப்பாற் பந்த
மென்ன லவையக லாநிலை யென்னல்.

(இ-ள்.) முத்தியென்பது ஞாதுருஞானத் தொடர்பகன்ற
நிலையெனப்படுவது. பின்னர் பந்தமென்பது அந்த ஞாதுருஞா
னத் தொடர்பகலாத நிலையெனப்படுவது.—எ-று.

அவை அகறல் முத்தி, அகலாமை பந்தம். (கஉ)

அறிவறி யாமை யாழங் காண்ட
லெத்திறத் தோர்க்கு மிகவரி தெளிதாச்
செப்புவர் காரண காரிய மறியார்.

(இ-ள்.) அறியாமையின் ஆழத்தைக்காணுதல் மகத்தர் கூறும்
தத்தமக்குரிய தேவதைகளாலுஞ் சற்றுங்கூடாது; ஆயின் எவ
ரும் எளிதாகக்கூறுவது என்னையோ, அவற்றின் காரணகாரி
யம் இனையது என்றறியார் ஆதலின்.—எ-று.

அவற்றின் காரிய பேதவடுக்குகளைக் காணாதவற்றுள் தமக்குப் புல்லறிவால் எட்டின இரண்டொன்றையுங் காரியமென அறியாது காரணமெனின் ஆகுமா, ஆகாதே; ஆதலின் மிக அரிதென்றும். ஏனெனின், காரியம் காரணம்போற் காண்டலினென்க. (கக)

அணுமகத் தெங்கே யாழம தறியின்
ஆழமோ தனையலா தில்லை யென்ப.

(இ-ள்.) அறிவறியாமையின் ஆழத்தை மேல்கீழ் ஒருதகையதாக ஐயமறக்காணின், அணுமகத்தென்னுங் கற்பிதம் எங்ஙனம் உளவாம். ஆயின் ஆழமெனப்படுவதோ எங்குந் தன்னைத்தவிர இல்லவேயில்லையெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

யாதும் விசாரிக்குங்கால் தன்னைத்தவிர அணுமகத்தாதற்கிடமின்று. அவற்றை அயலாகக்காணின் எங்ஙனம் முடிவுபெறும்; பெறாதவிடத்து உபசாந்தியின்றும். (கஉ)

பூர்வசித் தாந்த வடுக்கு நெறியால்
வலித்திழுத் துப்போய் மாறா வாழந்
தெரிக்கவல் லவனாற் றேர்தலே ஞானம்.

(இ-ள்.) ஒன்றேயன்றிப் பல்வடுக்காகச்சேறலின் அந்நெறித்தாய்ப் பூர்வபட்சசித்தாந்தம் காரணமாகத் தன்னை விடாது கருணையால் வலித்திழுத்து இடையில் தங்காது முடிவிற்சென்று, என்றும் ஒருதகைத்தாய் நின்றுள்ள தானாகின்ற ஆழத்தைத் தெரிவிக்கவல்லவன் யாவனோ அவனால் தன்னைத்தானாகத் தெளிந்து கொள்ளுதலே ஞானமெனப்படும்.—எ-று.

இங்ஙனம் அல்லாதவையெல்லாம் போலிஞானமெனக் குறித்தற்கென்க. (கரு)

ஞான மெனலை நவின்றிடுங் காலை
யயலை யறிவ தன்றெனமொழிப
அபர ஞான மாதலி னானே.

(இ-ள்.) ஞானமெனப்படுவது யாதோவென ஐயமெழாவண்ணம் அதனைச் சொல்லுமிடத்துந் தனக்கயலாயவற்றை அறி

யுந்திறத்தது திரிகால ஞானமேனும் அஃது அன்றெனச் சத
கள் கூறுவர்; அஃது அபரஞானமாதலின்.—எ-று.

தன்னைத்தானுணருந் திறத்தது அன்றாதலினென்க. (

எப்பொருள் யாதோ ரியல்பிற் றாயினு
மப்பொரு ளுண்மை யறிவது ஞானம்.

(இ-ள்.) எந்தெந்தப்பொருளின் உண்மைவடிவம் யாதுயா
னக் களைந்துசென்று காரணகாரிய வகைகள் இறந்தது யாதே
அதனைக்கண்டு அதுவாய்நிற்பது ஞானமெனத்தக்கதாம். எ-

இதுவுந் தன்னில் முடியுமென்க, எந்த அறிவு விசாரிக்
புக்கதோ, அதுவாக அனைத்து முடிதல்பற்றி. (க

உண்மையல்லவற்றை யுண்மையென்றோர்வது
உண்மையை யுண்மையா யோர்வது மறிவே.

(இ-ள்.) கற்பிதத்தை மெய்யென்றுணர்வதும், மெய்யை மெ
ய்யென்றுணர்வதும் அறிவேயாம்.—எ-று.

தானல்லதைத் தானென்றுணர்வது உடலே; தன்னைத்தா
யுணர்வதறிவை. உண்மையோவரிது, கற்பனையெளிது. (க

உணர்வ தெவ்வணங் காண்ட லியல்பே
என்று மெங்கணு மென்றிசி னோரே.

(இ-ள்.) அறியும்வண்ணம் எவ்வெவ்வண்ணமோ, அவ்வ
வண்ணம் எதிராகக்காண்டல் எங்கும் எக்காலத்தும் இய
பேயாம்.—எ-று.

மலையாகக்காணில் மலையாகவும், கற்களின் சையோகப்
பொருளெனக்காணிற் சையோகப்பொருளாகவுங் காண்டல்
தானேயாதலின் இங்ஙனங் கூறியதென்க. எனவே உண்மை
யாகவும் அன்மையாகவுந் தோற்றலும் உணர்தலும், இவ்விருவ
கையாகவுணரும் புடைபெயர்ச்சியும் இவற்றிற்கு வினைமுத
லாயுள்ள தானென்பதன்றி இன்றெனப்பெறும். பெறவே
தானுளதாயின் இவ்விருபுடை பெயர்ச்சியும், இப்புடைபெயர்
ச்சியுளதாயின் இவ்விருவகைத்தோற்றமும் விளையுமெனக் காட்
டிற்றென்க.

(கக)

இங்ஙனம் வேண்டா தொருபொரு ளுரைக்கி
னிங்ஙன மியையா திருக்கக் கண்டிலம்.

(இ-ள்.) இவ்வாறு கூறிவந்த நிலைகளை வேண்டாது ஒருபொருளிருக்கத் தெரிவிப்பையாயின், அதுவும் இந்நிலைகட்கியையயாதிருக்க எங்குங்கண்டிலம்.—எ-று.

கருத்து—இங்ஙனங் கூறிவந்த நிலைகட்கியைந்தது யாதும் மாறுதென்பது. (உ0)

அல்ல வென்றிங் கெதிர்மறுத் துரைக்கி
னவரை யகல நாண மில்லை.

(இ-ள்.) ஒன்றுந் தோன்றாததால் தெளிந்தாற்போல் இவையாவுஞ் சரியல்லவென்று மூடத்தால் ஒருவர் மறுத்துரைப்பாராயின், அவரை விட்டகலல் அவருக்கிதுபோல் நாணம் ஒன்றும் இல்லை.—எ-று.

கருத்து—நாணந் தோன்றுமாறு அகலவேண்டுமென்பது. ()

உரைப்பார் மிசைத்தே யுறுபிழை யனைத்தும்
உணராக் குற்றத் தென்மனார் புலவர்.

(இ-ள்.) பொருத்தமில்லா விடத்து எய்தும் பிழையனைத்தும், அங்ஙனம் உரைப்பார்மேற்றே, தாந்தெளியாக் குற்றத்தாலென்று அறிஞர் சொல்லுவர்.—எ-று.

சச்சிதானந்தமாகவேனும்,அநர்தசடதுக்கமாகவேனும் நாம் சொல்லும் இலக்கணம் இலக்கியம் இயையாவிடத்து என்பயனென்பார் இங்ஙனங் கூறியதென்க. கருத்து—பொருத்தம் வேண்டுமென்பது. (உஉ)

பொய்யை மெய்யாக் கொள்வது போலும்
மெய்யை மெய்யாக் கொளலெனும் பாவம்.

(இ-ள்.) தனக்கெனச் சுயம்பு ஒன்றிலாது மெய்போல் தோற்றும் உலகைச் சத்தியப்பொருளென்று ஏற்பதற்கொக்கும், இங்ஙனமாய உலகிற்கு நிமித்தகாரணனுளன் இவனே மெய்யெனக் கொள்வோம் என்னும் பாவனை.—எ-று.

காரியங்கண்டு காரணம் உண்டெனல் அனுமானம். ந மெய்யே. வெண்மாசு புகைபோல் மலையில் எழுந்தாற் பர்வ அக்கினியுடைத்து என்னலாமா? இஃதென்ன விவேகம். கா ட்டை வெள்ளாடெனல்போலும்.

(உ

பொய்மெய் மெய்பொய் யாகத் தோற்று
முணர்தலு மியல்பென் றெண்ணினு மிரண்டே
ஒன்றுபட லின்றே லுய்வ தெங்ஙனம்.

(இ-ள்.) பொய் மெய்யாகவும், மெய் பொய்யாகவுந் தோற் வதும், அதனை அங்ஙனமங்ஙனமாக உணர்தலும், போக்கற் வலியின்றி இவை சுபாவமென்று எண்ணினும் எண்ணவிட னும் இரண்டு பாகுபாடே. இஃது என்றும் ஒன்றுபடுவதின்று இன்றேற் பவத்தொடர்பறுவது எங்ஙனம். இஃதும் இன்றே என்றும் ஒருதன்மைத்தாய் நின்றுய்வது எங்ஙனம்.—எ-று.

எவ்வுயிர்க்கும் பிறவிதோறுந் தேகந் தேகியாகவும், தேகி தே கமாகவுந் தோற்றலும், இதனை இயல்பென்றுணர்தலும் இயல் பாயின், இரண்டறநின்று உய்வது எங்ஙனம்? இன்றென்பதே கருத்து.

(உ௪)

கொள்ளினு மெய்மெய் பொய்பொய் யாகும்.

(இ-ள்.) அங்ஙனம் இயல்பெனக்கொள்ளினும் மெய் மெய் யே, பொய் பொய்யே; இதற்கு என்றும் இடையூறின்று.—எ-று.

கொள்ளினும் என்ற உம்மையாற் கொள்ளாவிடினுமெனப் பெற்றாம்.

(உ௫)

மெய்பொய் யிரண்டெனிற் சத்திரண் டாகும்
மெய்பொய் யொன்றெனி னசத்த தாகும்.

(இ-ள்.) தேகி தேகம் இரண்டெனல் இரண்டுஞ் சத்தாம். ஒன் றெனில் தேகத்தைப்போல் தேகியும் பொய்யாவதால் அசத் தாம்.—எ-று.

வஸ்து இரண்டேல், தேகமுந் தேகியைப்போல் மெய்ப் பொருளாகக் கணக்கில் ஒன்றென வருதலாற் கூடாது. ஒன் றெனின், தேகியுந் தேகம்போலத்தானே பொய்ப்பொருளாத லாற் கூடாது.

(உ௬)

மெய்யைப் பொய்யெனின் மெய்யன்றி யெங்கே
மெய்யேயொய்யெனின்பொய்யான்மறைப்பென்
பொய்யே மெய்யெனின் மெய்யே தேறலென்
பொய்யிலை யென்னிற் றோற்றக் கணக்கென்
பொய்யாப் போவதென் சோதனை முடிவில்.

(இ-ள்.) பழுதையைப் பாம்பென்றாற்போல மெய்யைப் பொய்யெனின், பழுதையன்றிப் பாம்பெங்கே. பழுதையே பாம்பெனின், பாம்பு பிராந்தி மேலீட்டாற் பழுதை மறைவானேன். மறைவதாற் பாம்பே முன்னர் பழுதையாகத் தோற்றிற்றெனின், விசாரிக்குங்காற் பழுதையே தேறுவதென்னை? அப்போது பாம்பில்லையென்னின், முன்னர் தோற்றுவானேன்? தோற்றமே பொருளெனக்கொள்ளின், சோதனை முடிவிற் பாம்பெனல் பிராந்திரூபமேயன்றி மெய்யல்லவெனப் போவதென்னை.—எ-று.

பிரமம் மாயையென்பதை உவமேயமாக்குக. (உஎ)

பொய்யன்றி யெங்கே தனுவாதி நான்குந்
தனுவாதி யின்றேற் சுகமே றுயிர்க்குச்
சுகம்பற்றி யன்றோ பலகிரி் தியங்கள்
அகலக் கண்டில மனுதின மெங்கணும்
உள்ள தன்றாயி னித்தனை வரலென்
பொய்யெனப் படாது நிழக்கிறி லென்னை.

(இ-ள்.) பொய்யாகிய மாயையையன்றித் தனுகரணபுவனபோகங்கள் இருப்பதற்கு ஏது எங்கேயிருப்பது? மாயாகாரியமாதலின் இந்நான்குந் தோற்றமன்றிச் சுயம்பாக இன்றெனின், இன்றேல் இவற்றால் உயிர்களுக்குச் சுகமுறுவதென்னை? சுகம்பற்றியன்றோ உயிர்கள் பல கிரியைகள் புரிந்து கொண்டிருக்கின்றன. இவ்வனுபவம் நீங்க என்றும் எங்குங் கண்டிலம். மாயை உண்மையல்லாததாயின், இத்தனை காரியங்கள் வருதற்கு ஏது என்னை? ஆதலின் மாயையென்பது பொய்ப்பொருளெனப்படாது. இப்போது சொல்லிக்கொண்டுவந்த இவ்வர்த்தத்தில் யாது பிழையுளது.—எ-று. (உஅ)

உள்ள தாயி னில்லைய லவென்னத்
திடம்பெறற் கெவையுஞ் சோதனை ஞாயத்
தேதெவன் கொல்லோ வுணரா திசைத்தென்

(இ-ள்.) மாயையென்பது உள்ளபொருளாயின் சோதனை ஞாயமுகத்தால் தூலாதி சுபாவம் ஈருய அனைத்தும் அல்லவல் எனவும், இல்லையில்லையெனவும் நியதிகளைதற்கு உடன்பட இடமுறுவதற்கு ஏது என்னையோ. இதனை உற்றுணராது சி அருஞ்சொல்லாலிசைத்தும் என்சாதித்தது?—எ-று.

இன்மையை உண்மையாக்கற்கு உறுதியாதுகாட்டினும் ப னென்.

(உக

விவகரித் தற்கிடம் பெறலெவ் வில்லையெனிற்
பாரமார்த் திகத்தி லெங்கே யுளதெனிற்
காரிய நோக்கிற் காண்பதெ னனைத்தும்
காரண நோக்கி லெங்கே யனைத்தும்.

(இ-ள்.) மாயையென்பது இல்லையானுல், யாவும் விவகரித் ற்கு இடம்பெறுவானேன். உண்டெனின், பாரமார்த்திகத்தி கண்டிலமே அஃதென்னையோ? இல்லையாயின், காரியநாட்ட தில் மாயாகாரியங்கள் அனைத்தும் காணப்படுவதென்னை? அங் ஙனமாயின் காரணநாட்டத்தில் அனைத்தும் காணுமற்போதற்கு ஏது என்னை?—எ-று.

இதில் நான்குசங்கை சமாதானம் வந்தவாறு காண்க. (௩0)

ஒன்றிலை யாயிற் பலவுள வென்றோ.

(இ-ள்.) ஏனை ஒன்ருகிய மாயையென்பது இல்லையாயின் பலபேதமாய் விகற்பித்துள்ள சகசீவபரம் இருப்பதற்கு ஏது என்கொல்லோ.—எ-று.

(௩க)

ஒன்றுள தாயிற் சூனிய மாவதென்
னொடுக்கத் தெவர்க்குஞ் சொல்வா தத்தா
லிங்ஙனஞ் சொல்லின் முடிவிலை யென்ப.

(இ-ள்.) அவ்வொன்ருகிய மாயை உளதாயின் தத்துவ ஒடுக் கத்தில் எவர்க்குஞ் சூனியமாக முடிவதென்னை? இதெல்லாஞ்

சொல்வாதமாய் முடிகின்றது. இவ்வாறு வாதித்துச்சொல்லின் முடிவுபெறுதெனச் சத்துக்கள் சொல்லுவர்.—எ-று. (கஉ)

அநர்த்தம தென்னி லதனது காரியஞ்
செகத்துள தென்றே சித்தாந்த மன்றே.

(இ-ள்.) மாயை என்பது அநர்த்தவடிவாம் என்னின் அதன் காரியமாகிய சகத்திருப்பானேன்? ஆதலின் இது சித்தாந்தபட்ச மாகாது.—எ-று.

அநர்த்தமென்னல் ஆகாது. (கக)

அவாச்சிய மென்று தறையப் படுமேல்
ஞானுஞ் ஞானமு நழுவித் தானே
தானு யுறலென் தத்துவ முடிவில்.

(இ-ள்) அவாச்சியம் என்றது வாச்சிய வடிவ மாயை என ப்படுமாயின், ஞானமும் அஞ்ஞானமும் நழுவித் தானேதானு கப்போவது என்னை? தத்துவசோதனை யாதோ அதனைச் சோ தனைசெய்து முடிந்த முடிவில்.—எ-று.

சகமுயிரையன்றியும், உயிர் பரமன்றியும், பரமறியாமையன் றியும், அறியாமை அறிவன்றியும், அறிவுதான் என்பதையன்றி யும் இல்லையாதலால் இங்ஙனம் முடித்தாமென்க. எனவே தா னெனல் யாதோ அதனையன்றி அறிவும், அறிவையன்றி அறியா மையும், அறியாமையன்றிப் பரமும், பரத்தையன்றி எழுவகைத் தோற்றமாய் நின்றுள்ள உயிரும், உயிரையன்றிச் சகமும், சகமன் றித் தூலதனுவும் இல்லையெனப்பெறும். சகமெனல்-சடம், உயிரெனல்-சித்து. சித்தென்னும் இருப்பு எங்கெங்கு உளதோ, அங்கங்கே சகமென்னும் இருப்புண்டு, இன்றேலின்றும். பரம் பிம்பம், உயிர் பிரதிபிம்பம். பிம்பம் ஏகம், பிரதிபிம்பம் அநே கம்; பிம்பம் இன்றேற் பிரதிபிம்பஞ் சொல்லவேண்டுமோ. பரம் அறியாமையென்னல், பரமெனல் யாதுயாதெனை மேற்செ ல்லுந்தோறும் அல்லவல்லவென வறிதாய் முடிவதென்னை? முடிவதால் அறியாமையே பரமென்றும். இங்கே பிரமமென் னல் உண்மையறிவு, மாயையென்னல் போலியறிவு. உண்மை அறிவையன்றிப் போலி அறிவின்மையின் வாச்சியமென்றும்.

அநர்த்த மூல மாயி னனைத்தும்
அநர்த்த மாகா தெதிரிற் காண்பதென்
அர்த்தம தாகி யயலொன் றிலாதெ
ஞயுங் காலத் தறையா தொழிக.

(இ-ள்.) மூலகாரணமாகிய மாயை அநர்த்தரூபமாயின் அ
னது காரியஞ் சகமாதியனைத்தும், அநர்த்தரூபமாகப்போகா,
நமக்கெதிரில் உண்மையாகக் காண்பது என்னையெனி
சகமாதியவற்றுள் ஒவ்வொன்றையுந் தனித்தனிக் காரண
ரியமுகத்தால் ஆராய்ந்தால் அனைத்தும் அநர்த்தரூபமாகி அ
னியமென்பது ஒன்றுமின்றிப் போவதென்னை. ஆதலின் ஒ
றும் பேசாதிரு.—எ-று.

இன்மைப்பொருள் மாயையாதலின் என்க. (கூ

வாய்புதைக் கத்தான் கற்ற திவ்வாதம்
என்ப தொழிக வெமதுரை தள்ளிக்
கண்ட படிசொலக் கற்றதோ வாதம்
ஞாயஞ் சோதனை முரணுப் போதும்.

(இ-ள்.) யாது ஓர்மொழிக்கும் இடமின்றி வாய்புதைக்க
தானோ நீர் இவ்வாதங் கற்றதென்றுதொழிக. நியாயங் காரண
மாகக்கூறும் எமது மொழிதள்ளி நியாயஞ் சோதனை முரணுகக்
கண்டபடி சொல்லுதற்கோ நீர் இவ்வாதங் கற்றது போதும்,
இனிப் பேசாதொழிக.—எ-று. (கூகா)

சோதனை யாதி மூன்றுந் தெரியுந்
தானே பக்குவ மனுபவம் வருமே
லென்பர் கூறுக வந்தநீ ராதலின்
என்னிற் போக்குச் சொல்லி யகல்வர்
புத்தி கெட்ட சுருதி யனுபவம்
அன்றிக் காண்கில ரென்சிறப் புறினும்.

(இ-ள்.) சோதனை முதலிய மூன்றும் பக்குவமும் அனுபவ
மும் வந்தால்தானே தெரியுமெனக்கூறுவர், வந்த நீர் சொல்ல

லாமேயெனக் கேட்டாற் போக்குச்சொல்லி அகல்வர், ஒரு வேளை சொல்லப்புகின் உத்திகெட்ட சுருதியனுபவமன்றி வேறறியார், எவ்வளவு சிறப்புவாய்ந்த மடாதிபதிகளாயினும். எ-று

முறையியல்முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம்-௩௭.

---

இரண்டாவது

## பாநிலையிலக்கியம்.

இலக்கிய மென்ன லெப்பாடை யேனு
மெங்ஙனம் பாமோ வங்ஙன மாகுக
நிலையை யிலக்கிய மென்ப நீங்கே.

(இ-ள்.) இலக்கியம் எனப்படுவது எவ்வகைப் பாஷையாயினும் இருந்திடுக. இங்கே இலக்கியமென்பது எங்ஙனம் பாம் இருக்கின்றதோ அங்ஙனம் ஆகும் நிலையை.—எ-று.

எனவே கற்பனையற்றதெனப்பெற்றாம். (௧)

தானென லொன்றே தனித்த பாநிலை
ஏனைய வெல்லா மிழுக்குறு மென்ப.

(இ-ள்.) தானென்னும் பதமாயும் பதப்பொருளாயும் நின்றது யாதோ அதுவே தனித்து நின்றது. அங்ஙனந் தனித்து நின்ற செம்பொருளே பாநிலையெனப்படுவதாம், மற்ற பாநிலையெனப் படுவனவெல்லாந் தோடமே உருவமாயமையுமெனச் சத்துக்கள் சொல்லுவார்கள்.—எ-று

சுசாதியாதி பேதமிருத்தலின், ஏனையவெல்லாம் இழுக்குறாம் என்றதென்க. (உ)

திணைபா லிடச்சொல் தானெனும் பதமாய்
நிற்பி னன்றிச் சார்பிலை யென்ப.

(இ-ள்.) இருதிணையும், ஐம்பாலும், மூவிடமும் தானென்னும் பதத்தைச் சார்ந்துநிற்பினன்றிச் சார்பு வேறில்லையெனச் சத்துக்கள் சொல்லுவார்கள்.—எ-று.

உ-ம். நான்தான், நீதான், அவன்தான், அவள்தான், தான் என வருமாறு காண்க. இவைதான் எனலைந் தழு நிற்கின் கணவன் இழந்தாள்போலும். இது தமிழ்வழக்கு

திணைபா லிடப்பொருள் தானெனும் பொரு
தில்லை யெங்கணு மிருக்கி னேற்குறும்.

(இ-ள்.) திணைபாலிடத்துக்குரிய பொருளும் தானெ பொருளாவதன்றி வேறு எங்குமில்லை, இருக்குமாயின் த யின்றி யேற்குதும்.—எ-று.

இவற்றின்பொருள் தானெனும் பொருளாய் எழுந்து அ கமுடிதலின் இங்ஙனங் கூறியதென்க. சோதனையிற்காண

உலகுயிர் பரமுந் தானலா தில்லை
தானவை யன்று கற்பித மதனல்.

(இ-ள்.) உலகாதி மூன்றுந் தானெனும் பொருளையன்றி லை, இன்றேனும் அவை தனது கற்பிதமாதலால் அவை ருகா.—எ-று.

மண்ணும் நூலுங் கடபடம் ஆகலாம், காரணமன்றிக் க யம் ஓர் முதலானலன்றே காரணமாகலாம்; அங்ஙனமின் அதுபோலாமென்க.

(

ஆதலி னிதனை யிலக்கிய மென்றும்
இதுபோ லிலக்கிய மில்லை யெங்கணும்
இருக்கி னசத்து முதலிய விலக்கண
மேற்றற் பால தன்றே லேற்குறும்.

(இ-ள்.) ஆகையால் இதை இலக்கியமெனக் கூறினும். இ போல் இலக்கியமென்பது எங்குமில்லை. இருக்குமாயின், அ த்துமுதலிய விலக்கணங்களை ஏற்றற்பாலதாயிருக்கும். அங் ணம் அல்லாததாயின் தடையின்றி ஏற்குதும்.—எ-று.

யாதுஞ் சச்சிதானந்தமுதலிய விலக்கணங்கள் ஏற்றற்பால தன்று.

(௬)

தானே தானுத் தனித்தற் பாலது
வேறின் முதலி னிலக்கிய மென்பம்.

(இ-ள்.) தானெனப்படுவது சலட்சணமாயினும் அவற்றால் எய்தும் ஆனிவிர்த்திக்கு உடன்படாதுஎன்றுந் தானேதானாகத் தனித்து நிற்றற்பாலது. இதுபோல் வேறின்றாகலின் இதனை இலக்கியமெனற்குத் துணிவுற்றாம்.—எ-று.

அது சடசித்தன்று. (எ)

இதனினு மணுவின் காலஞ் சூனிய
முருவாதி யொன்பது மிலையெனற் பாற்றா
யியலுவ தேனு மன்றா மென்ப.

(இ-ள்.) தானேதானவதாகிய பிரமத்தைவிட அணுமுதலிய நான்கும், உருவமுதலிய ஒன்பதும் இல்லையென்னத்தக்கதாக நடப்பதேனும் இத்தனையுந் தானன்றாமெனச் சான்றோர் கூறுவர்.—எ-று.

இத்தனையுந் தானும் அன்றாயுமிருக்கும் என்பதாயிற்று. உருவாதியொன்பதென்றது—உருவம், அருவம், ரூபாரூபம், பின்னம், அபின்னம், பின்னாபின்னம்; சாவயவம், நிரவயவம், சாவயவ நிரவயவமென்பவற்றை. இவையனைத்துந் தனது பிரதிபலனமாதலின் வேறன்று. அன்றேனும் இவைபோல்தான் போலிச்சத்தன்றாகலின் தானன்று. இதனினுமென்ற உம்மையால், பிரமம் அணுவுக்கணுவாயும், விண்ணுக்கு விண்ணாயும், காலத்துக்குக் காலமாயும், சூனியத்துக்குச் சூனியமாயும் என இங்ஙனம் எல்லாவற்றோடும் ஒட்டுகவென்பதாயிற்று. ஆகவே நுட்பத்தினும் நுட்பமாயும், மகத்தினும் மகத்தாயும் இருக்குமென்பது பெற்றாம். அவையனைத்தும் விகாரம், தான் நிர்விகாரம்; மண்ணே கடம், நூலே படமென்றாற்போலப் பிரமமே யனைத்துமென, கடமும் படமுஞ் சுயம்பல்ல ஆதலால் அவை மண்ணும் நூலுமாகா. அவைபோலத் தத்துவக்குழாமனைத்துஞ் சுயம்பன்மையின் அவை பிரமமாகாவெனவுங் கூறியவாறு காண்க.

(அ)

பஞ்ச கிர்த்தியஞ் செய்துஞ் செய்திலை
தன்வினை பிறவினை யாதி யுண்டிலை
யென்ப தானே யென்மனார் புலவர்.

(இ-ள்.) தன்வினை பிறவினை முதலிய புடைபெயர்ச்சி யு டென்றும், இல்லையென்றும் வேதஞ்சொல்லுவதால்; பிரம பஞ்சகிருத்தியஞ்செய்துஞ் செய்ததில்லையெனவே அறிவுடை யோர் சொல்வார்கள்.—எ-று.

நிற்பதற்கும் புடைபெயர்தலுக்கும் இடமுன்றவிடத்து, தன்வினையாதி யுண்டெனவும், உன்னுமிடத்து இன்றெனவு குறிப்பிக்க நின்றது. தன்வினை பிறவினையாதியென்றது—செ ய்கை, செய்விக்கையை. அனுபூதியின்றி இவைகாணமாட்டா

இன்ன தகைய நிலைய தாதலின்
சத்தாதி யைந்திற் கியைவ தாகலின்
இதனை யிலக்கிய மென்பதி விழுக்கென்.

(இ-ள்.) இங்ஙனமெல்லாங் கூறிவந்த நிலைபதாதலினாலும்; சத்து முதலிய ஐந்திலக்கணங்கட்கு இயைதற்பாலதாதலா னும் இதனை இலக்கியமென்றும்; இங்ஙனங் கூறியதில் வழு வென்னையுள.—எ-று.

சோதனையாதி யில்லாவிடத்திழுக்குறுமென்பது கூடும். (கO)

இலக்கிய விலக்கண மென்ப தென்னை
யிலக்கியத் தமைதி யிலக்கண மென்ப.

(இ-ள்.) இலக்கிய இலக்கணமென்பது என்னையெனின், இல க்கியத்தினமைதி இலக்கணமெனப்படுவதாம்.—எ-று.

எனவே இலக்கியத்தின் அலங்காரத்தை விளக்க நிற்பது. ()

இலக்கிய மில்லா விலக்கண மின்றே
இலக்கண மில்லா விலக்கிய மென்சிறப்
புண்டெனிற் சித்திர மாடை யணிகள்
இல்லா வாடி மங்கையர் போலும்.

(இ-ள்.) இலக்கியமில்லாத இலக்கணம் எங்குமில்லை, இல க்கணமில்லாத இலக்கியம் என்னசிறப்பெய்தும்; அஃதில்லாத இலக்கியமு முண்டெனில்: சித்திரமெழுதாத கண்ணாடியும், ஆடையாபரணங்களில்லாத மாதருமிருந்தாற்போலும்—எ-று.

இருக்கினென்ன விநோதம்.

(கஉ)

தானென லேபர மென்று முன்ன
ரதுவே யிலக்கிய மாகு மிலக்கண
மிருப்பத னானே யென்றனர் ரறிஞர்.

(இ-ள்.) தானென்னும் பதமே பரமாவதெண முன்னரே உரைத்தாம். அப்பரமென்பதே இங்கே இலக்கியமெனப்படுவதாம். இதற்கிலக்கணம் இருப்பதினாலெனச் சத்துக்கள் சொல்லுவர்.—எ-று.

இங்கே இலக்கிய மிஃதெனயதென்க. (கரு)

தானென லன்றி யறிவிலை யேயிவ்
வறிவை யன்றியறி யாமை யிலையிவ்
வறியாமை யன்றிப் பரமாதி மூன்று
மின்று மதனாற் றானென லேபரஞ்
சுசாதி யாதி விகற்பமற் றதனான்
மதத்தர் பரமென விங்கிலக் கயலே
யேற்ப தெங்ஙனஞ் சுயம்பா வென்ப.

(இ-ள்.) தானென்னும் பதத்தையன்றி மெய்யுணர்வில்லை, இம்மெய்யுணர்வையன்றிப் போலியுணர்வில்லை; இந்தப்போலியுணர்வையன்றிப் பரசீவசக மூன்றும் இல்லையாதலாலும், சுசாதிகமுதலிய மூன்று விகற்பமும் அற்றதாதலாலும் தானென லே பரமெனத்தகும். மதத்தர் கூறும் பரமென்பது தானென லென்றும், சுசாதியாதி விகற்பமிறந்ததென்று மேற்றற்கு உடன்படாமையான் இங்கிலக்கன்னியமே, அதனைச் சுயம்பென்று எங்ஙனம் ஏற்பம் என்று சத்துக்கள் சொல்லுவர்.—எ-று.

மதத்தரும் அத்துவிதியும் பரமெனக்கூறினும், அவர்கள் குணங் காரணமாகவும், இவன் குணி காரணமாகவும், அவர்கள் நிதானங் காரணமாகவும், இவன் பிரத்தியட்சங்காரணமாகவும் வாதிப்பர். அவர்கள் சொப்பிரகாசங் காரணமாகப் பிரமம் விளங்கலின் காரணகாரியம் உண்டெனவும், இவன் சூரியனை யன்றிப் பிரகாசமில்லை, இல்லாததைக் காரியமாக்கலும், இது பற்றியிருப்பதைக் காரணமாக்கலுங் கூடாதாதலிற் காரண

காரியம் அற்றதெனவும் வழக்கிட்டு நிற்பார். நிற்பினும் உண்மை யுண்மையாகவே முடியும். இது பிரத்தியட்சத்தாலன்றிக் கூடவே கூடாதெனக. (கச)

தானலாப் பொருளிடங் கால மின்றே
தானே தனக்கிடம் விண்போ லெங்கணும்
தானெனு மகிமை சாற்றலு மரிதே.

(இ-ள்) தானென்பதல்லாத பொருளிடங்காலமில்லை. ஆயின் தனக்கிடமோ ஆகாயம்போலத் தனக்குத்தானேயன்றி வேறிடம் எங்கணுமில்லை. ஆதலின் தானென்பதின் மகிமை யாவரானும் இன்னதெனச் சொல்லுதற்குமரிதாம்.—எ-று. (கரு)

அன்னிய முண்டாய்க் காணிற் சிறிது
மறியுந் தனைத்தளிக் காட்டி லேற்பம்
அன்றேன் மடமை மறுக்கினும் விடுமோ.

(இ-ள்.) தனக்கன்னியமென்பதுளதாகத் தினைத்துணையுங் காணுமாயின், அறியுந் தகைமைத்தாய தானென்பதைத் தள்ளி அதனை நேரே காட்டில் தடையின்றியேற்குதும். அங்ஙனங் காட்டாவிடின் மூடமென்னப்படும். இதனுக்குடன்படாதாயின் மடமைவிடுமோ,—எ-று.

விடாதபோது தாம் வாதித்தும் என்பயன், தன்னைத்தானுணராவிடத்து என்னகற்றும், எச்சிறப்புறினும் பயனின்றென்பது.

தானென லேயுட லிறுவாய்த் திரிதலை
யாரோப மீண்டுந் தானென லாதலை
அபவாத மென்று ரறிந்திசி னோரே.

(இ-ள்.) தானெனப்படுவதே பிரகிருதிமுதல் உடலிறுவாதலை ஆரோபமென்றும், மீண்டும் விசாரத்தால் வந்தவாறு திரும்பி உடன்முதல் பகுதி இறுதியாக்களைந்து தானாதலை அபவாதமென்றுஞ் சத்துக்கள் சொல்லுவார்கள்.—எ-று.

ஆதிமத்தியாந்தமாய் நிற்றல் தானெனப்பட்டது. (கஎ)

தானே யறிவறி யாமையுமி னின்பமுந்
தானே சிறிது பெரிதாக் காணும்.

(இ-ள்.) தானே அறிவறியாமையாய் நிற்றலின், தானே சிற்றின்பமும் பேரின்பமுமாகக்காணும்.—எ-று.

சிற்றின்பமும் பேரின்பமும் ஒன்றிலொன்று அபாவமாயினுந் தானிருத்தலின் தானிரதிசயானந்தமெனப்படும். இஃது அறிவறியாமை ஒன்றிலொன்று அபாவமாயினுந் தானிருத்தலின் தான் ஸ்திரஞானமெனப்படும் போதெனலைக்குறிக்க நின்றது. அறியாமை, சிற்றின்பம், அறிவு, பேரின்பம். நிரவறிவு-நிரதிசயானந்தம், சிற்றறிவு-விடயம், பேரறிவு-சிவம். கஅ

இலக்கிய மென்ன லிதையொழிந் தறிந்திலன்
தானறி வானந் தமதா மதனால்
சுருதி யுத்தி யனுபவ மிதுவே.

(இ-ள்.) தான் அறிவாநந்தமாய் இருப்பதுபற்றித் தானென்பதைத்தவிர வேதாந்தத்திற்கு இலக்கியங்கண்டிலன், சுருதி யுத்தி யனுபவமும் இங்ஙனமே.—எ-று.

எங்கெங்குந் தானெனலே அதிஷ்டானமெனக்கண்டாம். ()

தானெனு நிலையைத் தெளிந்துதா ஞேனோர்
அன்றி யறியா ரிலக்கிய மிதனை
யெத்திறத் தவரு மென்மஞர் புலவர்.

(இ-ள்.) தானென்னும் நிலை யாதோ அதனை ஐயந்திரிபறத் தெளிந்து, அது தானானவர்கள் இவ்விலக்கிய முணர்ற்பாலாரன்றி ஏனையர் எத்திறத்தராயினுந் தினைத்துணையுமறிய வலியிலராவரெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

எவருந் தானெனும் நிலையினராயினுந் தெளிந்தவிடத்தன்றி அன்னியந்தானெனலகலார். (உ०)

தானே தானு நிலைய தானோர்
சுசாதி யாதி விநோதமாய்க் காண்போர்.

(இ-ள்.) தானேதானாகிய நிலை தாமாயினோர், சுசாதிமுதலிய விகற்பங்களிற் சிக்குண்டு தவிக்காது; அவற்றை விநோதமாகவே கண்டு களிப்பவரோயன்றி வேறல்லர்.—எ-று.

சிக்குண்டு தவியார் எங்குமரியர். (உக)

தானு மேட்டைக் கண்டவ ரிவரோ
அன்னிய வேட்டி னகல முணர்ந்தபின்
என்னிலக் கியமுள திதுபோ லெங்கணும்
இதற்கியை யிலக்கண மினியுரைக் குதுமே.

(இ-ள்.) இன்னோரோ தனக்கன்னியமாய் நின்றுள்ள பிரபல மற்பமென்னு மேட்டினகலமெல்லாம் அளந்துணர்ந்த பின்னர் இவ்வருத்தங்களையெல்லாந் தானுகின்ற ஏட்டிலிருக்கக்கண்டு தெளிந்தவர், இவரோற்றற்பாலதாகிய இவ்விலக்கியம்போல் யாதிலக்கியமுளது, எங்கணுமின்றே. இங்ஙனம் அரிதாயுள்ள இவ்விலக்கியத்திற்கியைந்த சத்தாதியிலக்கணம் ஐந்தையும் இனிக் கூறுதும்.—எ-று.

இவ்விலக்கியம் அன்னியமாக நின்றுணரற்பாலதன்று, தானே தானுகிய காலத்தன்றி, எனவே இவ்வருமை என்னென்றுரைப்பாம். (உஉ)

பரநிலையிலக்கியம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - எகூ.

---

மூன்றாவது

# சத்தியல்.

## பரநிலையிலக்கணம்.

சத்து.

ஞான மயமே பரநிலை யாகும்
அன்றே லெதிர தேலா தெவரும்.

(இ-ள்.) ஞானமயமே பரநிலையெனப்படுவதாம், அன்றெனமறுக்கில் அஞ்ஞானமயமென்பம்; அங்ஙனங்கூறில் எவருஞ் சற்றும் உடன்படார்.—எ-று.

அஞ்ஞானமயமென்னிற் பரமெனுஞ் சொற்குயர்வென்னை? ஆதலிற் கூடாதென்க. (க)

சலமய முந்நீ ரொன்பது போலும்
ஞான மயமே பரமெனு லென்ப.

(இ-ள்.) ஞானமயமே பரமெனப்படுவது, சலமயமே சமுத்திரமென்றாற்போலும்.—எ-று.

தக்க குறியில்லாதவிடத்து பரமெனல் தடுமாற்றமாகமுடியும். இதுபற்றி ப்ரக்ஞானம் பிரமமென்றது வேதாந்தம். (உ)

பரமோ டபர மாகு ஞானம்
தன்னை யுணர்தல் பரமய லுணர்த
லபர மென்ப வறிந்திசி னோரே.

(இ-ள்.) அந்த ஞானம் பரஞானமெனவும், அபரஞானமெனவும் இருவகைத்தாகும். அவற்றுள் பரஞானம் தன்னைத்தானுணர்வது, அபரஞானம் அயலையுணர்வதெனச் சத்துக்கள் சொல்லுவர்.—எ-று. (௩)

(இங்கே) பரஞா னமதே பரம தென்னல்.

(இ-ள்.) இங்கே பரமென்றது-பரஞானத்தையே, அபரஞானத்தையன்று.—எ-று.

ஞானம்போலு மேலாய் குறி பரமெனற்கின்மையின் இங்ஙனங் கூறியதென்க. (௪)

தானு மேட்டைக் கண்டவ ரன்றி
யேற்றறப் பர்லா ரில்லை யிதனை.

(இ-ள்.) தானுகிற ஏட்டைக்கண்டு தெளிந்தோரோ இதனை ஏற்பரன்றி அன்னிய வேட்டைத் தெளிந்தோர் எங்ஙிலையராயினும் இதனருமை தெரியாததால் ஏலார்.—எ-று.

தன்னேடெனப் பல்தரம் ஆங்காங்கு கூறுதல். தன் குறிவழுக்க மிகவெடுத்துரைத்தல் என்னுமுத்தி. பரஞானம்-உண்மையறிவு. (௫)

பரஞான மெனற்கே சத்தாதி யைந்து
மேனைய தேற்கு மசத்தாதி யைந்தும்.

(இ-ள்.) பரஞானம் என்பதற்கே சத்துமுதலிய ஐந்திலக்கணமும் பொருந்தும்; ஏனைய அபரஞானமோ அசத்தாதி ஐந்திலக்கணமுமேற்கும்.—எ-று.

அபரஞான இலக்கணமும் உடன்கூறுதல், ஒன்றினமுடித்த றன்னின முடித்தலென்னு முத்தி. (௬)

சத்தென வேற்கத் தகுங்குறி வெளியா
யொளியா யொருபடித் தாகித் தெரிவாய்த்
தெளிவா யென்று மகம்புற மின்றிச்
சொச்சமாய் நீக்க மெங்கணு மிலதாய்
ஒப்புயர் கீழற் றிலக லென்ப.

(இ-ள்.) சத்தென்று எவருமேற்கத்தகுங் குறியாவது வெற்ற வெளியாயும், சொப்பிரகாசமாயும், மாறாது ஒருபடித்தாயும், தெரிவேமயமாயும், கலக்கமின்றிச் சுத்ததெளிவாயும், எப்போதும் அகம்புறமற்றுத் தனக்கோர் காரணமில்லாச் சுயம்பாயும், எவ்விடத்தும் நீக்கமற்றதாயும், தனக்கு மேல்கீழொப்பொன்றில்லாததாயும் விளங்குவதெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

இதற்குதாரணம் அந்தர்முகநோக்கில் எங்கணுங்காணலாம். எனவே பகிர்முகத்தென்றுங் கூடாதெனப்பெற்றாம். இங்ஙனம் யாவருமாயிருந்தும் அறியவில்லை, தானலாததைத் தானென்றுணர்வதிறலென்க. (௭)

(தத்தம்) புத்தி விகற்பே தெளியாக் குற்றம்
வினையாதி மேற்றன் றுமெனிற் றுயரே.

(இ-ள்.) யாவருஞ் சத்தாயிருந்தும் தெளியாக்குற்றந் தங்கள் தங்கள் புத்திவிகற்பமே. வினை, கடவுள், சுபாவம், நவக்கிரகம் முதலியவற்றின்மேல் பிறப்பாதி சுகதுக்கங்களை யேற்றிக்கூறுதல் தகுதியன்று. தகுதி யாமெனின், என்று மாளாத்துன்பமே யுறுதியின்று.—எ-று.

தேகாதியாக்காணும் உருக்களனைத்தும் மண்ணுகைத்தக்கதன்றே. அன்றெனின், அவற்றிற்கு முதற்காரணம் வேறாகவேண்டும். இன்றெனின், ஒத்துக்கொள்ளவேண்டும். ஆதியந்தம் அணுகும்போது இடையிலும் விகாரித்திருப்பதால் வேறோரறெனின், முன்பின்முதலிய நான்குகாலத்திலும் மண்ணுகப்பாதது நமது புத்திவிகற்பமாயிருக்க, வினையாதிகள் மேலே

ற்றி நடித்தலிற் பயனென்னை? பிறவிமுதலிய துன்பம் அகல்வ தற்கு இடமின்று. உண்டெனின், ஞாயஞ் சோதனை பொருந்த முகத்தாலன்றிச் சற்றும் ஏலோம். இதுநிற்க. (அ)

உடலன் றாகலி னுயிர்சத் தெனப்படும்
இதுபோற் பரமு மாகு முலகோ
வுணர்வாஞ் சத்தை யகற்றக் காண்கிலம்
அனைத்துஞ் சத்தா யிருப்பத னானே.

(இ-ள்.) யாதுவியட்டி யுடலுமன்றாமையின் உயிர் சத்தென ப்படும். இதுபோல யாது சமட்டி யுடலுமன்றாகலின் பர முஞ் சத்தெனப்படும். ஆயின் உலகோ யாவருந் தத்த முணர் வாகிற சத்தைத்தள்ளிக்காணச் சற்றுந் தோற்றக்கண்டிலம். எனெனில், திரிபதார்த்தமாகிய அனைத்துஞ் சத்தாயிருப்பதி னால்.—எ-று.

உலகஞ் சத்தின் ப்ரதிபலனமாதலின் சத்தென்றும். மறுப் பார் தமது புத்திவிகற்பங் கடவாதார். (௯)

அசத்தெனற் கேலா ததுசத் தாகும்
சத்துபோற் காண்டலி னென்மனார் புலவர்.

(இ-ள்.) விசாரிப்புழி அசத்தெனற்கு உடன்படாது ஒளிர் வது யாதோ அதுவே சத்தெனப்படுவதாம். சகமாதி திரிபதா ர்த்தங்களுஞ் சத்துபோற்காண்டலினெனச் சத்துக்கள் சொல் லுவார்கள்.—எ-று.

தான் சத்தெனத் தெளிதல் அருமைபற்றியென்க. (௧௦)

தனைத்தான் தேடல் சற்றுங் கண்டிலம்
தனக்கய றன்னைத் தானெனப் படலால்.

(இ-ள்.) தன்னைத் தான் தேடல் யாவர்பாலுஞ் சற்றுங் கண் டிலம். தானெனத்தேடித் தனக்கயலைத் தானெனக் கடைப்பற் றுவதால்,—எ-று.

நிரதிசயானந்தந் தானெனக்காணுது பரமெனல், அயல்கடந் ததன்று. இது மயக்கம் அகலார்குறி. (௧௧)

அறிவறி யாமை யடுக்குகள் கடவாக்
கடையென் னுணர்ந்துஞ் சத்தென லரிதே.

(இ-ள்.) அறிவறியாமை அடுக்குகள் எண்ணிலவாதலால் அவற்றைக் கடவாவிடத்து யாதரிய நுண்ணூலுணர்ந்துஞ் சத்திஃதென்றெட்டுதல் எவர்க்குமரிது.—எ-று.

சற்குரு காரணமாகச் சமாதிகூடித் தெளியாவிடத்தென்லைக் குறிப்பிக்க இங்ஙனங் கூறியதென்க. கற்றதனாற் பயனின்றென்பது கருத்து.

(௧௨)

தன்னை யறியுஞ் சமாதி யல்லாச்
சமாதி காட்டச் சத்தி னுண்மை
என்னரி தெனினு மெவர்க்கு மெங்கணும்.

(இ-து.) தன்னை யுள்ளவாறறியச்செய்யுஞ் சமாதியல்லாத சமாதியென்ன அரிதாயினும், யாவர்க்கும் எவ்விடத்துஞ் சத்தினுண்மை நிலைகாட்ட வகையறியாது.—எ-று.

கனலாதி நின்றியற்றுதலின் என்னரிதெனினுமென்முர். நிட்காமியமே தக்கதென்பது.

(௧௩)

அல்ல வில்லை யென்று தமையும்
பொருளிலை பொருளாக் காண்ட லுன்னல்
தவிர்தல் போலுந் தவமிலை செய்யிற்
சத்தெனல் தானே காணு மென்ப.

(இ-ள்.) இஃதோர் சயம்பன்றெனவும், இதற்கோர் முதற்காரணமிருப்பதின் அதைத்தவிர இஃதின்றெனவும், கோடற்கு உடம்பெருதுள்ள பொருள் யாதொன்றுமில்லை. இங்ஙனமிருக்க, அதனைப் பொருளாகக்காண்டலையுங் கருதலையும் பற்றறவிட்டுவிடுதல்போலுந் தவமொன்றுமில்லை. ஆதலின் இதனை ஓராதுசெய்யின் சத்தென்பதுதானே தடையின்றி விளங்கும் என்று சத்துக்கள் சொல்லுவார்கள்.—எ-று.

தோற்றமென்று யாதுகோடலின் சயம்பன்றெனவும், காரியத்திற்குக் காரணமாகக்கோடலின் இஃதோர் முதலாக இன்றெனவும் கூறியவாறு காண்க. ஒன்றையொன்றாகக் கோடற்பா

ல்து பிராந்தியெனப்படும். பிராந்திக்கு விமோசனகாலம் இன்றளவுஞ் சத்தென்பது விளங்காது. (கச)

வேடம் வேட தாரியென் பவற்றுள்
வேட முபாதித் திரைய மான்மா
வேட தாரி யாகு மிதனை
யவத்தாத் திரையத் தனுதினங் காண்பம்.

(இ-ள்.) வேடம், வேடதாரியென இரண்டாம். இவற்றுள் வேடம் உபாதித்திரையமும், வேடதாரி ஆன்மாவுமாம். இங்ஙனமாய நிலையை மூன்றவத்தைதோறும் அனுதினமும் யாமே காண்கின்றனம், வேறு சாட்சி வேண்டுவதின்று.—எ-று.

உதாரணம் யாமேயென்பது. (கரு)

(இதனால்) சத்திஃ தென்னத் தானே விளங்கும்.

(இ-ள்.) இங்ஙனங்கூறியதனால், இவ்விரண்டினுள் சத்தாவதிஃதெனத்தானே விளங்காநிற்கும்.—எ-று.

எனவே ஆன்மா சத்தென்பதாயிற்று. (கசா)

தூல சூக்கும காரண வுபாதி
தத்த மவத்தை யன்றிக் காணா.

(இ-ள்.) தூலஞ் சூக்குமங் காரணமென்னு முபாதித்திரையம் தத்தம் அவத்தை தோன்றியக் கண்ணன்றிக் காணாவாம்.-எ-று.

தூலம் நனவிலும், சூக்குமங் கனவிலும், காரணஞ் சுழுத்தியிலுந் தனிக்காணுமன்றி ஒன்றிலொன்று காணாதென்பது. (கஎ)

அவத்தை தோறு மவ்வவ் வுபாதி
யகர்த்தா வாதலி னான்மா வன்றிக்
காணா வாகி லெதுசத் தாகும்.

(இ-ள்.) அவ்வவ்வுபாதிகள் அகர்த்தாவாதலின் அவத்தைதோறும் தாமே ஆன்மாவையன்றி எழுந்து காணாவாம். அங்ஙனங்காணாவாயின் அப்போது யாது சத்தெனப்படும்.—எ-று.

எனவே கர்த்தத்துவம் ஆன்மாவுக்கென்றாயிற்று. (கஅ)

தூல மென்னி னேனைய வேடம்
யாதோ யாது மவத்தை யளவே
லான்மா வதுவது வாகக் காணுங்
காணினு மாறு தவைமா றிடினுஞ்
சத்தென லான்மா வென்பது நின்னாம்.

(இ-ள்.) தூலவேடமே சத்தென்னில், ஏனைய வே யா
தோ. எவ்வெவ் வுபாதிவடிவமும், அவ்வவ்வவத்தை ள
வளவு காணுமென்றால், அப்போது ஆன்மாவே அவ் பா
திவடிவாய் ஆங்காங்கு காணும்; காணினும் அவைபோ மா
றுதென்றும் ஒருதகைத்தாயிருக்கும். ஆதலின் சத்தெ து-
ஆன்மாவே வேறன்று; இது சத்தியம் —எ-று.

சத்து இஃதென்பதற்கு எதுக்கூறியது. (௬)

(ஆதலின்) உபாதியோ வுயிரோ யாமெனப் படுவ
துயிர்சித் தாதலி னேற்கு மென்ப.

(இ-ள்.) ஆதலால் நாமெனப்படுவது பாதியோ, உ ா
வென ஐயமுறில், ஆன்மா சித்தாதலின் றிதுவென்பது ற்கு
மெனச் சத்துக்கள் சொல்லுவார்கள்.—எ-று.

நாமறிவதால் ஆன்மா நாமெனப்பட்டது. உடலுயிர் ந்த்
துணராதார் ஒன்றெனினும், சித்து சடமாதலின் அவை ,இ
க்குமோ. இன்பத்துன்பம் நமக்காதலால் ஆன்மா நாமெ ம்.

சத்தாதி யைந்தெனல் சத்துசித் தின்பம்
நித்தியம் பூரண மென்ப வாதலிற்
சத்தென லான்மா வென்ற னையைய
முளதேற் கூறுது மாணை தற்கே.

(இ-ள்.) சத்தாதி ஐந்திலக்கணமெனப்படுவது-சத்து, , சி,
ஆனந்தம், நித்தியம், பூரணமென்பவாகலின், அவற்றுட் த
னல் ஆன்மாவென்றும். இன்னும் ஐயமுளதேல் கூறுது ா
றுயுள்ளன அனைத்தும் விலகற்கும்.—எ-று.

தேகாதியனைத்தும் ஆன்மாபோற் றோற்றலின் ஐயமுன ல்
என்றார். க)

சீவ னான்மா வொன்றெனி லுடலுயிர்
ஒன்றெனல் போலு முரைப்பார் மிசைப் பிழை.

(இ-ள்.) சீவனென்பதும், ஆன்மாவென்பதும் ஒருபொருட் பல்பெயரென்பது. உடலென்பதும் உயிரென்பதும் ஒருபொருட்பல்பெயர் என்றுறற்போலும். இப்பிழை இவற்றின்மேலதன்று, ஆயாதுரைப்பார்மேற்று.—எ-று.

இவ்வையம் அகலக்கூறுதும்.

(௨௨)

இரண்டெனி லான்மா வுயிர்போற் கற்பித
மாகா திருக்கா மிலக்கியார்த் தத்தே.

(இ-ள்.) ஒன்றல்லாவிடத்து இரண்டென்பமெனில், உயிர் போல் ஆன்மாவுங் கற்பிதமாகுமா? ஆகாதே. ஆகுமெனின், இலட்சியார்த்தத்திற் குற்றமாமுடியும்.—எ-று.

ஒற்றுமை நயத்தால் உடலுயிரொன்றெனின், வேற்றுமை நயமாகிய சித்து சடமெனப்படாதிருக்கவேண்டும். இரண்டெனின், சித்துபோற் சடமுஞ் சுசாதிகமாகவேண்டும்; ஆகாததாற்கூடாது. இதுபோல் அறிவே உயிரெனினும், ஆன்மாவெனினுமொக்கும். ஒத்தலாலொன்றெனின், உபாதித்திரையம் வேடம், அறிவு, வேடதாரி. மூன்றவத்தையிலும் உபாதித்திரையமாகக் காண்டல்-அறிவு. அகர்த்தத்துவமாதலின் அவைதாமேயெழாவாம். அறிவு அவ்வேடமாநிற்குங்காறும் சீவனெனவும், நிற்பினுந் தானவ்வேடமல்லாததால் ஆன்மாவெனவும் பெயர்பெறும். வேடம் வேடதாரியாகாததால் ஒன்றெனப்படாது. இரண்டெனின், வேட்தாரியைத்தவிர வேடமோர் முதலன்றாகலானும், முதலல்லாததை யளவையிலொன்றெனற்கு உடன்படாதாதலினானுங் கூடாதென்க. சீவன், ஆரோபம், ஆன்மா, அதிஷ்டானம். பொருளன்மை, சீவன், பொருள், ஆன்மா. உதாரணம்—பொற்பணி, மட்கடம், நூற்படம் என்றாற்போலும்.

(௨௩)

அறிவெனு மொன்றே யவசரம் பற்றிச்
சீவ னான்மா வென்ப தன்றி
வாஸ்தவ மன்றிவ் விருமைப் பெயரும்.

(இ-ள்.) அறிவென்பதொன்றே அவசரங்காரணமாகச் சீவல் ஆன்மாவெனப்பட்டதன்றி இவ்விருவகைப்பெயரும் அறிவி க்கு வாஸ்தவமன்று.—எ-று.

அறிவு, வாஸ்தவம், இருமைப்பெயரும் கற்பிதம். இது சே தனையாதிமுகத்தால் ஏற்கப்படும். (உச

(அறிவே) அவத்தை யுபாதி காட்சித் திரைய
மாகிய வவசரஞ் சீவ னாகா
வவசர மான்மா வெனப்படு மென்ப.

(இ-ள்.) அறிவாகிய சைதன்யமே; அவத்தாத்திரையம், உப தித்திரையம், காட்சித்திரையமாகிநிற்கும் அவசரஞ் சீவனெ வும், இங்ஙனமெல்லாமாகாது நிற்கும் அவசரம் ஆன்மாவெ வுங் கூறப்பட்டிருக்குமெனச் சத்துக்கள் சொல்லுவார்கள்.

இதனைத் தினவனுபவத்தில் எவ்வுயிருந் தடையின்றிக் க ணலாம். (உரு

உபாதி நாட்டத் துயிரலா நாட்டத்
தான்மா வெனப்படு மறிவு தானே.

(இ-ள்.) அவ்வறிவே உபாதிநாட்டத்தால் உயிரொன்றும், அ ஙனமல்லா நாட்டத்தால் ஆன்மாவென்றும் வழங்கப்படும் எ-று

எனவே நாட்டங்காரணமாக இப்பெயர்வந்ததாயிற்று. (உசு

நாட்ட முகத்தாற் கற்பித முண்மை
யன்றிச் சற்று மேலா தறிவே.

(இ-ள்.) அறிவானது இவ்விருவகை நாட்டங் காரணமா வல்லாது கற்பிதம் உண்மையெனக்கூறச் சற்றும் ஏலாது. எ-று

கற்பிதம்-சீவன், உண்மை-ஆன்மா. (உ௭

அகம்புற மென்றிரு பாற்றே நாட்டம்.

(இ-ள்.) அந்தநாட்டம், அந்தர்முகம், பகிர்முகமென்றிரு லதா நிற்கும்.—எ-று.

பாற்றுமென்றது பாற்றேயென்ற தேற்றத்தால் எந்நாட் மும் இவ்விருவகைப் பாலதெனக் காட்டற்கெனப் பெற்று

அகம துண்மை புறமது கற்பித
மாகு நாட்ட மகன்ற வுயிரிலை
யெங்ஙன மாற்றினு மியையா வென்ப,

(இ-ள்.) அந்தர்முகம் உண்மைநாட்டம், பகிர்முகங் கற்பித நாட்டமாம்; இவ்விருவகை நாட்டமுங்கடந்த உயிர் எங்குமில்லை. இவற்றை ஒன்றையொன்றாக எவ்வாறு மாற்றிக்கூறினும் இவை சற்றுஞ் சம்மதியாவெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று. இப்பெயர் மாற்றிக்கூறினும் பொருந்தாதென்பது கருத்து. ()

அகம தாகா திடைப்புற மொருவா
தறிவ தாகாக் கண்ணக மகலா
தானே தாறு காவயி னறிவு
மகலா ததனை யனுபவங் காட்டும்.

(இ-ள்.) பகிர்முகநாட்டம் நீங்காவிடத்து அந்தர்முகநாட்டம் வராது. சைதன்யவடிவமாக விளங்காவிடத்து அந்தர்முக நாட்டம் நீங்காது. தானேதானாக ஆகாவிடத்து அறிவுவடிவாக விளங்கலும் நீங்காது. இதனைச் சுவானுபவ மேலிடில் அவ்வனுபவமே காட்டும்.—எ-று.

வேறாற் காட்டவொண்ணாதென்பது கருத்து. அகமதாகா திடைப்புறம் ஒருவாதென்பதற்கு அந்தர்முகமாகாவிடத்துப் பகிர்முகநாட்டம் நீங்காதெனப் பொருள்கோடல் சிறப்பெனக் கொள்க. அனுபவமில்லாவிடத்துப் பயனின்றென்பது கருத்து.

இங்ஙன மாயிற் சத்தெனல் காணும்
அன்றேன் முரண தாகு மென்ப.

(இ-ள்.) இங்ஙனமாய அனுபவமாக விளங்கிற் சத்தென்ப தினிலையுள்ளவாறு விளங்கும். ஆகாதிருக்கிற் சத்தெனல் மாறாகக்காணுமென்று அறிஞர் கூறுவர்.—எ-று.

எனவே சிதாகாயப்போலிகள் சிதாகாயமாகக்காண்டலை. அன்றேல் முரணதாகுமென்றார். (௩௧)

வியாப்பிய மென்னற் கியையா வியாபகம்
சித்தே லதுசத் தன்றேற் பிறிதே.

(இ-து.) வியாபகவடுக்குகள் மேன்மேற் செல்லச்செல்ல வியாப்பியம், வியாப்பியமெனச்சேறலின், இதுபோல் வியாப்பியமென்னற் கியையாது அசையாது நிற்கும் வியாபகம் சின்மயமாயின் அது சத்தெனப்படும். அங்ஙனமல்லதாயில் அசத்தே.—எ-று.

சின்மயமன்றேல் ஒப்புயர்வற்றதாயினும் வியாபகமன்றென்க.

திணைபா லிடமடை மொழியே லாது
தனைத்தா னேற்குந் தானெனல் சத்தே.

(இ-ள்.) திணைபாலிடங்களை அடைமொழியாக ஏலாது தன்னைத்தானே அடைமொழியாக ஏற்றற்பாலது தானெனல்யாதோ அதுவே சத்தெனத்தக்கது.—எ-று.

இது பாவாபாவமாகக் கோடலுட்பட்டுதன் றப்பாற்பட்டதென்க. உதாரணம்—பொதுத்திணை, சாத்தன்தான், சாத்திதான் எனவும், உயர்திணை. நம்பிதான், விடலைதான், குரிசில்தான், தோன்றறான் எனவும்; தோழிதான், நங்கைதான், தையல்தான் எனவும் அஃறிணை. அதுதான், இதுதான், எதுதான் எனவும் மூவிடம். நான்தான், நீதான், அவன்றான், அவள்தான் எனவும் வரும். பிறவுமன்ன. தானென்பது பிறவற்றை அடையடுத்துவராமை, தானேதான் எனவரும். சுயம்பெனக்குறிக்கத் தனைத்தானேற்குந் தானெனல் சத்தென்றார். தானெனு நிலையையறியாதார்க்கு இஃதோர் மொழிபோல்வதாம்.

நானென லுபாதி யன்று லொரீஇக்
காணிலது சத் தாஞ்சித் தேற்கி
லன்றே லசத்தென லாகு மறுப்பினும்.

(இ-ள்.) நானென்பது யாதோர் உபாதிவடிவுமல்லாததால் ற்றை முற்றுங் களைந்து தரிசிக்கில் அது சத்தெனப்படும், பாது சித்தென்னும் இலக்கணத்தையும் எற்குமாகில், அங் ஏலாதாகில் சத்தெனல் அசத்தெனப்பெறும், எங்ஙனனும்.—எ-று.

சத்து சித்தாகாவிடத்து வேறும்; வேறுயின் அசத்தெனப் படுமென்க. (நச)

அயல்போற் றன்னையு மறிதற் பாலது
நானென லறியார் மிசைத்தே யசத்தெனல்.

(இ-ள்.) தனக்கயலே அறிவதுபோலத் தன்னையும் அறிதற்பாலது நானென்று நிலை; இஃது அசத்தெனப்படல் தன்னைத்தானறியார் மேலதாகும் இக்குற்றம்.—எ-று.

உள்ளவாறறிந்தார் அன்றென்பது கருத்து. (நரு)

சத்திலக்கணம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - ககச.

---

நான்காவது

# சித்திலக்கணம்.

சித்தென றனைத்தா னறிவ தன்றியுந்
தானே தானு விளங்கலு முரித்தே.

(இ-ள்.) சித்தென்னும் இலக்கணமானது, தன்னைத்தானறிவதன்றியும் தன்னால் தான் விளங்குவது முரியதாகும்.—எ-று.

வேறென்றாலல்லாது தன்னால் தானுணர்வதும், விளங்குவதுமென்பது கருத்து. அயலை விலக்கிற்று. (க)

அயலா லறிதல் விளங்குவ தனைத்துந்
தத்தமக் கியைந்த காரண மகலாத்
திறத்தின் னேய சத்தெனக் கியையும்.

(இ-ள்.) மற்றொன்றால் அறிவதும் விளங்குவதுமாகிய யாவும் தத்தமக்கியைந்த காரணங்களினு நின்று நீங்காத்தன்மையினால் அசத்தெனப்படுவதற்கே யுடன்படும்.—எ-று.

ஏகாரம் எஞ்சிநின்றது. எனவே தானெனல்மாத்திரம் அயலையுங் காரணத்தையும் ஏலாதென்பது கருத்து. (உ)

அசத்தென் றியையாச் சத்தென லின்றேற்
சித்தெனப் படுதற் கியையா தெங்கணும்

(இ-ள்.) அசத்தெனற்கியையாத சத்தென்பது ஒன்றிலதேல், அது சித்தெனப்படுதற்கு எங்கணுமியையாது.—எ-று.

தன்னைத்தானறிதற்பாலதாயின் அது சித்தெனப்படும். படவேவேறு சத்தின்றாயிற்று இதுதான் சத்து சித்தொத்தது. (௩)

தன்னாற் றானே விளங்கலு முணர்தலு
மின்றே லசத்து சடமெனற் கிழுக்கென்.

(இ-ள்.) தன்னால்தானே விளங்குதலும் உணர்தலுமில்லையாயின், அதனை அசத்து சடமெனக்கூறற்கு வழுவென்னை.-எ-று.

தானே யமையுமென்பது கருத்து. (௪)

எங்கணு மரிதே லேக மாதல்
சத்துசித் தென்ன லென்னா முடியும்
முடியி லென்பய னெவர்க்கு மெங்கணுஞ்
சொல்லா தொழிதல் சாலவு நன்று,

(இ-ள்.) சத்துஞ்சித்து மேகமாதல் முரணாகவே யமையின், சத்து சித்தெனச் சொல்லான்மாத்திரம் வறிதாக்கூறுவதா யாதாமுடியும். அங்ஙனமுடியின் எங்கணும் யாவர்க்கும் யாது பயன்தரும். ஆதலின் இதனைப் பேசாதொழிதல் மிகவு நன்று.

வறிய சொல்லாற் பயனின்றென்பது கருத்து. (௫)

ஆன்மா சத்துசித் தீசன் சச்சிதா
னந்த மென்னி லிரண்டு சத்துசித்
தாதல் முறையோ விவற்றி னிலக்கண
மறியா ரெனலைக் காட்டிற் றென்ப.

(இ-ள்.) ஆன்மா சத்து சித்தெனவும், ஈசன் சச்சிதானந்தமெனவுங்கூறில், சத்திரண்டுஞ் சித்திரண்டுமாகவாதல் முறைமையா. இவற்றின் இலக்கணத்தைச் சற்றும் அனுபவித்தறியாரெனலே அவர்மொழி காட்டிற்றெனச் சான்றோர் கூறுவர்.—எ-று.

அனுபவமின்மையை அவர்மொழி காட்டுங்குறி. (௬)

ஆன்மா சத்தெனி லீசசத் தெதற்கோ
உணர்த்தற் கென்னி லங்ஙன மங்ஙன
மேற்செலா தொழிதற் குறுதி யென்னை
கூடா தென்னிற் பிறனு மொழிபவன்
குதர்க்க மென்னி லவனு மறைவன்
ஆதலி னன்றே பேசா திருத்தல்.

(இ-ள்.) ஆன்மா சத்தெனின், ஈசசத்து யாதுக்கோ. ஆன்மாவுக்கு உணர்த்தற்கெனின், அவ்வாறவ்வாறு மேன்மேற் செல்லாதொழிதற்குறுதி யாதுளது. சத்துக்குச் சத்தென வரம்பின்றிக்கூறுதல் கூடாதென்னையாயின், நீயு முதலில் சத்துக்குச் சத்தெனக்கூறுதல் கூடாதென்பன் பிறனும். இது குதர்க்கமென்னில் அவனும் அங்ஙனங் கூறுவன். இங்ஙனம் வரம்பின்றிச் சேறலாற் பேசாதிருத்தல் மிகவு நன்று.—எ-று.

அறிவுக்கறிவு செய்யுமெனின், அந்த அறிவுக்கந்த அறிவுக்கென வரம்பின்றிச்செல்லும்; செல்லின் அவத்தாதோடந்தானே சம்பவிக்கும், இதைவிடப் பேசாதிருத்தல் நன்கு மதிப்பென்றாயிற்று. (எ)

ஆன்ம சத்தி னெல்லை யெட்டற்
கறியா விடத்திவ் வாத மாகும்.

(இ-ள்.) ஆன்மசத்தினெல்லை எட்டியளத்தற்கு அறியாவிடத்து இவ்வாதமுண்டாகும்.—எ-று.

ஆன்மவெல்லையறியாதார்க்கு இவ்வாதத்தால் என்பயனென்பது கருத்து. (அ)

உபாதி யன்றே லான்மா வெனலெஃ
தறிவெனி லகல நீள வெல்லை
யுளதேற் போதி யுளதென் றேற்பம்.

(இ-ள்) உபாதிரகிதமாயின் ஆன்மாவென்பது யாது. அறிவெனில், அதற்ககலநீள வெல்லையாது? உண்டாயினதற்கப்பால் எல்லையுளதாகும்; உண்டாயிற் போதியுளதென்றேற்பம்.

தன்னெல்லையெட்ட அறியார் அயலைப்பேசி என்பயன். (௯)

அனுபவ மின்றிச் சொல்லா லென்பயன்
அவல மன்றித் துய்த்த லிலேயே.

(இ-ள்.) அனுபவமில்லாமற் சொல்லுஞ் சொல்லால் யாது பயனெய்தும், அவலமேயன்றிப் பயனுகத் துய்த்தல் யாதுளது; இல்லையே.—எ-று.

சித்தே சத்தென்றறியிற் சத்தே சித்தென்றறிதற்குத் தடையென்னை? இம்முறை தெரியிற் பேரறிவு சிற்றறிவெனப் பேதித்து வழக்கிடுவதற்கு ஏதென்னை? இங்ஙனம் வழக்கிடுவதெல்லாங் கல்விவலியாலன்றி அனுபவவலியால் கிஞ்சித்துமன்று. பிறர் வியக்கவன்றித் தனக்கோர் பயனுமின்று. (க0)

தன்னையெட் டறியார் பரமெட் டறியார்
சச்சிதா னந்தம் பரமெனி லாங்கே
அறிந்தத் னைத்தனிக் காட்டல் வேண்டும்
இன்றேற் றனதனு பவமா கும்மே.

(இ-ள்.) தன்னளவையெட்ட வலியும் வகையுமில்லார் எங்ஙனம் பரத்தினளவை எட்டறிவார். அனுபவிபோற் சச்சிதானந்தமே பரமெனில் அங்கே அங்ஙனமாக அறிந்த தன்னையகற்றி வேறுகவிருக்கக் காட்டவேண்டும் அங்ஙனங்காட்ட வலியின்றேற் சச்சிதானந்தமாக விளங்கல் ஆத்மசொருபமாகும்; அன்னியமன்று.—எ-று.

தற்பிரதிபலனஞ் செகமென்றறியார் சிவத்தை எங்ஙனமறிவார். இவரை ஞானியெனல் பேடியை வீரனென்றுற்போலும். இவரையேற் பாரிவரினும் விவேகியர். (கக)

எவ்வெவ் வனுபவ மெவ்வகைத் தாயினுஞ்
சத்தே சித்தாய்ச் சித்தே சத்தாய்
நிற்பது காண்பா ரவர்ஞா னியரே.

(இ-ள்.) சுவானுபவம் எவ்வெவ்வகைத்தாயினுஞ் சத்தே சித்தாகவும், சித்தே சத்தாகவும் நிற்குநிலை காண்போரே ஞானியெனப்படுவர்.—எ-று.

இங்ஙனங்காண் வகையறியார் போலிஞானியர். (கஉ)

சிதம்பர மென்னிற் சத்தே சித்தாம்
அன்றெனி லம்பர மென்ப தென்னை
சித்தே சத்தா மன்றெனிற் பிறவின்
குழுவ தாகு மென்மனார் புலவர்.

(இ-ள்.) சிதம்பரமெனக்கூறுங்கால் சத்தே சித்தாகும், ஆகாதெனில், ஏனைய விண்குழாங்களிலொன்றாம்; என்றறிஞர் கூறுவர்.—எ-று.

இதற்குதாரணம்—தத்தமிற்காண்க. சிதம்பரமல்லாச் சகமாதிமூன்றும் உணர்த்தத்தக்க வலியுளோர் சோதனைமுகத்தால் இல்லை யெங்கணுமென்ப. (௪௩)

சிதம்பர மொன்றே பலவென வெல்லாம்
ஆடு தழையினை மேய்வ தொக்கும்
அன்றேற் றன்னைக் கண்டவ ரல்லர்
எத்திறத் தானு மென்மனார் புலவர்.

(இ-ள்.) சிதம்பரமென்பதொன்றே, பலவெனக்கூறுவதெல்லாம் ஆடு தழைமேய்வதொக்கும். அவ்வுவமை யேற்றற்பால தன்றெனில், எவ்விதத்தானுந் தன்னைத்தான் கண்டவரல்லரெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

எனவே சிதம்பரப்போலியைச் சிதம்பரமென்பதொன்றாயிற்று. ஆகவே பொருளைப் பொருளாகக்கொண்டிலதென்பது பெற்றாம். இது சத்தே சித்து, சித்தே சத்தெனற்குச் சற்றும் பொருந்தாது. ஒன்றெனல் பொருந்தும். (௪௪)

சத்தெனல் வியாபகஞ் சித்தெனல் விளக்கம்.

(இ-ள்.) சத்தெனப்படுவது வியாபகம், சித்தெனப்படுவது விளக்கம்.—எ-று.

எனவே வியாபகவிளக்கமே சத்துசித்தெனப்பட்டதென்க.

வியாபக வடுக்குக ளனேக மிருவோ
வியாப்பிய மென்னற் குடன்படா தெவர்க்கும்.

(இ-ள்.) வியாபகமென்னு மடிக்குக ளெண்ணிறந்தனவாய் நிற்கும். இந்த வியாபகமோ எத்திரத்தினாலும் வியாப்பிய மென்னற்குச் சற்று முடன்படாதியையும்.—எ-று.

அர்த்தவாதத்தாலன்றிச் சொல்வாதத்தால் வரையறைபடா தென்பதருத்தாபத்தி. அவ்வடுக்குகள் சோதனையில் விளங்கும்.

விளக்க வடுக்குக ளனேக மிதுவோ
உபாதி ரகித குறிகடந் ததுவே.

(இ-ள்) சடமாயுஞ் சித்தாயும் விளங்கும் விளக்கவடுக்குக ளெண்ணுட் புகுவனவன்று ஆயினிவ்விளக்கமோ உபாதிரகித மாயுங் குறிகட்கடங்காததாயுமென்று மெங்கணு மொருதகைத் தாயும் விளங்கும் விளக்குமே.—எ-று.

தக்க குருவின்றி இது காணுதென்க. (கஎ)

இங்ஙன மாய வியாபக மன்றி
விளக்கமிவ் விளக்க மன்றி வியாபக
மில்லை யதனுற் சத்தே சித்து
சித்தே சத்தெனப் பட்ட தென்ப.

(இ-ள்.) இங்ஙனங்கூறிவந்த நிலையினதாகிய வியாபகத்தை யன்றி விளக்கமும் இவ்விளக்கத்தையன்றி வியாபகமு மெங் கணுமில்லை அதனுல் சத்தே சித்தெனவுஞ், சித்தே சத்தெனவுங் கூறப்பட்டதெனச் சத்துக்கள் சொல்லுவார்கள்.—எ-று.

இந்நிலைவிட்டவிடத்து வறியசொல்லாய்முடியும். முடியவே வேதாந்தம் பயனிலதாகக்காணும். காணவே முனம்போல பல மதங்களிற்சென்று கெடுவர். (கஅ)

இந்நிலை யதனை யறிவென லன்றி
வேறு நிலையென தன்றென மொழிப.

(இ-ள்.) இங்ஙனமாய நிலையை யறிவென்பதேயன்றி இதற்கு மாறுய நிலைகளைக்கூறுதல் அறிவாகாவென்று சத்துக்கள் சொல் லுவர்.—எ-று.

இந்நிலையறிவி னிசவடிவெனக் காண்க. (கக)

இங்ஙனம் விளங்கி லறிவ தாகும்
அன்றே லின்ப மயல தாகும்.

(இ-ள்.) இங்ஙனம் ஏகமாகவிளங்கினால் அறிவெனப்படுவ தாம். விளங்காதாயின் அறிவெனல் வறிய சொல்லாய் முடியும்; முடியின் முன்போற் பிரியமும் அன்னியமாகும்.—எ-று.

வியாபகவிளக்க தரிசனமும் ஏகமாக விளங்கலுமில்லாவிடத் தறிவெனச் சொல்லாதொழிகவென்பது கருத்து. இங்ஙனங் கூறித்திரிவோர் உணர்வு வளர்ப்பவரன்று உடல்வளர்ப்போ ரெனக் கூறவேண்டுமோ. (உ0)

இங்ஙன மாய நிலையைக் காண
விழைகுவோ ரறிவ தாகுவ ரின்ப
மயல தாகார் சத்தியஞ் சத்தியம்.

(இ-ள்.) இவ்வாறாய நிலையைத் தரிசிக்கத் தரிசப்படுவோ ரே அறிவு வடிவமாவார் சுகமுந்தாகுவர் இது சத்தியஞ் சத்தியம். முன்போற் பிரியமயலாகார்.—எ-று.

பிரியம் அயல் ஆதலினால் அன்றேற் பிறவிமாறாமை. (உக)

வியாபக விளக்க மாகிற் சுகமே
யறிவ தாகு மறிவே சுகமாம்
அன்று தானெனல் காணப் படுமே.

(இ-ள்.) வியாபக விளக்கமாக விளங்கில் சுகவடிவமாம் அச் சுகமே அறிவாகவும் அவ்வறிவே ஆனந்தமாகவு நிலையுறும். அங் ஙனம் நிலையுறினன்று தான்றானெனும் நிலையுள்ளவாறு காணப் படும்.—எ-று.

அன்றேற் சொல்லாய் முடியும். (உஉ)

சித்திலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - கஉள.

---

ஐந்தாவது

## ஆனந்தவிலக்கணம்.



கடபட மெய்யெனக் காண்ட லென்னு
வனைத்தையுங் காண்ட லகறல் மயக்கறல்.

(இ-ள்.) தோற்றமாகிய கடபடங்களை மெய்யெனக் காணு மாறுபோன்று, உருவம்அருவம் ரூபாரூபமாகத் தோற்றுவஅனை த்தையும் மெய்யெனக்காண்டலினின்று நீங்கல் பிராந்தி நீக்க மாம்.—எ-று.

இது மருணீக்கமாதலின் இருணீக்கம் வேறு கூறுவதற்கு இடமின்றென்க. (க)

(அதுவே) சத்தெனத் தகுஞ்சித் தாக விளங்கலின்
மாசறு காட்சி யெனல்வே றிலையே.

(இ-ள்.) அந்தப்பிராந்தி நீக்கமே சுயம்பிரகாசமாக விளங்க லின் சத்தெனற்பாலதாம். இதனினும் மாசறு காட்சி வேறுள தாகக் காட்சியாதியளவைகளால் உணர்ந்திலம். ஆதலின் வே றில்லை —எ-று.

எனவே மாசறுகாட்சியே சுகநிலையெனப்பெறும். வேறன் றென்க. (உ)

அறியாமை தன்னை யறிவெனக் கோடற்
கியையா விடத்த திச்சுக மெனலே.

(இ-ள்.) அறியாமையை யறிவெனக் கோடற்கியையாமை யே இச்சுகமெனக் கொள்ளப்படுவதாம்.—எ-று.

அறியாமையை அறிவெனக்காணாமையே சத்தாதலின் அது வே ஆனந்தமெனப் பெற்றதென்க. (௩)

அல்லதைத் தானென லறியாமை யாகும்.

(இ-ள்.) தானல்லாததைத் தானெனக்கோடல் அறியாமை யெனப்படுவதாம்.—எ-று.

அறியாமையி னிலையிலை யதென்பது. (ச)

சுகம தென்ன லறிவ தாகல்
அல்ல பிறவய லாத லானே.

(இ-ள்.) சுகமெனப்படுதல் அறிவேவடிவாகி நிற்றல், மற்ற சுகமெனப்படுவனவெல்லாம் அறிவுக்கயல்வடிவா நிற்றலிற் சுக மல்ல துன்பமே.—எ-று.

துன்பம் இன்பம்போற்காண்டலின் அல்ல பிறவெனப்பட்டது. தானல்லதைத் தானாகக்கொள்ளுங்காறுந் துன்பமேயன்றி இன்பமன்று. இன்பமெனின் தன்கோணல் அறியார்போலும்.

அல்லதை யாமெனல் சிற்றறி வின்ப
மல்லதை யன்றெனல் பேரறி வின்ப
மகம்புற நாட்ட மன்றி யிவையு
மறிவை யன்றி நாட்ட மிரண்டு
மின்று கலினுண் டெனல்கற் பிதமே
யிதற்கு மாறு விசைத்தெ னான்மா
சச்சிதா னந்த மெனற்கிழுக் கெவனே.

(இ-ள்.) தானல்லாததைத் தானென்னல் சிற்றறிவெனவும் சிற்றின்பமெனவுங் கூறப்படும். தானல்லாததைத் தானன்றென முழுதுங்களைந்து நிற்கையே பேரறிவெனவும் பேரின்பமெனவுங் கூறப்படும். இங்ஙனமாய பகுப்புகள் அந்தர்முக நாட்டமும் பகிர்முக நாட்டமு மின்றேலின்றும், இவ்விருவகை நாட்டமு மறிவையன்றி யில்லை. இன்மையாதலின் இதனைச் சற்றும் யோசியாதுண்டெனக் கோடல் கற்பிதமென்றே யகற்றப்படும். இதற்குமாறாக வாதித்தென்பயன். பயனின்றாகலின், ஆன்மா சச்சிதானந்த மென்பதற்குத் தடையென்னையுண்டு.—எ-று.

எனவே, ஆன்மாவாகிய வறிவையன்றி யிருவகைநாட்டமும், இவ்விருவகை நாட்டமன்றி யிருவகையறிவு மிருவகை யின்பமு மெங்ஙனமுண்டாம், இன்றாதலி னான்மா சச்சிதானந்த மெனப்பெற்றாம். இதனை மறுத்தல் இவ்வாரம்புகடப்பதாக வேண்டும், தான் கடக்கிறு மதுகடவாதாதலிற் கோடல் தகுதியென்க.

(௫)

தனைத்தா னறியார் கூற்ற மென்பயன்
அறிவின்ப பேதமு மன்ன தாகும்.

(இ-ள்.) தன்னைத்தா னின்னையதென் றறிய வகையில்லார் கற்றுப்பேசும்பேச்சால் யாதுபயனுண்டு. அவர்கூறு மறிவுபேதமு மின்பபேதமு மத்தகையதேயாம்.—எ-று.

அவர் சித்தாந்தம் குருடர் யானைகண்டு வாதிக்கும் சித்தாந் தம்போல்வது. (௭)

அறிவய லாகி லனைத்து மாறும்
அன்றேற் கேட்ப தெவனோ விலையே.

(இ-ள்.) அறிவன்னியமாக நிற்கிற் சமஸ்தமு மங்ஙனமாகவே மாறுநிற்கும், அங்ஙனமாகாது தானே தானாக நிற்கில் அனைத்து நிதானமா நிற்குமெனலைப்பற்றி யொருவனைக் கேட்பானேன் வேண்டுவதின்றே.—எ-று.

அறிவு, நிதானம். உடல், கோணல். அறிவுகோணலாயினனைத்துங் கோணலென்றும். அறிவு சோபாதிகமன்று நிருபாதிகமாதலி னிதானமென்றும். நிதானமெனல், அகண்ட பரிபூரண சொப்பிரகாசமெனலே. (அ)

நிதானமே யின்ப மன்றேற் பிறிதெனல்
என்னுயர் வாயினு மிலேசம தாகும்.

(இ-ள்.) நிதானமாவது இன்னநிலையதென்றும், அங்ஙனமாவதே சுகமெனற்பாலது; அங்ஙனமாகாவிடிற் பிறிதின்பமெனற்பாலது. இஃதென்னுயர்வினதாயினும் நிதானசுகவிலேசமதா முடியும்.—எ-று.

இங்கே லேசமென்றது-அகண்டநிதானந்தன்னை, அவைசாம்பற்றியாதலினென்க. (௯)

சிறிது பெரிதறி வெனது மின்பமு
மொன்றிலொன் றில்லை தானென வின்றேல்
அவ்வறி வின்ப மயலா காதே.

(இ-ள்.) சிற்றறிவு பேரறிவென்பதும், சிற்றின்பம் பேரின்பமென்பதும் ஒன்றிலொன்றில்லை, இவற்றைச் சாட்சியாக நின்றறியுந்தானில்லையோ, தானாகிற அறிவும் இன்பமும் அங்ஙனமாகாது அன்னியமாகாததனால்.—எ-று.

தானவது அறிவானந்தமேனும் அவையன்று மாறுவதாலென்க. இது குருமுகத்தாலன்றி விளங்காது. (கo)

தானெனல் சங்க மசங்க மன்று
அசங்க மென்னல் சங்கம் பற்றி.

(இ-ள்.) தானென்பது சங்கமும் அசங்கமுமன்று; அசங்கமெனக்கூறுவது சங்கமன்றெனலைப்பற்றி.—எ-று.

தான் சங்கமானாலன்றோ அசங்கமாகலாம், ஆனதுபோலவும் ஆகாததுபோலவும் அகன்றதுபோலவுந் தோற்றுவதேயன்றியுண்மையன்று. இதனை இருவகைச்சமாதியாலன்றி அறியக்கூடாது. (கக)

இங்ஙன மாகத் தானெனல் தெளியி
னிரதி சயானந் தமதெனல் காணும்
அன்றேற் பிறவிது வெனினுமா காதே.

(இ-ள்.) இவ்வாறு நன்கு விளங்கத்தானெனலைத் தெளியின் நிரதிசயானந்தமென்பது காணும். இங்ஙனந் தெளியாவிடத்து இயைந்த நிலைக்குத்தக்க பிறவின்பமாம். அறியாததனை இவ்வின்பந்தானெனக்கூறினும் எங்ஙனமாகும், ஆகாது.—எ-று.

ஒன்றையொன்றாகக்கோடல் மயக்கம்; இதுவே பெரும்பான்மை. இவரைக்காண்டல் எவர்க்குமெளிது, அவரரிது. (கஉ)

விடய மான்மா வாகிலவ் வின்பமு
மாகு மன்றே லாகா தயர்பா
மாகிலவ் வின்பமு மாகு மன்றே
லாகா தான்மா சுயசுகம் யாதா
யமையு மெனலை யறையா தென்றே
அறிவான் தன்னைத் தானெனக் கண்டோன்

இவனே ஞாயஞ் சோதனை யிகலான்
இகந்தான் மகிமை யென்னுயர்ந் தென்பயன்.

(இ-ள்.) ஆன்மாவே விடயமாகில் அவ்விடயானந்தமே தானு கலாம். அயலாதலின் ஆன்மாவே விடயமாகாதெனின், தான் விடயானந்தமாகாது. ஆயின் ஆன்மாவே மேலாய பரவடிவ மென்னிலோ, அப்பரமானந்தமே தானுகலாம். அயலதாதலின் ஆன்மாவே பரமாகுமா? ஆகாதெனின், தான் பிரமானந்தமா காது. இவ்விருவித இன்பமும் ஆன்மாவுக்கு வேருயின், சுய சுகந்தான் யாதாயமையும்? என்பதைப்பற்றி ஒருவருங்கூருதது என்னைகொலோ யாமறியோம். சுயசுகமறிவான் யாவனே அவ னே தன்னைத்தானெனக் கண்டோனுவன். இவனே ஞாயஞ் சோதனை இகலாதோன், ஒருவினேன் மகிமையிலென்னுயர்ந்து மென்பயன்?—எ-று.

கீழ்-விடயம், மேல் - பிரமம். இவ்விருமயமாதல் ஆன் மாவாதலின் இவையன்று. இவ்விருவகை இன்பமுந்தானன்று. ஆகாதபோது தனக்குச் சுயசுகந்தான் யாதென விசாரம் வருமன்றே, வந்தது எங்குங்காணேம்; காணுதபோது மகிமையால் என்னுயர்ந்தும் என்பயனென்ருர். (௬௩)

ஆன்ம சுயசுக மென்ப ரயலே
ஆன்ம சுயநிலை யெங்ஙன மறிவர்
அறிந்தன மென்னி னிழுக்குறு மென்ப.

(இ-ள்.) எவ்வாறுயர்ந்த பிரமானந்தமாயினும் அயலென்றறி யாது ஆன்மாவின் சுயசுகமென்பர், இவர்கள் எங்ஙனம் ஆன்மா வின் சுயவடிவைக் காணவல்லார்? யாமறியவல்லாரானேமெ னின்,அது முழுதும் வழுவாய் முடியுமென்று அறிஞர்கூறுவர்.

அயலைச் சுயசுகமெனின் அன்னியோன்னியா பாவந் தானே யுறுதலின், இழுக்குறுமென்ருர். (௬௪)

ஆன்மா போல்வ தனேக மாதலி
னெங்ஙனந் துணிதல் சோதனை யன்றித்
துணியி னனிர்த மாநி யெய்தும்.

(இ-ள்.) ஆன்மாபோல்வது அனேகமாதலிற் சோதனைமுக த்தாலன்றி எங்ஙனம் இஃதுண்மையெனத் துணிதல்; ஆயாது துணியின் அனிர்தசட துக்கமாகமுடியும்.—எ-று.

எனவே, தக்க சோதனையில்லாதவிடத்து எங்ஙனம் உண்மை விளங்குமென்றாயிற்று. (கரு)

என்று மகலா ஞெப்திப் பிரிய
மல்லா வுயிர்பர மெங்கனு மில்லை
கற்பித மதனு லுயிர்பர மன்று
தெளியி னிவ்வண மான்ம சுயசுக
மன்றே விளங்கு மறுதி யீதே.

(இ-ள்.) எப்போதும் அகலாது நின்றுள்ள ஞெப்திப்பிரியம ல்லாத உயிரும் பரமும் எங்குமில்லை. இவ்விருவருங் கற்பித வடிவமாதலால் ஞெப்திப்பிரியமாகார். இவ்வாறு தெளியின் ஆத்மாவின் சுயசுகம் அக்கணமே விளங்கும். இதனினு முடிவி ன்று.—எ-று.

அறுதியீதெனவே ஏனையவை போலியென்றாயிற்று. (கசு)

சுழுத்தி போன்ற சுகநிலை யின்றேல்
நனவில் சுழுத்தி நனவிற் சுழுத்தி
யென்றிரு பாற்று மியலு மென்ப.

(இ-ள்.) சுழுத்திபோன்ற சுகநிலை யில்லையெனின், நனவில் லாத சுழுத்தி, நனவிலெழுஞ் சுழுத்தியென்று இருவகைப்பாகு பாடுடையதாய் நடக்குமென்று அறிஞர் சொல்லுவர்.—எ-று.

சுழுத்தி அனேக பாகுபாடுடையவாயினும் அவற்றின் சுகமு மற்றே. இவையனைத்துஞ் சுருக்கியே இருவகையென்றும். கஎ

(அவற்றுள்) நனவில் சுழுத்தி சுகமென னனவு
நழுவிய சுழுத்தி சுகமென லாகும்.

(இ-ள்.) நனவில் சுழுத்தி சுகமென்பது - நனவு நழுவிய சுழு த்தி சுகமெனப்படுவதாம்.—எ-று.

நனவில் சுழுத்தி-வினைத்தொகை. (கஅ)

அனுதின சுழுத்தி மூர்ச்சை மரணம்
பலவகைப் பிரளயஞ் சர்வசங் கார
மாதி யாகு நனவில் சுழுத்தி.

(இ-ள்.) நனவில் சுழுத்தி சுகமானது தினசுழுத்தி-மூர்ச்சை, மரணம், பலவேறு விகற்பமாயுள்ள பிரளயம், சர்வசங்கார முதலிய பேதங்களாம்.—எ-று.

இவையனைத்திலும் நனவில்லாததால் நனவில் சுழுத்தியெனப் பட்டது. பலவேறு வகைப்பட்ட பிரளயம், தனித்தனி ஒவ்வோர் பூதத்தாலாயது. ஆதியென்றமையான் யாதோர் காரணமின்றித் திடீரென்றவாந்தரமாக எய்துபவெல்லாங் கொள்க. சர்வசங்காரம்-சூக்குமப்பிரளயம். எனவே ஏனையவை நாலப் பிரளயமென்றாயிற்று. இவையனைத்துஞ் சுகம்போறலிற் சுழுத்தி சுகமென்றும். இவையகன்ற உயிர்களில்லையாதலின் இச்சுகங் கூறவந்ததென்க. (கக)

நனவிற் சுழுத்தி யொன்றே யலபிற
தோற்றினும் பூர்வ பக்க மெய்தும்.

(இ-ள்.) நனவிற் சுழுத்தி சுகமென்பது ஏகமே. ஏனையவோ நனவிற் சுழுத்திபோல்தோற்றினும் பூர்வபட்சமெய்தற்பாலதினல்லதாகா.—எ-று.

சச்சிதானந்த விலக்கணத்திற்குச் சற்று முரணுதலைமையதலின் நனவிற் சுழுத்தியொன்றேயென்றும். நனவிலெழுந்த சுழுத்தியாதலின் லகரந்திரிந்தது. இது வேற்றுமைச் சந்தி. (உ௦)

வியாபக விளக்கஞ் சத்துசித் தென்றும்
தாதான் மியஞ்சற் றிழுக்குரு வயினே
யந்நிலை நனவிற் சுழுத்தி சுகமே.

(இ-ள்.) வியாபக விளக்கமே சத்து சித்தென முன்னர் கூறினும். வியாபகமே விளக்கம், விளக்கமே வியாபகமென்று ஐக்கியஞ் சற்று முரணுவிடத்து. ஆதலின் அத்தகைய தாய நிலையே நனவிற் சுழுத்தி சுகமாம் வேறன்று.—எ-று.

ஏகாரமெஞ்சிநின்றது. தாதான்மியம்-ஐக்கியம். வேறுபடின் நனவிற் சுழுத்தியெனல்-போலியை. அத்துவிதானுபவியன்றி ஏனையோர் கூறுஞ் சச்சிதானந்த முரணுதலின் இழுக்குருவயி னெனப்பட்டது. (உக)

கற்றுரைப் பதினு மனுபவ நன்று
பாவா பாவ மின்மை யானே.

(இ-ள்.) தனக்கயலாய நூல்கள் பலவாகக்கற்று நனவிற் சுழுத்தியென்றுரைத்துத் திரிவதினுந் தானுகிற வேட்டைக்கண்டு அனுபவிக்கு மனுபவஞ் சாலவுநன்று. பாவாபாவங் கழன்றதாதலின்.—எ-று.

தன்னைத் தானுள்ளவாறு காணுமளவும் பாவாபாவவடுக்குகள் அகலாவாதலின் பாவாபாவம் இன்மையானே யென்றார். இவ்வடுக்குகளை ஆருதாரங்களிலுங் காணலாம். இவற்றையே ஆதத்துவா மூர்த்திகளென்பதென வறிக. (உஉ)

தற்பா வமதே யாறத் துவாவும்
பண்ணிப் பண்ணிக் கலைத்த லெய்ப்பே
சுகம தென்னல் தற்சுக மறியார்.

(இ-ள்.) தன்னைத்தான் அயலாகப் பாவித்துக்கொள்வதே ஆறத்துவாமூர்த்திகளுமாம். இவற்றுலாய பயமே தன்னையே கணேசராதியாகப் பண்ணிப்பண்ணிக் கலைத்தலாகிய எய்ப்பேசுகமென்பது. இதனை மெய்யென்றேற்பார் தற்சுகமறியார்.

இங்ஙனம் பாவித்து மெய்யாக மனத்தால் ஆருதாரத்திலும் வந்திப்போன் கிரியாயோகி. பரிபூரணமான சிவத்தை ஆருதாரமூர்த்திகளாக ஆங்காங்கு பண்ணி யழித்துவருதல் மகாபாவமென்போன் சிவயோகி. தன்னைத்தானே ஆருதாரமாகவும், மூர்த்திகளாகவும் ஆங்காங்கு பண்ணிக்கலைத்தல் தனது கற்பிதமென்போன் வேதாந்தி. இம்மூன்று நிலைகளுள் யாது உண்மையெனத் தெளிவோர் இம்மூன்று நிலைகளையும் விதிப்படிசெய்து கழன்றோர்; ஏனையோர் கணிக்கத் தகுதியரல்லர், ஆயினும் அந்தந்த பரிபாகத்திற்கு அந்தந்த நிலையின்றி யமையாதாதலின் வேண்டுமென்க. எனவே தனது கற்பிதமெனக்காண்டலே நனவிற்

சுழுத்தி சுகமெனற்பாலதென்றுமயிற்று. இதனினு மேலாய சுக மின்றென அனுபவத்தாற் காண்க. (உ௬)

தன்னை யன்றிச் சச்சிதா னந்தம்
வேறெனக் காணல் விவர்த்தம தாகும்
ஆங்காங்கு காணுந் தனைவிட் டதறல்.

(இ-ள்.) விசாரிப்போன் தன்னையன்றிச் சச்சிதானந்தம் வேறெனக் காண்டல் பயனற்றதாயமையும். யாதினாலெனில், தானிதுவே இறுதிநிலையென ஆங்காங்குகாணுந் தானிருத்தலின் தன்னை யாராய்தலின்றித் தன்னைத்தான் விட்டுவிட்டதறல். சிவானுபவ நவநவ விநோதமனைத்துங் கண்டு வியந்து களிப்பது தானாதலின் தன்னை விசாரித்துத் தெளியாதவிடத்து முடிவின்றிச் சேறலால் விவர்த்தமதாகுமென்றார். தானிலாவனுபவ மின்றாதலால் முந்தித் தன்னைத்தான் விசாரித்துத் தெளியின் ஆங்கே முடிவுபெறுமென்பது கருத்து. (உ௭)

அறிவு தரிசன மானந்த மலபிற
சொல்லா னினைவாற் பயனிலை யென்ப.

(இ-ள்.) எல்லா நூலு முடிவாகக்கூறுவது அறிவொன்றையேயேனும் அதனை யுள்ளவாறு தரிசிப்பதே ஆனந்தப்பேறு, ஏனைய தரிசனமனைத்தும் போலிப்பேறு. ஆதலின் அறிவெனச் சொல்லானும் நினைவானுங் கோடலிற் சற்றும் பயனின்றெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

அறிவொன்றே யுண்மையென நிச்சயித்தல்-பரோட்சம். நிச்சயித்தவண்ணந் தரிசித்தல்-அபரோட்சம். அங்ஙனந் தரிசியாவளவுந் துக்கநிவிர்த்தியுந் தடையற்ற ஆனந்தமு மெய்தற்பாலதன்று. ஆதலின் அபரோட்சஞானமின்றி யமையாதென்க. உரு

விளக்க மயலேல் வியாபகந் தனக்குப்
பிரியமு மயலாம் விளக்க மதற்குச்
சச்சிதா னந்த மெனற்கிழுங் குறுமே.

(இ-ள்.) அறிவாகிற வியாபகத்துக்குச் சிற்பிரகாசம் அன்னியமெனின், அந்தச் சிற்பிரகாசத்திற்குச் சிதானந்தமும் அன்னி

யமாகும். இங்ஙனமாயின் சச்சிதானந்தம் ஏகமெனக்கோடற்கு முரணே பயனுமயமையும்.—எ-று.

அனுபவநிலை பேதிக்கச்சொல்லால் ஏகமாக்கி லென்பயன். எனவே வியாபகத்தையன்றி விளக்கமும்,விளக்கமன்றி வியாபகமும் இல்லையென்ற அனுபவமென்று வாய்க்கின்றதோ, அன்றேழும் ஆனந்தந்தான் தடையற்ற ஆனந்தமெனப்படும். பேதிக்கின் அநிர்தசடதுக்கமாக முடியும். (உசு)

வத்து நிண்ணய மிங்ஙன மறியா
ரெங்ஙனம் வழுத்தற் கியையு மென்ப.

(இ-ள்.) வஸ்து நிர்ணயம் இங்ஙனமாவதென்று அறியார்வந்தித்தற் கஃதெங்ஙனம் இயையுமென்று அறிஞர் கூறுவர்.-எ-று.

அங்ஙனம் வழுத்தலாற் பயனின்றென்பது கருத்து. அநிர்தசடதுக்கமாதற்பாலதைச் சச்சிதானந்தமென்று வழுத்தலிற் பயன் - அவலம். இதனை முத்தியென்பர் மதத்தர்; இவ்விலக்கணம் பொருந்தாததற்குப் பொருத்தின் எங்ஙனமியையும்; அவர்குறி நினவின்குறியன்றி வஸ்துவின் குறியன்று; தன்குறியாதஇன்றெலன்க. (உஎ)

தனைத்தான் றெளியிற் றனக்கய லின்றெனச்
சச்சிதா னந்தந் தொருமை காணும்
அன்றே லெதிர தாக வமையும்.

(இ-ள்.) தனக் கன்னியமின்றென ஐயந்திரிபறத் தன்னைத் தான்தெளியின் சச்சிதானந்தத்தொருமை அக்கணமே பழுதின்றிவிளங்கும். தெளியாவிடத்துச் சச்சிதானந்தத்திற்கு மாறுவமையும்.—எ-று.

தெளிதலாவது, ஆன்மாவாகிய தான் அறிவன்றி வேறன்று. அவ்வறிவு எவ்வெவ்வவஸ்தாமயமாயினும் தான் அங்ஙனமாகாமலும், அவைமாறினும் தான் மாறாமலும், அவ்வவ்வதிசயத்தைத் தான் இருந்தவண்ணமிருந்து சாட்சியாய் அறிதலானும், தனது சுயவடிவம் வெளியாயொளியாய் வெறுந்தெரிவே மயமாயிருப்பதினாலும், தான்இங்ஙன மிருப்பதை அறியவேண்

டின் கனவில் தத்துவங்களை யொடுக்க விசுவவிலக்கணமும், கனவில் விசுவத்தோ டியல்பாகவே தைசத விலக்கணமும், சுழுத்தியில் பிராக்ஞ விலக்கணமுந் தோன்றுமாதலினாலும், தான் பகிர்முகப்பார்வையை யொழிக்கத் தானே இவ்விலக்கணமாக விருப்பதைத் தானே அறியலாம்; இஃதன்றியும்; தானே யதுவதுவாகப் பிரதிபலித்தலும், திரிபுடியாதலும், இவற்றை அயலாகக் காண்டலும், இச்சா ஞானக்கிரியை புரிதலும், இது காரணமாகவரும் இன்பத்துன்பங்களை விருப்பு வெறுப்போ டனுபவித்தலும், இவையனைத்துந் தனது மறதியாலாயதென்று அறியாதிருத்தலும், அறிந்து விலகலும், தனது பிரவிர்த்தி நிவர்த்தியெனவுணர்க; தான் ஆனந்த வடிவெனத் தெளிதல் அரிதென்பதாயிற்று. (உஅ)

சத்தே சித்துஞ் சித்தே சத்து
மாகு மவசர மறிவென லதுவே
சுகமென லிதுவே யறிவென லாகு
மாகாக் கடைமுர ணுகு மென்ப.

(இ-ள்.) சத்தே சித்தாகவும், சித்தே சத்தாகவு மயிக்கியமாகு மவசரம் யாதோ அஃதறிவெனப்படுவதாம், அந்நிலையதாகிய அறிவே சுகமெனப்படுவது, இந்தச்சுகமே அறிவெனப்படுவதாம்; இங்ஙனமெல்லாம் ஆகாவிடத்துச் சத்தசத்தாகவும், சித்து சடமாகவும், சுகம்போலியாகவு மமையுமெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

எனவே இவ்வாறுகாவிடத்து முன்போலத் துன்பமின்பமாகக்காணும். (உகூ)

அறிவே சுகமயல் போலி சுகமே
யறிவயல் போலி திறந்தெரிந் துண்மை
யாது நித்திய மதனியல் புணர்த்தும்.

(இ-ள்.) அறிவு வடிவாக விளங்கலே சுகமெனப்படுவது, இதற்கயலாக விளங்கல் போலிச்சுகமாம். சுற்பிதமகிதசுகமே யுண்மை அறிவாம், இதற்கயலாக நிற்குமறிவு போலியறிவாம்.

இந்நிலை பாகுபாடனைத்துந் தெரியுமாறு தெரிந்து நிசவடிவாதல் நித்தியமென்னும் இலக்கணமாம். இனி இதனதுநிலையைக் கூறுதும்.—எ-று.

ஞெப்தியே பிரியம், பிரியமே ஞெப்தியாய நிலையாதோ அதுவே நித்தியமெனப்படுவதன்றி வேறன்று. இங்ஙனமாகாநிலையது நித்தியம்போற் காணினும் நித்தியமென்னவேண்டுமோ. அறிவானந்தமே நித்தியமென்றாயிற்று. (௯௦)

அறிவைச் சுகிக்கி லதுவே நித்தியம்
பிறமா றுவதா லனித்திய மென்ப.

(இ-ள்.) அறிவைத்தரிசித் ததனைச்சுகிக்கிறதே சுகமாதலா லதுவே நித்தியமெனப்படும். பிறவற்றைக்கண்டு சுகிப்பதெல்லாமுன்னர் பிரியமா நின்று அப்பிரியமாக மாறுவதால் அனித்தியமெனற்கே இயையுமெனச் சான்றோர் கூறுவர்.—எ-று.

எனவே, அறிவாகத் திரிபதார்த்தமுஞ் சோதனைக்கியைதலி னறிவினது பிரதிபலனமேயன்றி யதார்த்தமன்று. உயிரெனலறிவு. அஃதுருவன் றருவாகிய சிதாகாயம். சத்தியம். ஆதலி னறிவே நித்தியம் ஏனைய வனித்தியமென்றாயிற்று. சகலம்-அறிவு, ஆனந்தம்-கேவலம், சகலம் - சங்கற்பம், கேவலம்-மூடமாயின் பந்தம், அது முத்தி, ஞானறிவானந்தமாதலே நித்தியமெனற்பாலது, ஏனையவன்றென்க. (௯௧)

சுத்தாசித் தின்ப மொத்த வறிவே
நித்திய மெனலா லதனியல் புரைத்தும்.

(இ-ள்.) சத்தாஞ்சித்து மின்பமுஞ் சற்றும் பேதியாதியைந்தது யாதோ அஃதறிவெனப்படும். அந்நிலையதாய வறிவே நித்தியமெனற் கியைவதால், அந்த நித்தியவிலக்கணத்தி னிலையை இனி விளங்கக்கூறுதும்.—எ-று.

எனவே, சத்தசித்தின்பமாகா தற்பால தறியாமை யென்றாயிற்று. ஆகவே, அவ்வறியாமை வடிவமாகச் சோதனையில் முடிவது சகசிவ பாமெனப்பெற்றாம். பெறவே, இவை யநித்தியமெனவும், அறிவு நித்தியமெனவுந் தானே யமையக்

கண்டாம். தர்க்கமுதலியவற்று லெங்ஙனமறுக்கினும் உண்மை யுண்மையாகவே முடியும். உண்மை-அறிவு. (கூஉ)

ஆனந்தவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - கசூஅ.

---

ஆறுவது

## நித்தியவிலக்கணம்.

நித்தியம் போலக் காண்ட லனைத்துஞ்
சத்தெனற் கியையின் மறுக்கற் பாற்றே
அன்றே லெதிர தாகு மென்ப.

(இ-ள்.) நித்தியம்போலக் காணப்பட்ட சகமாதியனைத்தும், சோதனையிற் சத்தெனற் கியையின்போலவென்பது மறுக்கற் பாலதாகும். சத்தெனற் கியையாதாயின், அநித்தியமெனற்கே யியைதற்பாலதாம் என்றறிஞர் கூறுவர்.—எ-று.

போலிச் சத்தாகா நிலையதறிவாதலின் அதனையே நித்திய மென்றும். (க)

வியாபக விளக்க மல்லா வறிவிலை
யறிவலா தெங்கு நானென வில்லை
நானென லன்றித் திணைபா விடமிலை
கால வெல்லை கடத்தலி னித்தியம்.

(இ-ள்.) அருவமாதலின் வியாபக விளக்கமாக நிகழாத வறி வென்பதே யில்லை. அவ்வறிவல்லாத நானென்ப தெவ்விடத் தினுமில்லை. அந்த நானென்பதை யன்றித் திணைபாலிடமெனல் சற்றுமில்லை. இல்லையாகவே, நானெனல் காலங்கடந்ததாகும். கடத்தலின் நித்தியமெனற் குரியதாம்.—எ-று.

எப்பிறவியு நானெனலன்றி இன்றேனு மாறுந்தைகையதாதலி னானென்பதாகா. ஆவதுபோற் காண்டல் உற்றுணராமையா லென்க. நானெனலறிவு, அஃதருவம், அருவமாகிய தான் தன் னை யுருவமாகக்காணத் திரிபுடியாத்தோன்றுந், தோற்றவே,

காமவெகுளி மயக்கமேலிடும்;மேலிடவே தனது எதார்த்தவடிவ மெங்ஙனந் தனக்குக்காணும், காணாததால் தானெனவின்றே உண்மையி னித்தியமென்றும். உருவமாதல்-பிரதிபலித்தலை.()

உபாதி நோக்காற் பலவா நானெனல்
அறிவு நாட்டந் தன்றே விளங்கல்
பார்வை பேத நானென லன்றே
நித்திய மென்னற் கியையா தென்னே.

(இ-ள்.) நானென்பது தன்னைத்தான் உபாதிகாரணமாக நாடு நாட்டத்தாற்றான் பலவாகவும்,தற்றெரிசனங் காரணமாக அறிவை நாடு நாட்டத்தாற்றான் ஏகமாகவும் விளங்கல் பார்வைபேதமேயன்றி நானெனல் மேற்றன்று. ஆதலின்நானென்பது நித்தியமெனற் குடன்படாததென்னை.—எ-று.

பலவானாலன்றே ஒன்றாகலாம்.ஆதலின் நானென்பது பலவுமன்று ஒன்றுமன்று. இங்ஙனங் காண்டல் பார்வைபேதமன்றி வஸ்துபேதமன்று. பகிர்முகநாட்டம்-பிறவிக்கிடம், அந்தர்முகநாட்டம் - துக்கநிவிர்த்திக்கிடம். பழுதையைப் பாம்பென்றவிடத்தும், அன்றென்றவிடத்தும் அங்ஙனமானது மில்லை, அழிந்ததுமில்லை.ஆனதாகவும்,அழிந்ததாகவுந் தோற்றுவது தோற்றமேயன்றி யதார்த்தமன்று. பழுதை யிருந்தபடியேயிருக்கின்றது. அதுபோல் அறிவுமெனவுணர்க. இந்நிலையனைத்தும் அநுபவத்தாலன்றிப் படித்துவருவதன்று; ஆதலி னெழுதாமறையெனக் காரணக்குறியாயிற்று. (௬)

பூர்வ பக்க மாகாச் சந்தே
நித்திய மென்னற் கிசலா தென்ப.

(இ-ள்.) பூர்வபக்கமாக்கற்குச் சற்று முடன்படாத சந்தேகோ அதுவே நித்தியமெனற்கு மாறாதென்று அறிஞர்கூறுவர்.

எனவே போலிசத்து நித்தியமெனற் குடன்படாதென்பதாயிற்று. ஆக்கினுமென்று மாறாதும். (௭)

நித்திய மென்னல் தனக்கய னென்னைத்
தனைத்தா னறியா மடமை காட்டும்.

(இ-ள்.) தனக்கு அன்னியமா யதை நித்தியமென நிலையுறு த்தல், தன்னைத்தானறியாத மடமையைக் காட்டி-விடும்.—எ-று.

தன்னைத்தான் அறிந்தவர்போல் நித்தியஞ்சாதிக்கு மடமை அவர் பிரளியைக் காட்டிவிடுமென்பது கருத்து. தன்னையறியி ன் றனக்கயலின்றாகலின் பிரளியென்றும். பிரளி-தெரிந்த வர்போ லபிநயித்துப் பேசிக்காட்டல். (௫)

சிற்சோதி மயமே நித்திய நுண்மையி
னுண்மை சிதம்பர மாத னித்தியஞ்
சத்தெனற் கியைவ ததுவே நித்தியம்
ஆனி விர்த்தியே லாமை நித்தியம்
கற்பனை யேலாச் சுயம்பே நித்தியம்
என்று மொருபடித் திலக னித்தியம்
தான யலற்ற ததுவே நித்தியம்
ஆதி யந்த மற்றது நித்தியம்
சுத்த மசுத்த மிறந்தது நித்தியம்
இணைபா லிடமி லாமை நித்தியம்
வாரமில் கால மறுமே நித்தியம்
நினைப்பு மறப்பற் றிலக னித்தியம்
இவையெலா நித்திய மேற்றற் கியைந்த
குறியெனக் காட்டக் கூறிய தென்ப.

(இ-ள்.) சிற்சோதிமயமாவதே நித்தியம், அதிசூக்குமம நுட்ப த்தினு நுட்பமான சிதம்பரமாவதே நித்தியம், அவிரோதமாகச் சத்தெனற்கியைவதே நித்தியம், ஆனிவிர்த்திகட் குடன்படா ததே நித்தியம், தனக்கன்னிய முண்டெனலிறந்ததே நித்தியம், ஆதிமத்தியாந்தரகிதமானதே நித்தியம், சுத்தாசுத்த மிறந்ததே நித்தியம், இணைபாலிடமற்றதே நித்தியம், ஞாயிறு முதலிய எழுவாரமு மற்றகாலமே நித்தியம். சகல கேவல நினைப்புமற ப்பற்றிலகலே நித்தியம்.இங்ஙனமாகக்கூறிய அனைத்தும் நித்தி யமென்பதை யேற்றற்கியைந்த குறியாமெனக் காட்டக் கூறிய தெனச் சான்றோர் கூறுவர்.—எ-று.

இந்நிலைகளெல்லா நித்தியமெனற்பாலதென்பது கருத்து. தனித்தனி கூறினும் விளங்கவேண்டியாதலால் ஒன்றே நித்தியமெனக்கொள்க. இஃதறியாதார் பலவென்பது அர்த்தவாதிய ரன்று. (௬)

மறதி மயமே சகமாதி மூன்று
மென்றுணா ராத மறதி யடுக்கை
யளக்க வறியார் கூறு நித்தியம்
பூர்வ பக்க மாதற் கிழுக்கென்.

(இ-ள்.) மறதிமயமே சகமாதி மூன்றுமென்றுணர வகையறியாத மறதி காரணமாகவரு மறதியடுக்குகளை யளக்கத்தெரியாத சகல கலைவல்லோரும் தெளிந்ததுபோற்கூறு நித்தியவிலக்கணம் எங்ஙனமேனும் பூர்வபட்சமாகுமென்பதற்குத் தடையென்னையுள.—எ-று.

போலியை நித்தியமென்பாராதலின், பூர்வபக்கமாதற் கிழுக்கென்னென்றார். தானினையனெனக்காணு மறதிதவிராததால் தானறிந்த தனைத்து மறதிகடந்ததன்றே யாதலின், மறதியடுக்குகளெனப்பட்டது. இஃது தற்சோதனையில் தெரியும். சகமாதிமூன்றினுள் ஒவ்வொன்றிற்குஞ் சுயம்பிஃதெனக்காண மறதியொழியும். ஒழியவே இம்மூன்றுங் கற்பிதமெனப்பட்டுச் சொப்பனம்போலொழியும். சகங்காரணமாகவருஞ் சங்கற்பங்களும், இதுபோல ஏனைய விரண்டு காரணமாகவருஞ் சங்கற்பங்களு மறதியையன்றியில்லை; இத்தனையு மறதியடுக்குகளாதலால் அளவுக்கடங்காவெனப்பட்டது. (௭)

தன்னிலை மறவா நினைவே நினைவு
பிறவல மறதி வயத்த தாதலின்
சோதனை முகத்தாற் றெரியு மென்ப.

(இ-ள்.) தன்னையுள்ளவாறு கண்டுள்ள நிலையை மறவா நினைவே நினைவெனப்படும். ஏனைய நினைவனைத்தும் மறதியின் வயத்ததாதலி னினைவாகா. இவையாவுஞ் சோதனைசெய்யுங்கால் விளங்கும் எனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

எத்தனை நிலைகண்ட நினைவும் நினைவன்று; தன்னிலைகண்ட நினைவே நினைவெனப்படும். எனவே மறதிமூலமும் நினைவு

மூலமுமறியார் நிச்சயித்த நித்தியம் பூர்வபட்சமாதற் கிடம்பெறுமெனத் தெரிவிக்க விங்ஙனங் கூறியதென்க. (அ)

அல்லதை யொரீஇச் சத்து காணில்
ஆங்கே நித்தியஞ் சுயம தாகும்
அன்றே லெதிர தாக முரணும்.

(இ-ள்.) சத்தல்லாததையெல்லாம் விசாரத்தினாலல்லவல்லவென்று களைந்து சத்தாவதைக்காணின், அக்கணமே நித்தியமென்பது சுயம்பாகவிளங்கும். அங்ஙனங் காணாவிடின் மாறாக விரோதிக்கும்.—எ-று.

சொல்லாலும் நினைவாலு மாயாது சத்தெனக்கோடல் கூடாதெனவே நித்தியமெனக்கோடலுங் கூடாதென்பதாயிற்று. மதத்தர்களுக்கு அந்தர்முகநாட்டமே யில்லை, உண்டேல் தனக்கயலுண்டென்பானேன். அந்நாட்டந் தன்பால் சேறற்கு வலியிழந்தனரெனத்தானே காட்டுகின்றது. காட்டுவதால் அவர்கள் கூறு நித்தியம் நித்தியமெனற்பாலதன்று. பலவிதத்தாலு முரணும். (க)

அறிவின் விநோதங் காணிற் சத்தென
லெட்டுவ தெங்ஙன நித்திய மற்றே.

(இ-ள்.) சிதாகாயத்திற்காணும் விநோதங்கள் எண்ணிலவாம். இதனையே நவநவமாகக்காணில் சத்தென்னு மிலக்கணமுள்ளவாறு எட்டுவதெங்ஙனங்கூடும், கூடாததானித்தியமு மங்ஙனமாகவே முடியும்.— எ-று.

நித்தியமும் என்னுமும்மை தொக்குநின்றது. அறிவின்விநோதங்களை வாசிட்டத்தில் லீலைகதை, காதிகதை முதலியவற்றிற் காண்க. விநோதவசத்தாகில் அறிவினிலை யெட்டுவதரிதாதலின் அதனை விட்டறிவு நாட்டமையாது நிற்கின் சத்து விகற்பமின்றி விளங்கும். விளங்கவே நித்தியமும் அங்ஙனே விளங்கும். இம்முறைதவறில் எதிரதாகக்காணும். (கO)

போலிக் கியையா நித்திய விலக்கணஞ்
சத்தாதி மூன்றும் முரணு விடத்தது
முரணிற் போலி யாகு மென்ப.

(இ-ள்). நித்தியம்போலக்காணும் போலிநித்தியமாதற் குன்படாத எதார்த்த நித்தியவிலக்கணம் யாதோ அது சத்து, சித்து, ஆனந்தவிலக்கண மூன்றும் பேதியாநிலையது. வெவ்வேறாகப்பேதிக்கின் போலிநித்தியமாமெனச் சான்றோர் கூறுவர்.

நித்தியம்போலக் காண்டலின் நான்கபாவத்தையும், போலிநித்தியமென்றும். தற்சோதனை முகத்தாலல்லாத சோதனை நித்திய மத்துவிதிகளல்லாதார்க்குடன்பாடு. எனவே அறிவு பேதமகன்ற நிலையதே நித்திய விலக்கணமென்றாயிற்று. என்றுமொருதன்மையதாதல் நித்தியமெனப்படுமென்க. இதனை அயலிடத்துக் காண்பான் போலிஞானி. தன்னிடத்திற்காண்பான் பரமஞானி. இங்கே தானென்பது உபாதிசகிதத்தையன் றுபாதிரகிதத்தை. சகிதம்-சீவன், ரகிதம்-ஆன்மா என்றுமொருதன்மையதாவது அறிவேனும் அவசரம்பற்றி யிவ்விருபெயர் காரணக்குறியாகவந்ததென்க. இதனை யறியாதாரறிவுக்கறிவென்பர்.()

அறிவன்றிக் காணா ரறியாமை தன்னை
நித்தியங் கண்டார் பிறவெனல் கௌணம்.

(இ-ள்.) அறிவைத்தவிர அறியாமை வேறுளதாக அறியாதாரோ நித்தியவிலக்கணந் திரிபறக்கண்டோர். இங்ஙனமன்றி அறிவுக்கறியாமை வேறெனச்சாதித்தல் கௌணமாகும்—எ-று.

இது கௌணமாகவே இதுகாரணமாகச் சாதிக்கும் நித்தியமுங் கௌணமாமெனப்பெற்றாம். கௌணம்-அவசரமுக்கியத்தை. வேறெனல்-சீவனறியாமையெனவும், பரமறிவெனவுங் கோடலை. இங்ஙனங்கூறுதல் உபாதிரகிதநாட்டத்தானன்றெனக் குறிக்கின்றது. சகிதத்தை ரகிதமெனக்கொள்வார் நித்திய விலக்கண மெங்ஙன மறிவாரென்பது கருத்து. (௧௨)

நித்திய விலக்கணம் பழுதறக் கற்கினுங்
காணா வபிமானஞ் சையத்த தாகும்.

(இ-ள்.) நித்தியவிலக்கணங் குறைவின்றிக் கற்கினும் அனுபவங் காரணமாகத் தெரியாவிடத்து அஃது ஐயமயமாகவே முடியும்.—எ-று.

அதுவோ விதுவோவென்கை ஐயம். காணல்-துணிவு. போலியிருத்தலின் ஐயத்ததாகுமென்றார். காணுவயினென்றது - போலி தற்பிராந்தியெனற்கு. (௧௩)

அல்லதைச் சச்சிதா னந்த மெனலென
அல்லதை நித்திய மென்ப ராகலின்
இன்னணம் விதித்த தாகு மென்ப.

(இ-ள்.) சச்சிதானந்தமல்லாததைச் சச்சிதானந்தமென்றாற் போல நித்தியமல்லாததை நித்தியமெனக் கூறுவாராகலின், இவ்வாறு சச்சிதானந்த நித்தியவிலக்கணம் விதித்ததாகுமென்று அறிஞர் கூறுவர்.—எ-று.

இன்னணங்காணினும் தன்னைவிட்டு வேறாமென்னலிற் போலியெனற்கிலையும். தன்னை விடாதார்க்கே இவ்விலக்கணமென்க. இவ்விலக்கணப்படி தன்னைக்காணின் இயையும். இயையவே யாவுந் தானுமையும். (௧௪)

நித்திய விலக்கணத் தானைக் காணின்
அநித்திய விலக்கண மெங்ஙனம் வேறாம்.

(இ-ள்.) நித்தியவிலக்கணத் தானை அனுபூதிநிலை வாய்க்கக் காணின், அநித்தியவிலக்கணந் தன்னைவிட எங்ஙனம் வேறாகக்காணும்.—எ-று.

எனவே சச்சிதானந்த விலக்கணந் தானைக்காணின், அநாத சடதுக்கந் தன்னைவிடவேறல்லாததாகக் காணுமென்பதாயிற்று. ஆகவே அநாதாதி தனது பகிர்முகத்தாலும், சத்தாதி தனது அந்தர்முகத்தாலு மாயதாதலின் இச்சுத்தாசுத்தந் தன்னைவிட வேறன்றெனப்பெற்றாம். வேறாகக் கற்கலாகாதென்பது கருத்து.

தன்பா லிருக்கப் பெறினது நித்தியம்
பூரண மெனவும் பிறிதன் றாகும்
இதனை யுமினியா மியம்புது முறையே.

(இ-ள்.) இவ்விலக்கணந் தன்னிடத் தியையக்காணப்பெறின் அப்போதது நித்தியவிலக்கணமெனப்படும். இதுபோலவே பூரண விலக்கணமுந் தானாக வமையக் காண்டற்கியையின் இது

வுந் தன்னைவிட வேறல்லாததாகமுடியும். ஆதலின் இப்பரிபூரணவிலக்கணத்தையும் இனி முறையே யாங்கூறுதும்.—எ-று.

தன்பாலிருக்கப் பெறினெனவே அயலாலன்று என்பதாயிற்று. அயல் மயக்கந் தெளியாதா ரயலாலென்பர். சச்சிதானந்தநித்தியவிலக்கணவரம்பு கூறவே இதற்கெதிர்மறை யிலக்கணமூந் தானே வரம்புபெறக்கூறியதாகக்காண்டல் அருத்தாபத்தியாயிற்று. இன்னவிதி விலக்ககலாதார்க்கே இந்நான்கிலக்கணமூந் தெரியுமென்க. (௧௬)

நித்தியவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - ௧௮௬.

---

எழாவது

## பரிபூரணவிலக்கணம்.

---

தானா ஞான விண்ணை யன்றி
யகண்ட விலக்கண மறையி னிழுக்குறும்.

(இ-ள்) தானாகின்ற சிதாகாயத்தையன்றிப் பரிபூரணவிலக்கணங் கூறப்புகின் வழுவாய் முடியும்.—எ-று.

பாழுளதாக அதற்குங் கூறினும் வழுவே. கூறுமுணர்வையளக்கலாகாவிடத்தென்க. தன்னையன்றிக் கீழ்மேலொப்புளதாயிற் கண்டமகண்டங் கூறலாம். உளதெனின், தனது பிரதி பலனமல்லாம விருக்கக்கண்டிலமே எங்ஙனங்கூடும். தன்னைத்தான் விசாரியாப் பிழையேயன்றி வேறன்று. எழுவகைத்தோற்றமு மெழுவகை யவத்தையுந் தானாயிருந்து மவற்றோடு வந்து போகாமையிற்றான் அவையன்று; சாட்சியாயிருத்தலினென்க.

அங்கிங் கெனாமை யகற்ற வந்து
தெங்கணு மாதலி னிதுவுங் கற்பித
மென்றகன் றிருப்பது தானெனல் பூரணந்
தன்னைத் தா னளக்கிற் றானே தெரியும்.

(இ-ள்.) அங்கெனவும் இங்கெனவுங்கூறுதல் பரிபூரணநிலைக்கு மாறாமென்று அகற்றவந்தது எங்கணுமாதலான், இதுவும்

கற்பிதமென்று அகன்றிருப்பது தானெனும் நிலையாதலால் இதுவே பரிபூரணமெனப்படும். இந்நிலையமுளநேற் றன்னை தானே யளவைப் பிரமாணங்களால் அளக்குமாறனக்கில் அட போதுதானே தெரியும்.—எ-று.

தன்னைத்தானளப்பது தன்றலன்றிக் கூடாமையிற் றன்னை தானளக்கிற்றனே தெரியுமென்றார். (உ)

தானில தோதனை மறக்கி னெங்ஙனுந்
தானுள தோதனை நினைக்கி னெங்ஙனு
மிருமையு மன்மையிற் றனெனல் பூரணம்.

(இ-ள்.) யாதிடத்துந் தன்னைத்தான் மறப்பதின்றாற் றனென் பதில்லாமற்போயிற்று, யாதிடத்துந் தன்னைத்தான் நினைத்து க்கொள்வதின்றாற் றனென்பது அப்போதுதானுண்டாயிற்று, இவ்விருவித நிலையுந்தா னன்மையிற் றனென்பதே பரிபூரண மெனத்தகும்.—எ-று.

தன்னைத்தான் மறந்தவிடத்தும் நினைத்துக்கொண்டவிடத்து ம் மறைந்ததுபோலவும் வெளிப்பட்டதுபோலவுந் தோற்றுவ தேயன்றி நிசமன்று. தானிருந்தவண்ணம் இருத்தலிற்றனே பரிபூரண மெனத் தருமென்றார். அயலைப் பூரணமென்பார் இம்முறை யறியார்போலும். (ங)

உணர்விய லாமுயிர்க் குடலிட மிதனுங்
கிடந்தனை யிதற்கிடம் பூமியி தற்கிடம்
வெளியே யிதற்கிடம் வேறின் மையினிதை
யகண்ட மெனற்கவ ரறிவிருப் பதிறு
லறிவெனின் மகத்திஃ தனுவெனற் ககலா
தாதலி னிருமையு மாகா தானே
யாகியு நிற்றலி னறைவ தென்னே.

(இ-ள்.) அறிவே வடிவாயுள்ள உயிர்க்கிடமுடல். இவ்வுடற் கிடந்தனை. இந்தத் தனைக்கிடம் பூமி. இப்பூமிக்கிடம் ஆகாய மாகிய வெளி. இவ்வெளிக்கிடம் வேறின்மையாகத்தோன்று நிற்றல், இதனுவிதனைப் பரிபூரண வஸ்துவென்றுரையற்க. யாதினாலெனின் இத்தனையுமறிந்த அறிவு மேலே யிருப்பதி

றுலென்க. அப்போது அவ்வெளிக்கிடம் அறிவென்பமெனின் மகத்துக்கெல்லா மகத்தாகின்றது; மகத்தாகும்போது தானே உடலுயிரா நிற்றலின், அணுவுக்கணுவாகின்றது. இங்ஙன மணுவெனற்கு மூரணுதாதலிற்றான் இவ்விருமையுமன்று. தன்னையன்றி யிவ்விருமையு மின்மையிற் றானென்பதைப்பற்றி யென்னென்று சொல்லுவன்.—எ-று.

தானெனும் நிலையணுமகத்து கடந்ததாதலின் அறைவதென்னேயென்றார். பெயரிடக்கூடாமை. (௪)

உள்ளக் குறைவை யுணர வறியார்
சத்தாதி யைந்தையுஞ் சாதித் தென்பயன்.

(இ-ள்.) தனதுள்ளம் அசத்தாதி யிலக்கணமாகப் பரிணமித்திருக்க இதனைச் சற்றுமறியார்; தனக்கயலாகச் சிவமுளதாகக் கருதியதற்குச் சத்துமுதலிய ஐந்திலக்கணங்களையும் வழுவாது சாதித்தலின் யாதுபயனுண்டாம்.—எ-று.

ஆடையைத் தூய்தாக்கி யாடியைத் துடைக்காததுபோலும் உள்ளம் எங்ஙனமோ அங்ஙனமயலுமாம். இங்ஙனமறியார் பிரதிபிம்பமுகத்தைத் துடைக்கப்புகுந்தாற்போலும். உதாரணம்- 'உளந்தெளிந்தபடி யிருந்தா லுலகமெங்கே, யுலைவெங்கேயென்று சய்கை யொழித்திடாயே' என்பதிறுற் காண்க. தான் சடமாக விளங்கின் அனைத்துஞ் சடமாகவும், சித்தாக விளங்கிற் அனைத்துஞ் சின்மாத்திரமாகவும் விளங்குவதை யனுபவத்திற் காணலாம்; நம்பிக்கையன்று. உள்ளம் பரிபூரணமாக விளங்கா விடத்து வஸ்துவைப் பூரணமெனல் பாவனையாமன்றி யெதார்த்தமாகாது. தனது பாவந் தனக்குக்காண்டல் வஸ்துவன்று. தனது சூக்குமதேகம். இது தனது மூன்றுதனுவுமொன்று தனது கற்பிதாகிதமே பூரணமென்பதன்றி அயலென்பதொன்றின்று. உளதெனில், தனது கற்பிதாகிதத்தைத் தள்ளிக்காட்டில் தடையின்றி யேற்குதும். தனதுள்ளத்தைப் பரிசோதியாதார் யாதுகூறினுமென்னை? (௫)

வெற்ற வெளியுயி ரருவா தலினால்
வெற்ற வுருவத னினைவா தலினு

லெங்ஙணம் பூரண மாகும் வெளியே
யுருவாத் தடித்தலிற் கரைக்க லாகுந்
தந்திர மிதுவே பிறவல முரணும்.

(இ-ள்.) எங்கணும் உயிரெனல் அருவமாதலினால் வெற்ற வெளியேயாகும். அதனினைவும் அங்ஙனமல்லாததால் வெற்ற வுருவாகவேயிருக்கும். இங்ஙனமுயிரும் அதனினைவும் என்று மாறுமின் எங்ஙனம் பரிபூரணநிலைவாய்க்கும். ஆயின் வெற்ற வெளியே செகத்துருவாகத் தடித்துநிற்றலின் மீண்டும் அவ் வெளியாகக் கரைக்கலாம். இதுவே எவற்றினும் மேலாய தந்தி ரமாம். பிறதந்திரமோ முரணுதற்கிடைதலின் இதுபோல்வன வல்ல.—எ-று.

எந்நிலையதாய பொருளிடங்காலமும் விடயரூபமாதலானும், இங்ஙனமாக நில்லாத மனமெனல் எங்கணுமில்லையாதலானும், வெற்ற வுருவதன் நினைவாதலினாலெனவும், இயங்குந்திணை-இயங்காத்திணை அல்லது நிலைத்திணையா நின்றுள்ள எத்தகை யதாய வுயிரும் யாதுபிறவியாகவேனும், யாதவத்தையாகவே னும் நிற்பினும் அவை மாறுவதுபோல் மாறாதென்று மொருத கைத்தா நிற்றலின் அருவாயெனவும், வெளிபோல் யாதுறினு ஞ் சலட்சணமாயும் விசலட்சணமாயும் நிற்றலின் வெற்றவெளி யாயெனவும் என்றும். உயிர்-வெற்றவெளி. அதனினைவு வெற்ற செகத்ரூபம். இங்ஙனமாயின் ஒருப்படல் எங்ஙனம்? இன்றாதலி ன் எங்ஙனம்பூரணமாகுமெனவும், அவ்வெற்றவெளியின் பரிண மிப்பாதலால் மீண்டுஞ் சகத்து அவ்வெளியாகக் கரைக்கப்ப டும் ஆதலின் வெளியே உருவாத்தடித்தலிற் கரைக்கலாகுமெ னவும் உயிர் முயற்சியாலாய சகத்தடிப்பை யவ்வுயிர் முயற்சி யால் தானே தனது தடிப்பைக் கரைக்கவேண்டுதலின், தந்தி ரம் இதுவேயெனவும், தனது பரிணமிப்பே சமாதியிற் கரை வது; அதுவே பூரணமாய நிலையெனத் தெரியாதயலெனக்கோ டலெல்லா ஞாயஞ் சோதனைக்கு மாறுகுமாதலின் முரணு மெனவும்; இவ்வுளவறியாவளவும் அயலாகக்கொள்ளும் பூரண நிலையனைத்தும் வலியளவாக நின்று மாறுமாதலின், பிறவலவெ னவுங் கூறியவாறு காண்க. எனவே உயிரானது தன்னைத் தன்

னால் கண்டமாகியதால் அகண்டமாகுதற்குங் கூடுமென்ப தாயிற்று. (௬)

பொருளிடங் காலம் வேற தன்றித்
தானா விளங்குவ தேபரி பூரணம்.

(இ-ள்.) காலதேசவஸ்து இஃதென வேறதாகச்சுட்டப்படாது தானாக விளங்குவது யாது நிலையதோ அதுவே பரிபூரணமெனத்தகுவதாம்.—எ-று.

எல்லாப்பொருளுக்கும் பொருளாயும், எல்லாவிடங்களுக்கு மிடமாயும், எல்லாக் காலங்களுக்குங் காலமாயுமிருப்பது தானாகு நிலையையன்றித் திரமாக வேறின்றெனத் தெரிவிக்கத் தேற்றேகாரங் கொடுத்ததென்க. எனவே தானே பொருளிடங்காலமாக விளங்குவதெனப் பெற்றாம். பெறவே தனது விளக்கத்தில் யாதுபேதமு மின்றெனக்கண்டாம். கண்டதால் இங்ஙனந் துணிந்துகூறினும், துணிந்துகூறுதல் சுருதி, யுத்தி, அனுபவமொத்தேனும், இவற்றுள் யாதானுமொன்றாலேனுமென்க. இங்கே துணிந்துகூறியது அனுபவத்தாலெனவறிக. (௭)

ஞான வெளியே யவத்தைதமூன் றன்னிற்
பிறவியு மற்றே யகண்டத் திருக்கென்.

(இ-ள்.) ஞானாகாயமே மூன்றவத்தையாகக் காணப்படுமாயின், பிறவியும் அங்ஙனமே ஆதலிற் பரிபூரணமெனற் றிருக்கென்னை.—எ-று.

ஞானாகாயத்தையன்றி யவத்தாத்திரியமுளதேல் பிறவியும் அயலாகவுளதாம். ஞானாகாயத்தையன்றிச் ஜீவேசரில்லாதபோது பிறவி யவத்தையாதிகளைப்பற்றிப் பேசுவதெற்றிற்கு? ஞானாகாயகாட்ட விழிப்புக்குற்றமேயன்றி வேறன்று. நாம் என்றும் பரிபூரணமே யிதற்கையமில்லையென்பார், அகண்டத்திருக்கென்னென்றார். (௮)

நிலைய தோட லோட னிலைய
தாகத் தோன்றிற் பூரண விழுக்கென்
னான்றிக் காணாக் குறைய தென்ப.

(இ-ள்.) நிலையாநிற்பது ஓடுவதுபோலவும், ஓடுவதோடாதது போலவுங் காணப்படுமாயிற் பூரணநிலைக்கெய்தும் இடையூறென்னை? நாமுற்று நின்றுணராக்குற்றமெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

உயிர்கள் தம்மை யுபாதியளவாக்கண்டு இவற்றின் போக்குவரத்தைத் தமதாகக்கருதியதாற் பூரணவிழுக்கென்னெனவும். உற்றுநோக்கில் இம்மயக்கந் தெளியுமாதலின், ஊன்றிக்காணுக் குறையதெனவும். இங்ஙனந் தெளிந்தோர் சான்றோராதலின் என்பவெனவுங் கூறினர். (௬௯)

எதுவெதை யெந்நா லுணர்த லுகர்த
லெதற்கெஃ தெந்நாற் காட்சி போக
முபாதி யன்றா லொரீஇக் காணி
லக்கண நிலையது பூரண மெனத்தகும்.

(இ-ள்.) எப்பொருளெப்பொருளை யெப்பொருளாலுணர்தலுஞ் சுகித்தலும், எப்பொருளுக்கெப்பொருளா லெப்பொருள் காட்சியாக நிற்றலும் போகமாக்காண்டலும்; இத்தனையும் அகர்த்தாவாகிய உபாதித்திரயமன்றாதலால் இவற்றை யொருங்கேகளைந்து காணவேண்டியவாறு காணில் அக்கணம் விளங்கத்தகு நிலையது யாதோ அதுவே பரிபூரணமெனற்கிசையுந்நிலையதாம். —எ-று.

எட ராய் முதலிய வேற்றுமை பேதங்களாதற்கிசைவது உபாதியோ? உணர்வோ? உபாதியெனின், அறிவையன்றி யிருக்கவேண்டும். அறிவெனின், அது தனியே நிற்றல் முதலிய புடைபெயர்தலுக் கிடந்தானன்றி யிருக்கவேண்டும். இன்றாதலாற்றானே பரிபூரணமெனற்கு இழுக்கென்னை? இங்ஙனம் ஆயாதார்க்குணர்வு என்னுணர்வு. (௭0)

ஸ்மரணை யன்றி யவத்தை யாதி
யின்றாற் பிரவிர்த்தி நிவிர்த்தி நிகழு
மிடமே பூரண மல்ல பிறவெனல்.

(இ-ள்.) அவத்தாத்திரயம், காட்சித்திரயம், உபாதித்திரயம், அபிமானித்திரய முதலியவைகள் ஸ்மரணையன்றி இன்றாதலா

ல், அப்போது பிரவிர்த்தி நிவிர்த்தியென்னும் வினைக்குங் கர்த்தா ஸ்மரணையாகவேண்டும். அஃது சோபாதிகமன்றாதலால் நிகழாது; நிகழுமெனில், நிகழ்தற்கு இடமிருக்குமே. அவ்விடமே பரிபூரணமெனப்படுவதாம். இஃதொழிந்த ஏனையவிடமெனப்படுவனவெல்லாம் பரிபூரணமெனப்படாவாம்.—எ-று.

யாதில் யாதாக ஸ்புரித்த ஸ்மரணை அதிலதுவாக நிகழுமாதலின், நிகழுமிடமே பூரணமென்பதாயிற்று. அவ்விடம்போல் வதின்றாகலின் பூரணமென்றாம். (கக)

அல்லவென் றகலாப் பொருளிடங் காலங்
கண்டார்க் கியைவது பூரண மென்ப.

(இ-ள்.) அறிவாலறிவனவாகிய பொருளிடங்காலங்கள் தனித்தனி யனுபவத்தாகக் காணப்படுதலின் சுயம்பன்று. அன்றாகலின் சோதனையில் அல்லவல்லவென்றகலும். அங்ஙனம் அகலத்தகாத பொருளாகியாதோ, அதனை யுள்ளவாறு கண்டார்க்கு இயைதற்பாலது பரிபூரணமெனப்படுவதாமெனச் சத்துக்கள் சொல்லுவார்கள்.—எ-று.

அறிவே இப்பொருளிடங்காலமென அறியாவளவும் இவை யல்லவல்லவென்றே யகலுமாதலின், அல்லவென்றகலாப் பொருளிடங் காலமென்றார். இவ்வனுபூதி வாய்த்தல் மிகவருமைது.

உடலள வாத்தனைக் காண்பதோ பூரணம்
உயிரள வாத்தனைக் காண்பதோ பூரணம்
இருமையு மகன்றார் காண்பதோ பூரணம்
மும்மையு மகன்றார் காண்பதோ பூரணம்
ஐய மகன்றார் காண்பதோ பூரணம்.

(இ-ள்.) தனது உடலளவாகத் தன்னைக்காண்பவர் கூறுவது பூரணமோ, தனது உயிரளவாகத் தன்னைக்காண்பவர் கூறுவது பூரணமோ, இவ்விருவகையுமகன்று காண்பார் கூறுவது பூரணமோ, இம்மூவகைகளேயு மகன்றுகாண்பார் கூறுவது பூரணமோ, எவ்வகை ஐயத்தினும் நின்றகன்றார் கூறுவது பூரணமோ, தன்னிலக்கணந் தானுகிய வேட்டிற்கண்டு தெளிந்தாரே இதனைநிலை யுறுத்தவேண்டும்.—எ-று.

முப்பாழ்கடக்கை மும்மையும் அகன்றோனவும், அப்பா கடக்கை ஐயமகன்றோனவும், தன்னிலக்கணங் காணுவிடத் இந்நிச்சயங்களனைத்துந் துணிவுபெறக் கூடாமையின், பூர மோவெனவுங் கூறியவாறு காண்க. (கக

ஞாபக மல்லா வுயிர்க ளில்லை
திணைபா விடமா யன்று யிருக்கின்
இதனினும் பூரண மெதுநிலை யுறப்பெறும்.

(இ-ள்.) ஞாபகமல்லாத தேவராதிய உயிர்களில்லவேயி லை; இந்த ஞாபகந் திணைபாவிடமாயுமல்லாததாயு மிருக்கும யின், அவரவர் கூறும் பூரணநிலையை யேற்பதற்கு இதனினு எது நிலையுறப்பெறுவது யாதுளது இல்லை.—எ-று.

அனைத்தும் ஞாபகமயமாதலினுனும், அவற்றிற்குரிய நயநட டிகள் தன்னைத்தொடாமையானும், அவை தன்னையன்றி யில் லாமையானும், அவைதான் ஆகாமையானும் பூரணமென கிழுக்கென்னை. (கச)

அடுத்ததின் மயமா மாடி யென்ன
அறிவு மாகா திருந்திடிற் பூரணம்.

(இ-ள்.) அடுத்ததுயாதோ - அந்நந்தமயமாகக் காணப்படுங் கண்ணுடியைப்போல, அறிவும் அங்ஙனமாகா திருக்கச்செய் தால் அவ்வறிவு பூரணமாக விளங்கும்.—எ-று.

ஆடியைப்போல் அறிவுமாதற்பாலது இயல்பாதலின் இவ் வுவமை கூறப்பட்டது. ஆடிக்கு அச்சாயை நிலையாவாறுபோ ல, அறிவுக்குஞ் சகசீவபரசாயை எங்ஙனநிலையுறும். இதனைத் தினசுழுத்தியிற் காணலாம். இவ்வனுபவமில்லாவுயிர் எங்கு மில்லை. ஆதலிற்றத்தம் அறிவுஅது வதுவாகாது இருக்கச்செய் தாற் பரிபூரணமாக விளங்குவதை யாவருந்தத்தமக்குள் காணலாம். (கரு)

அகண்ட நோக்க வாத லூழியும்
கடலிற் சுழிபோ லென்மனூர் புலவர்.

(இ-ள்.) அறிவு தனதகண்ட நிலையைத்தாஞேக்க, அங்ஙனே கடலிற் சுழிபோலத் தனதுகற்பிதம் அழியுமெனச் சான்ருேர் கூறுவர்——. எ-று.

கடலகண்டம் - அறிவகண்டம். சுழியேகதேசம் - அதுவதுவாதல் ஏகதேசம்; சுழிமீண்டுங் கடலாம்-அதுவதுவாதல் மீண்டுமறிவாம். ஆதலின் இவ்வுவமை கூறியவாறு காண்க. இது சுவானுபவம். (கசு)

ஏக தேசம் பற்றியிவ் வகண்ட
மாதலி னிதுவுங் கற்பித மிருமையு
மகன்ற நிலையே தக்க பூரணம்.

(இ-ள்.) அதுவதுவாதல் என்னும் ஏகதேசம்பற்றி அகண்டமென வந்ததேயன்றி இதுவும்தனது எதார்த்தநிலையன்று. ஆயின்யாதோவெனின், இவ்விருமையுங் கழன்றநிலையே பூர்வபக்கமாக்கற்கு இயையாத பரிபூரண விலக்கணமாம்.—எ-று.

பூர்வ பக்கமாக்கற்கியைந்த பரிபூரண நிலைகளைப்போல் இதுவும் ஒன்றெனற்கு உடன்படாமைபற்றி, தக்க பூரணமெனப்பட்டது. இது குருசன்னிதியிற் றனைஇடத்தில் விளங்கும். இதனை ஞாயம்சோதனை முகத்தாற் காணலாம். (கஎ)

எதிரி லாதலின் வாசனையெனப் படும்
தனைத்தான் காண்டல் தவிரா திருக்கில்
காட்சி வாசனை யெங்ஙனை நிற்கும்
பூரணம் வேருே தானே விளங்கும்.

(இ-ள்.) பிரத்தியட்சமாக ஆங்காங்குபோய் எதிரிற்காண்டவிறலன்ருே - அந்தந்தப் பொருளிடங்காலங்கள் மற்ருேரிடத்திலிருந்து உன்னுதலாலேனும், உன்ஞதபோதேனுந் தானே மனத்திற் காணப்படுகின்றன. இதிறலன்ருே இதுவாசனையெனப்படும். பிரத்தியட்சமாக விடயங்கள் காணப்படுந்தோறுந் தனது எதார்த்தவடிவையுள்ள வாறுமறவாது விடாமல்தரிசித்துக்கொண்டிருக்கிற் பிரத்தியட்சமென்பதும் வாசனையென்பதும் எங்கிருக்கும். அப்போதுதானே பரிபூரணமாக விளங்கலின், இதனினும் பரிபூரணமென்பது வேறுளதோ? இல்லையே.

தனது விளக்கத்தில் அன்னியமில்லை யாதலால், பூரணம்வேறேயென்றார். (கஅ)

எவ்வுயிர்க் கெந்தப் பிறவிசு தந்திரம்
அவ்வவ் வுடலள வாகா திருக்கின்
பூரண நாமா விளங்கக் காண்பம்.

(இ-ள்.) எவ்வகையுயிர்க்கும் எந்தப்பிறவி சுதந்திரம்; இன்றாதலால், அவ்வவ்வுடல் மயமாகத் தாமாதலில் என்பயன். அங்ஙனமாகாதிருக்கின், நாமே பரிபூரணமாக விளங்குவம். அங்ஙனம்விளங்குவதை நாமே காண்போம்.—எ-று.

நமக்கன்னியமாதலின், நாமுடலளவாகக் காண்கைகூடாது. கூடுமெனின், பிறவிக் கொழிவின்று. இன்றாயின், நமது சற்கருமத்தால் என்பயன். இன்றெனவிடுக்கின், தான்கிர்தார்த்தராதல் எங்ஙனம்? எனவே, ஞாயஞ் சோதனைபொருத்த முகத்தானும், விடாமுயற்சியானும் உடல்தானன்றென மறக்குஞ்சாதனம் புரியின் நாம்பரிபூரணமாக விளங்குதும். இங்ஙனமாகுஞ் சாதனத்திலும், அருந்தவம் எங்குமில்லை. இதனால் மனஞ்சித்திரதீபம்போல் நிலையுறுமென்பதாயிற்று. இதுபாவமெனின், உடலளவுயானெனக் கொண்டதும் பாவமன்றோ. சுத்தபாவத்தால் அசுத்தபாவத்தைக் கெடுக்கவேண்டுமாதலின், அங்ஙனங்கூறுதல் வழுவன்று. அனுட்டானத்தாற் காணலாம். (கக)

என்னையான் வென்றேனெனுஞ் செருக்கதுவே
பரி பூரணநிலை காட்டுங் குறியே.

(இ-ள்.) அல்லல்தமற்கு நானே எனக்குச் சத்துருவாதலால் அவ்வுளவையறிந்து என்னையான் வென்றுவிட்டேனென்னுஞ் செருக்கெங்கு இயல்பாக வெழுந்ததோ, அதுவே பரிபூரண நிலையைக்காட்டுங் குறியெனப்படும்.—எ-று.

யானே பொருளல்லவற்றைப் பொருளெனக்கொண்டு பிறவியாலழுங்குவதாதலால் எனக்குச் சத்துருயானேயெனக் கொண்டதென்க. இவ்வுளவைக் கண்டுபிடித்தவனானே யாதலால் அம்மயக்கத்தைமாற்றித் தெளிந்தனன். என்னைக்கொண்டே என்கலகத்தையொழித்து, என்னைச்செயித்தது நானேயாதலால்

இனி யெனக்கு நிகரில்லையென்னுஞ் செருக்குறுமே. அந்நிலையாயசெருக்கு, பரிச்சின்னத்துவமோ, அபரிச் சின்னத்துவமோ, பரிச்சின்னத்துவமெனின், அறிவாகிற தன்னைத்தவிரப் பொருளிடங்காலமிருக்கச் சோதனையிற் காட்டவேண்டும். அஃதாதெனில், எனையதென்றேற்கத் தடையென்னை? இந்நிலையே பரிபூரணமாமெனற்கு இயைந்ததென்பார்-செருக்கதாவே பரிபூரணநிலை காட்டுங் குறியேயென்றார். சத்துக்கள் இதனை ஞானச்செருக்கென்பார். என்னை? 'முன்பினுமலைவிற மொழிந்தருவிரகதுண்டு - நன்கொடு நீங்குகாறு ஞானமாஞ்செருக்குமுண்டு; வன்புறு துன்பம்வந்தால் மயக்கமில் களிப்பதுண்டு, துன்பமில் சுருபானந்தன் தொண்டர்கள் துறந்ததென்னே' என்றார் தத்துவராயர். (உ௰)

அல்லல் தன்றைறுந் தனுந் தன்று
லிருமையு மின்றி யிருப்பதுந் தன்றல்
என்னில் தானெனல் பூரண மென்ப.

(இ-ள்.) அல்லல்வினைவருந் தன்றல்தான், அவற்றைறவேரோடு களைதலுந் தன்றல்தான், இவ்விருவகை பாருபாடாகிய முயற்சியின்றிச் சும்மாவிருப்பதுந் தன்றல்தான் எனச் சுருதியுத்தி யனுபவமிருக்குமெனில், அப்போது பூரணமென்பது தானே தானுதல் அன்றோவெனச் சத்துக்கள்கூறுவர்.—எ-று.

தானெனல் எங்குமென்று மொருபடித்தாயிருக்க, அதனை இங்ஙனமாகக் கூறுவதெல்லாம் ஆபாசத் தோற்றத்தாலன்றி வேறன்றெனவுணர்த்த மும்மையுந் தன்றல்தானென்றார். மும்மை நிலையுந் தானன்மையின் - தானெனல் பூரணமெனப்பட்டதென்க. (உக)

தன்னையன்றித் துவிதமாதி
யில்லை யாதலிற் றானெனல் பூரணம்
அன்றேல் முரண தாகுந் தானே.

(இ-ள்.) தானெனு நிலையையன்றித் துவிதம், விசிட்டாத்துவிதம், அத்துவிதமென்னு நிலைபேதங்கள் சற்றுமில்லை - ஆதலின், தானே தானுதலென்னு நிலையே பரிபூரணமெனப்படும்;

அல்லவெனில், வேறென்பவெல்லாம் என்றுந் தொலையாவழுக்காகமுடியும் —எ-று.

துவிதபாவமாகநின்று துவிதம்வாதித்தலுந் தானே, ஏனையவிரண்டுபாவமாக நின்று - அவ்வவற்றை வாதித்தலுந் தானேயென்னு மிடத்தில் தான்யாது மன்றாதலின், தானே பூரணமென்பதாயிற்று. ஆகவே தன்னையன்றி ஞாருஞேஞ்ஞானமில்லை, ஞானமின்றிக் கூடஸ்தபிரமமில்லை, அஞ்ஞானமன்றிச் சீவேசரில்லை, சீவேசரையன்றிச் சமட்டி வியட்டியுபாதிக் ளையாதிகளில்லையெனப் பெற்றும். பெறவே - ஆரோபமாகவும், அபவாதமாகவும், நிற்பது தன்னையன்றி இல்லையேனும், அவை ஒன்றிலொன்றின்மையானும், தானவைபோல் மாறாது என்றும் ஒருபடித்தாநிற்பதினானும், தானவையன்றெனத் துணிந்தாம். துவிதமுதலிய மூன்றும் அவசரநிலையெனக் கொள்க. (உஉ)

அயலென வுளவா லதுவது வாகும்
அறிவதை யன்றி யிருக்கக் கண்டிலம்
ஆதலி னறிவே பூரண மெனப்படும்.

(இ-ள்.) அறிவுக் கயலாகத் திரிசியங்களிருப்பதால் அறிவு அது வதுவாகப் பரிணமிக்கும், அறிவு போலி சத்தாகாது எதார்த்த சத்தாதலின் இந்த எதார்த்தசத்தை யன்றித் திரிசியமிருப்பதாகக் கண்டிலம்; ஆதலின் அறிவே பரிபூரணமெனப்படும்.—எ-று.

அறிவுஅது வதுவாகப் பரிணமித்தல் பிராதிபாலிகம். அங்ஙனம் பிராதிபாலிகத்ததைக் கற்பிதமென் றறியாது செகசீவபரமென்று அவற்றை மெய்யெனக்கொண்டு விவகரித்தல், விவகாரிகசத்து. இங்ஙனம் விவகரித்தற்கிடையந்தது அறிவின் தடிப்பாதலானும், இத்தடிப்பாகிய உபாதேயத்திற்கு உபாதானம் அறிவாதலானும், இவ்வறிவே பாரமார்த்திகசத்து. அறிவுதனது அகண்டத்தில் இணைத்துணை சலித்ததாக ஆரோபமாகக்காண்டல் இன்றேல், இம்மூன்று சத்துமின்றாம்; அப்போது இம்மூன்று சத்துக்கும் அகண்டம் எதார்த்தம்; இவ்வகண்டமுங் கண்டத்தைப்பற்றி வந்ததினால் இதுவுங் கற்பிதம். இங்ஙனங் கற்பிதமாதற்கிடையாததால் தானே அகண்டமாகிய எதார்த்த சத்தெனப்பெற்றும். (உ௩)

பரிபூரணவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - உ௦எ.

---

எட்டாவது

# மாயா விலக்கியம்.

## மாயாநிலையியல்.

பிரம விலக்கிய விலக்கண முரைத்தாம்
அதன் றிரிபென்று மாயா சத்தியி
னிலையிய லுரைக்குது முணர்ந்தக தற்கே.

(இ-ள்.) பிரமவிலக்கியமும், அதனிலக்கணமும் இத்தனையவென இதுகாறும் ஐயந்திரிபறக்கூறினோம். இனி அப்பிரமத்தின் விகாரமாகிய மாயாசத்தி நிலையின் இலக்கணங் கூறுவாம், பரிபாகமுடையோர் உணர்ந்து அதினின்று நீங்குதற்கு.—எ-று.

ஆகாயமே காற்றென்றாற்போல அறிவே அறியாமையாதலின், அதன்றிரிபெனவும்; அறிவையன்றி அறியாமை யென்றோர் முதலுஞ் சுயம்புவின்றெனத் தானிய அங்ஙனே அப்பிராந்தியாகாரமென்பது தோன்ற உணர்ந்தகதற்கேயெனவுங் கூறினானென்க. இது நுதலிப்புகுதலென்னுமுத்தி. (க)

மாயை யென்ப நிலையெனும் பொருளது
எங்ஙன மாய்நின்று மெவற்றையு மென்ப.

(இ-ள்.) மாயையெனப்படுவது நான்கு காலத்திலும் இன்மைப்பொருட்டே இயைதற்பாலது. அகம் புறமெனக் கூறப்பட அனைத்தையும் அனைவர்களால் எங்ஙனம் ஆராய்ச்சி செய்யினுமென்று அறிஞர் கூறுவர்.—எ-று.

அனைத்தும் ஆராய்வுழித்தனக்கெனச் சொரூபமின்றிச் சேறலான் மாயாகாரியமெனத்தோன்ற இங்ஙனங் கூறினானென்க. ( )

புத்தி விகற்பே மாயை பிறிதெனல்
விகற்ப வடிக்கை யாக்கற் பாற்றே
அல்லதை யாமெனக் கோடலி னானே.

(இ-ன்.) பேதபுத்தியே மாயையெனற்கு உண்மையுருத்தாம். இஃதன்றயலெனத் தெளிந்தார்போற்கோடல், அத்தப்புத்தி விகற்பை யழிக்குதற்கன்று; அடுக்கடுக்காயீக்குறைவாக்கற்பாலதே

எங்ஙனமெனில், பொருளல்லவெனற்கு இயைதற்பால அனை த்தையும் பொருளாமெனக் கொள்ளுந் திறத்திருகல்.—எ-று.

தான் விகற்பமாயிருக்கத் தன்னை யுன்னுதற் அயலெனல் மாயாசத்தி யென்பதுவனாயும் விகற்ப மெல்லையின்றி மீருதியாகப் பெருக்கற்கே இடம் பெறலால் மாயை பிறிதெனல் விகற்ப வடுக்கையாக்கற்பாற்றேயெனவும், யானெனதெனக் கோடற்கியை யாது அல்லவல்லவென்று எகற்பால அனைத்தையும் அவற்றினியல்பெதெரியாது யானெனதெனக்கொள்ளும் மயக்கத்திறலென்பார், அல்லதை யாமெனக்கோடலில் நானேயெனவுங் கூறினு ரென்க. (௯)

அல்ல வில்லை யென்னற் கியைய
ஆமுண் டெனலே மாயை யலபிற.

(இ-ள்.) யாதும் நிசவடிவ மன்மையிற் பொருளல்ல; பொருளெனில், உபாதானத்தையன்றி யிருக்கவேண்டும். இன்மையால் அவை காரியமெனற்குப் பொருளாகவில்லையெனப் பூர்வ பக்கமாக்கற்கே இயையும். அங்ஙன மியையவன அனைத்தையும், அல்லவெனற்கு மாறுக ஆமெனவும், இல்லையெனற்கு மாறுக உண்டெனவுஞ் சத்தியமாகக் கோடலே மாயையெனப் படுவதாம். இங்ஙனங் கோடலைத் தவிர்ந்து மாயையென்பது வேறெனக் கூறுங் கட்சி யனைத்தும் மாயையாகாவாம்.—எ-று.

புத்தி மயக்கங் காரணமாக அல்லவற்றை ஆமுண்டெனலால் மாயையெனப்படும். இஃதறியாது வேறெனப்படுதன்னிழல்போற் கடத்தற் கொண்ணமையின் பிறவல்லவெனப் பட்டது. (௧௦)

காரண காரிய குணகுணி பிம்பா
பிம்ப விகார வவிகா ரத்தொடன்
வியாபக வியாப்பிய மாதி நிலையள
வில்லா நிலையது மாயா விலக்கியம்.

(இ-ள்.) காரணகாரியம், குணகுணி, பிம்பாபிம்பம், விகாரவவிகாரம், வியாபகவியாப்பியம் முதலிய நிலைகள் அளவில்லா நிலையது யாதோ அதுவே மாயாவிலக்கிய மென்னப்படும்.—எ-று.

இவை மேலுங் கீழு நிலையின்றிச் சேறலால் இத்திறநிலைய தே மாயாவிலக்கிய மெனப்படுவது. (ரு)

மேல்கீழ் புடையெனக் காட்டி யெங்கும்
எட்ட வெட்ட வணித்தாக் காட்டி
வறியதா நிற்றல் மாயா விலக்கியம்.

(இ-ள்.) மேலென்றும், கீழென்றும், பக்கமென்றுங் காட்டி எங்கும் எட்டவெட்ட அவையணித்தெனக் காட்டிக்காட்டி வறிதா நிற்றலால் அது மாயாவிலக்கிய மெனப்படும்.—எ-று.

இங்ஙனங் காட்டல் பிராந்தியாதலானும், பொருளுண்டேல் எட்டுமாதலானும், இதனை மாயாவிலக்கிய மென்னும். மேல்கீழ் புடையெனக் காண்டல் வெளியையன்றி யின்மையின் இவ ற்றை மெய்யெனக் கோடல் மூடமென்க. (௬)

அணுமகத் தென்னக் காட்டி யப்பால்
நிலக்க வொட்டாக் கலக்க நிலையது
மாயா விலக்கியங் காண வேண்டில்
தந்த முள்ளங் கிண்டக் கிண்ட
வெவர்க்கு மனுபவ மாகுமென்ப.

(இ-ள்.) அணுவெனவும், மகத்தெனவுங் காட்டி அவ்விரண் டிற்கும் அப்பாலிதையதென்று கணிக்க வொட்டாது கலக்க நிலையையுடையது மாயாவிலக்கியமெனப்படும்; இதனைக்காண வேண்டில் அவரவருந் தங்கள்தங்கள் உள்ளத்தைச் சோதித் துச் செல்லச்செல்ல, எவர்க்கும் அனுபவமாக விளங்குமெனச் சான்றோர் கூறுவர்.—எ-று.

அவரவருள்ளமே அங்ஙனங் காட்டுங் கலக்கம் அயலன்றெ னத் தெரிவிக்க அனுபவமாகுமென்றார் (எ)

எவர்க்கு மெய்போற் காண்ட வுலகம் [தோ
தோற்றமின் மிசைத்தோ வறிதலின் மிசைத்
தென்று நிலையது மாயா விலக்கியம்.

(இ-ள்.) யாவர்க்கு மெய்போற் காணப்படுதல் உலகம்; இது தோற்றத்தினிடத்ததோ, அறிதலினிடத்ததோ, இதையதென்று

மணஞ்செய்யாத நிலையதே மாயாவிலக்கிய மெனப் படுவ தாம்.—எ-று.

இரண்டுபெக்கமும் ஆயாநிலையதே மாயாவிலக்கிய மென்றாயி ற்று. (அ)

உன்னச் செய்யா வினோத நிலையது
மாயா விலக்கிய மெவரறி யாதார்.

(இ-ள்.) யாது இயல்பினதெனச் சிந்திக்க வொட்டாது விநோதக்காட்சியால் மறைக்கு நிலையதுவே வேறின்மையால் இதுவே மாயாவிலக்கிய மெனப்படும். உன்னுவாருளரேல் இம் மோசத்தை யறியாதாரெவருளர்.—எ-று.

மனிதாதித்தோற்ற பேதவகைகள் எண்ணிறந்தன; அவை பற்பல விநோதத்தவாதலினாலும், அகமுக நோக்குக்குச் சற்று மிடந்த ராமையாலும் - உன்னச்செய்யா நிலையதென்றார். (கூ)

எவ்வுயி ருணர்வுக் கெந்தநான் சொந்த
முளதேற் றிணையா விடம தாகும்
அன்றேல் மெய்யாய்க் கோடலி னென்பயன்
அவல மதுவே மாயா விலக்கியம்.

(இ-ள்.) எந்தவுயிராகிய உணர்வுக்கு மெந்தநான் சொந்தமெ னப்படுவது - உளதெனின், இணையாவிடத்ததாகும்? அன்றெ னின், சொல்மாத்திரமும், தோற்றன்மாத்திரமும், ஆகவேண் டும். அங்ஙனமாயதையானென மெய்யாகக்கோடலின் யாதுப யன்படும். இன்றுதலிற் பிறவிதோறும் விளைவுழியே யிழத்த லின் அவலமே பலனாகமுடியும். இங்ஙனமுடியு நிலையதே மாயாவிலக்கிய மெனப்படும்.—எ-று.

நானல்லதைப் பிறவிதோறு நானென நம்பிநம்பி இழப்பதே அவலம்; இந்த அவலத்தைத்தவிர மாயையென்பதில்லை யாத லின், அவலமதுவே மாயாவிலக்கிய மென்றார். (கய)

யாதுமன் றெனக் கண்டுஞ் சுயம்பாக்
கோட லதுவே மாயா விலக்கியம்
அன்றேல் முரணதாகு மென்ப.

(இ-ள்.) யாதுஞ் சுயம்பன்றெனச் சோதனையாற்கண்டுஞ் சுயம்பெனக் கோடலே மாயாவிலக்கிய மெனப்படும்; இந்நிலையது மாயாவிலக்கியமன்றெனின், வேறுநிலையனைத்துந் தோடமெய்தற் பாலவாதலின் ஆகாதென்று சத்துக்கள் கூறுவர்.—எ-று.

யாதுஞ் சுயம்பன்றெனவே - மனோவுறுதிக் கிடமின்றாயிற்று; போகம்வேண்டும்அவசரம்பற்றிப்பொருளல்லவற்றையே யானென தெனக்கொண்டதைக் காட்டச்சுயம்பாக் கோடலென்றார். வேறாய நிலையனைத்தும் இதுபோல் உடன்படாமையின் முரணதாகுமெனப் பட்டது. எனவே - வேறுபெயர்த்துங் கூறாமையாயிற்று. (கக)

புத்தி மயக்கே மாயா விலக்கியம்
தெளிவே நிவிர்த்தி காட்சி காட்டும்.

(இ-ள்.) புத்திமயக்கமே மாயாவிலக்கிய மெனப்படுவது. எங்ஙனமெனில், புத்திவிசாரத் தெளிவே மாயாநிவிர்த்தியெனப்படுவது - இதனை யுணரவேண்டின், பிரத்தியட்சப் பிரமாணங்காட்டிவிடும்.—எ-று.

புத்திமயக்கம்-உலகும் பாழுமாக்காட்டும். தெளிவு - சுயஞ்சோதியாக் காட்டும் எனவறிக. ஆடிபிம்பத்தை விளங்கப் பிரதிபிம்பந் தன்பாலுளதாக அத்தியாசமாகத் தன்பாற்காட்டும். அதுபோல - அறிவும்-தானேமயக்கமுந் தெளிவுமாதலின் இங்ஙனமாயதன்னை விளக்க நாமரூபமாகவும், பாழாகவுஞ் சொப்பிரகாசமாகவும் அயலாகக்காண விளங்கும். இங்ஙனநிற்றலால் தானேயாடியும், பிம்பமும், பிரதிபிம்பமும் போறலைக்கண்டாம். காணவே - தனதுமயக்கமே, நாமரூபம் பாழென்னும் இரண்டுகாட்சியாகவும், தனதுதெளிவே - துரியமாகவுந் துரியாதீதமாகவும் விளங்குங் காட்சியாகவு நிற்கப்பெறும். இஃது இருவகைச் சமாதியாலன்றி விளங்காது. (கஉ)

தன்னை யன்றி யயலே யில்லை
யுளதாக் காண்டல் மாயா விலக்கியம்
அல்ல வில்லையென் றகறலி னானே.

(இ-ள்.) தானாகிற ஸ்திரஞானத்தையன்றிப் பரஞானமபரஞானமென்னும் இருவகை ஞானமுஞ் சிறிதுமில்லை. உளதாகக் காண்டலோ, இதுதான் மாயாவிலக்கிய மெனப்படுவது, எங்ஙனமெனில், இது வஸ்துவல்லவெனவும், வஸ்துவைத்தவிரவில்லையெனவுஞ் சோதனையிற் கழல்வதினால்.—எ-று.

எனவே - அயலுளதேல். அதுதானல்லவெனவும், தன்னைவிட வில்லையெனவு முடியுமா? முடிவதால், அங்ஙனங் கூறப்பட்டது. (கரு)

சொல்லா லன்றி மாயை யறியார்
இலக்கிய விலக்கண மெங்ஙன மறிவர்
தானா யன்றா யிருப்ப தானே.

(இ-ள்.) மாயையெனச் சொல்லால் அறிவரன்றியர்த்தத்தாலுணர வகை யறியாதார் அதனதிலக்கியமிதுவெதெனவும் இலக்கணமிதுவெதெனவும் எங்ஙனம் அறியவல்லார். யாதினாலெனில் தானே அம்மாயையாகவும் தான் விலட்சணமாதலின் தானஃதன்றாகவுமிருப்பதினானே.—எ-று.

தானெனு நிலையையன்றி பிராந்தி வேறன்று; பிராந்தியோ தோன்றி மறைவதால்தானன்று. இங்ஙனம் இருப்பதை யாவரறிய வல்லரென்பார் சொல்லாலன்றி மாயை யறியாரென்றார்.

இலக்கிய மறியாப் பண்டித ருளரேல்
இஃது மறியா ஞானிய ருளராம்
முன்ன தியையினும் பின்னது முரணும்.

(இ-ள்.) எல்லை யிறந்த பாஷாவிலக்கியங்கள் அனந்தமுள. அவற்றுள் ஓர் பாஷாவிலக்கிய மறியாத பண்டிதர் என்போருளராயின் இந்த மாயாவிலக்கியமறியாத ஞானிகளென்போருளராகலாம். முன்னர் கூறியதேற்றற்பாலதாயினும் பின்னர் கூறிய ததிர்மறுத்தற்பாலதாகும்.—எ-று.

தனக்கன்னியமென வுணர்ந்தன ரன்றித் தானே மாயையென வுணர்ந்தார் திரிவிதவுலகத்துமரியர். அனையஞானிகளெளியர். ஆதலிற் பின்னதுமுரணுமென்றார். இது மனனத்தாலன்றி விளங்காது. (கரு)

நிலையின்மை காட்டினு நிலையெனக் கோடல்
மூட மிதுவே மாயா விலக்கியம்
எவ்வுயி ருணர்வுங் கரிவே றெவனோ.

(இ-ள்.) யாவு நிலையல்லவெனத் தாமே காணக் காட்டினு மிது சகசமென வெண்ணி யவற்றை நிலையினவாகக் கோடல் மூடமாதலின் இந்த மூடமே மாயாவிலக்கிய மெனப்படும். இது சத்தியமெனத் தெரிவித்தற்கு எவ்வுயிருமாகிய வுணர்வே தக்க சாட்சியாம் வேறு சாட்சி யாதுக்கு.—எ-று.

காட்டினுமென்ற வும்மை இழிவு சிறப்பு. எவ்வுயிருணர்வும் முற்றும்மை. காட்டக் கண்டுணராது மயங்கல் பொதுப்பட வுயிரோறு மிங்கே மக்களுயிர்மேனின்றது. உய்த்துணரற்பாலதி றென்க. எவ்வுயிருணர்வே மாயாவிலக்கியமெனப்பெறும்.

பொய்யை மெய்யென வுணர்தலி னன்றோ
மெய்யை மெய்யென வுணர்த லுளதா
மெய்யுணர் வென்னச் சான்றோர் விதித்தனர்
இருவகை யிலக்கிய மிதனால் விளங்கும்.

(இ-ள்.) பொய்யை மெய்யென வுணர்தலினாலன்றோ மெய்யை மெய்யென வுணர்தலுளதாகவேண்டும் ஆதலின் மெய்யுணர்வென்னச் சான்றோர் விதித்தார்கள் இதனாலிருவகை யிலக்கியமு மிருப்பதாக நேரே விளங்கும்.—எ-று.

மெய்யுணர் வெனவே பொய்யுணர் வன்றெனப்பெற்றாம் பொய்யை மெய்யென வுணர்தல் ப்ரவிர்த்தி. மெய்யை மெய்யென வுணர்தல் நிவிர்த்தி. இவை புடைபெயர்ச்சி. இவற்றிற்கு விளைமுதல் ஞானமொன்றே. இனி பொய்யிலக்கியம் மாயை. மெய்யிலக்கியந் திருக்கு. இவ்விருவகை யிலக்கியமுங் கடந்துழியன்றி விளங்காது. இது யாதினுமேலாயதிலே. (௧௭)

பொய்யைப் பொய்யெனக் காணை லரிது
காணினு மயக்க மொருவுத லரிது
ஒருவினு மூடல மவகற லரிது

அகலினு மீண்டும் பற்ருமை யரிது
கடபடம் போறலி னென்மனுர் புலவர்.

(இ-ள்.) பொய்யே மெய்யெனக் கோடல் திரஞானமா ந்
றலின் பொய்யைப் பொய்யென வுணர்த லெங்ஙனம் கூட
மையினரிது. யாதோ ரேதுவாலுணரினும் மெய்போலக்
ஞும் பிராந்தி யுள்ளம்விட்டகறலரிது. அங்ஙனமகன்ருலு
தன்னை யுடலளவாக்கொள்ளுந் திடபாவங் கறைதலரிது. ஐ
போதகன்ருலு மீண்டும் பொய்மயமாகா திருக்கையரிது.
னெனில் மெய்யும் பொய்யுங் கடபடம்போறலினெனச்சத்து
கள் சொல்லுவார்கள்.—எ-று.

மண்ணேகடம், நூலேபடம். இதுபோல ஞானமே யஞ்ஞ
னமாதலினென்க. இதிஞலன்ரே ஞானம் மயிர்ப்பாலம். அ
ஞானம் நெருப்பாறு என்பர் சான்ரேர். கடபேத மண்ணை
யன்றி யின்மையின் கடம் ஆரோபம். மண் அதிஷ்டானம்
எனக் கருதிக் கடபேதங்களையெல்லாம் மண்ணுகப்பார்ப்புழி
கடம்வேறன்மையின் அப்பார்வை கடத்தின்மேற் செல்ல
தெனற்கணையென்ன. இன்மையின் பாலருமாறு மூவமையா
கப்பட்டது. இதனல் மாயாவிலக்கியமுமின்றி யமையாதென்
தாயிற்று. ஆகவே மாயாவிலக்கியம் கூறவேண்டிய தென்பத
பெற்ரும். (கஅ

ஞெப்திப் பிரிய நிலையள வெட்டா
வகையு மணித்தாற் ருேற்றும் வகையும்
திருத்தி யதுபோற் காட்டும் வகையும்
அளவிலி கால மமையா வகையும்
யாதா லெனவுஞத் திறத்த வகையும்
எட்டினுந் தோன்ருத் திறத்த வகையும்
இன்னன போல்பவு மாயா விலக்கியம்.

(இ-ள்.) அல்லவை ஞெப்திப் பிரியம்போற் காண்டலின்
எங்ஙன மவற்றி னிலையளவெட்டும் இங்ஙன மெட்டாவகையும்
அருந்தல் பொருந்தலுக்குச் சிறுமையின்மையின் ஞெப்திப்
பிரிய மெளிதாகத் தோற்றும் வகையும் இவற்ரு லப்போதப்

போத நித்திய திருத்திபோற் காணப்படும் வகையும் இங்ஙன மளவில் காலம் பிறந்து பிறந்து நுகரினு மமைதிசெய்யாவகை யும் இங்ஙனமாதற்கேதென்னையென வுன்னவொட்டாது பகிர் முகமாக்குந் திறத்தின் வகையும் இத்தடைகட் கெல்லாமீறி யோர்போதெட்டப்புகினு மின்னநிலை யினதெனத் தோன்றாத் திறத்தவகையும் இவைபோல்வன பிறவு மாயாவிலக்கியமென ப்படும்.—எ-று.

உபாதியைக் கோடலின் அளவெட்டாவகையெனவும். கர்த் தத்துவ போக்தத்துவமாக வுபாதி காண்டலின் அணித்தாயெ னவும். அருந்தல் பொருந்தல் சுகம்போற் காண்டலின் திருத்தி யதுபோலெனவும். அல்லவற்றை யாமெனக் கோடலின் அள விலிகால மமையாவகையெனவும். பகிர்முகம்போற் பயன் கா ணாமையின் உணாத்திறத்தவெனவும். உபாதியாகா வாதலின் எட்டினுந் தோன்றாத்திறத்தவெனவும். இவைபோ லனந்த திறத்தவாதலின் இன்னன போல்பவுமெனவுங் கூறியவாறு காண்க.

(கக)

மெய் பொய்யாக பொய் மெய்யாக
வாக்கலின் கடனு கடன வலியது
மாயா விலக்கிய மெனற்கிழுக் கென்னை
சத்தி சத்தன் பேதா பேத
மறிதற் கரிதே லெவர்க்கு மென்ப.

(இ-ள்.) ஆத்மா வனாத்மாவாகவும் அநாத்மா வாத்மாவாகவு மாக்கற்பாலதின் மாயாவிலக்கியங்கடனுகடனவலியதென்றும் இதனை யேற்றுக் கோடற்கிழுக்கென்னை. வல்லபமாகிற சத்தி யும் வினை முதலாகிற சத்தனும் பேதமெனவு மபேதமெனவு மெவர்க்குங்கணித்தற்கருமையாகிலென் றறிஞர்கூறுவர்.-எ-று

அறிவை யிங்ஙனமாக்கற்பால தறியாமையாதலி னிதனை மாயையெனவும் கடனுகடனவலியதெனவும் அறிவன்றாதலிற் பேதமெனவும் அறிவையன்றியின்றாதலி னபேதமெனவும் கோ டற்குமாறென்னை. ஒன்றே யிரண்டாகவு மன்றாகவு மிருத்திலி னறிவரிதென்றார். இது வழூவன்றுபசாந்த நிலையதெனக்காட்ட என்பவெனப்பட்டது. மதத்தருக் கிந்நிலையறிவரிது. (உ0)

தத்தமதி மயக்கயலதன்றி
யெத்திறத்த கறலிஃதுணராக்கடை
பெருகுமுக்குற்றம் குன்றுமாறென்ன
மாயாவிலக்கியம் வேறெனல் பிதற்றே.

(இ-ள்.) எவ்வுயிர்க்கு மயலாகக்காணும் பிரபஞ்சந் தங்க தங்கள் மதிமயக்கேயன்றி வேறன்று. இவ்வுளவு காணுக்காறு தாமெங்ஙன மன்னியங் கழலுமாறு - தத்தெரிசனமல்லா வெ லாவரிய முயல்வுந் தினைத்துணையு மன்னியங்கழறற் கன்று க்குற்றமுஞ் சுருங்குமாறுபோற் காட்டிபெருகற்கு. இத்திற தது தமது மதிமயக்கென்றறியாது மாயாவிலக்கியம் வேறுண் டெனத் தெரிந்தார் போற்கூறித் திரிவதெல்லாம் பிதற்றலே யன்றி வேறன்று.—எ-று.

தத்தம்பித்து மீக்குற மயக்கஞ் சுருங்குறுவாறு போறலின் தத்தமதிமயக்க யலதெனவும். விருத்திஞானத்தாலன்றித் தெ லேதற் பாலதன்றாமையின்-எத்திறத்தகற லிஃதுணராக் கடை யெனவும். எனையவருந்தவத்தால் முக்குற்றங் குன்றுமாறு போற் காட்டிப் பெருகற்கிடந்தரலின் - பெருகுமுக்குற்றங் குன்றுமாறென்னவெனவும். தன்மயக்கமென்றறியார் மாயை வேறென்னலின் - பிதற்றேயெனவுங் கூறியவாறுகாண்க. உக

மதிமயக்குல கெனக்காண்குருவேயிலை
யென்பயனேற்ற லவர்மொழிமேலா
மாயாவிலக்கியம் பிறிதெனல்பிதற்றே.

(இ-ள்.) தத்தமதிமயக்கே யுலகெனக்காணத்தக்க குருவெ ங்கணு மில்லவே யில்லை-இவர்மொழியை மேலாயவுபதேசமா கக் கோடலில் யாதுபயனுறும்; இவர் மாயாவிலக்கியம் வேறெ னக் கூறுவதென் சிறப்பு,இன்றாதலின்-பிதற்றலேயாம்.—எ-று.

தன்கோணலைத் தானறியாதாரொன்னு முலகவழக்குக்குச் சான்று பிறரன்றாதலின்-குருவேயெனத்தேற்றேகாரங் கொடு த்ததென்க. (உஉ)

அனைத்துந் தத்தந்தடிப் பன்றயலெனச்
சொல்லாலன்றி சோதனையாதி

முகத்தாற்காட்டாப் புறட்டேபிறிதல
மாயாவிலக்கிய மென்மனார்புலவர்.

(இ-ள்.) அகம்புறக் காட்சிகளும் - பாவாபாவமும், இவை போல் வனபிறவும் - தத்தம்பிரதி பலினத்தடிப் பன்றுவேறெனச் சொல்லால் வாதிப்பதன் றியர்த்தங்காரணமாகச் சோதனையாதிய் வேதுக்களாற்காட்ட வகையறியாத புறட்டே மாயாவிலக்கியமன்றி வேறெனலன்று - எனச் சத்துக்கள்கூறுவர்.—

தனது சங்கற்பமன்றித் தினைத்துணையு மயலின்மையி னிங்ஙனங் கூறியதென்க. (உக)

தன்கற்பிதத்தைத் தானெனில்யாதோ
தானெனுங்சுயம்பிங் கின்றிக்கொள்ளா
தென்னிலறியா மயக்கேமாயா
விலக்கியமென்னற் கிழுக்குறலென்னை.

(இ-ள்.) உபாதித்ரய முதலியவனைத்துந் தன்னால்விளைந்த கற்பிதமேயன்றி வேறன்று - இதுதெரியாது, இக்கற்பிதத்துளொன்றைத்தானெனக்கொள்ளில், இங்ஙனங்கொடற்குச் சுயம்பா நின்றுள்ளதானெனல் யாதோ-இன்றிக்கொள்ளுமா? கொள்ளாதாயின் - தன்னைத்தானென வுள்ளவாறறியா மயக்கமே, மாயாவிலக்கியமெனற் கிடையூறென்னை.—எ-று.

எல்லாவிதத்தினு மின்றெனப்பெற்றாம். (உச)

மாயாவிலக்கிய மறியாவயினதின்
இலக்கணமுணர்தற் கெங்ஙனமியையும்
சொல்லாலென்பய னெய்துறுமென்றுத்
தக்ககுறியா விலக்கியம் விளக்கி
இலக்கணநெறியை யியம்புதுமன்னே.

(இ-ள்.) மாயாவிலக்கிய மிஃதென வறியாவிடத்து அதினிலக்கண மெங்ஙனமுணர்தற்குக் கூடும், இங்ஙனங் கூடாவிடத்து வறியசொல்லாலிதனை வாசிப்பதில்யாது பயனுறுமென்னவுணர்தற்கியைந்த தக்ககுறியால் மாயாவிலக்கிய மிதனையதெனவிளக்கியதி னிலக்கணமுறையைப் பெரும்பாலு மினிவிளங்கக் கூறுதும்.—எ-று. (உரு)

மாயாவிலக்கியமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - உகஉ.

---

ஒன்பதாவது

## அசத்திலக்கணம்.

அசத்தெனல் தனக்கெனச் சொரூபமொன் றின்மை
தோற்றன்மாத்திரந் தன்றியென்ப.

(இ-ள்.) அசத்தெனப்படுவது - தோற்றன்மாத்திரஞ் சொன் மாத்திரத்தாலன்றித் தனக்கெனச் சொரூபமொன்றின்மையே யெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

எனவே - நாமரூபமென்றாயிற்று. ரூபம்; உருவம் - அருவம், ரூபாரூப மென்பவற்றிற்குப் பொதுப்பெயர். உ-ம். 'சிற்சொரு பந்தானே செகசொருபமானவெலாந் - தற்சொருபசார மாச் சாற்றவே, பொற்சொருப - மச்சுருவாம்போலவ துவதுவாத் தோற்றுமொரு-சொச்சொருபந்தானே துணை.' இன்னும் பிற வற்றானுங் காண்க. (க)

சுயம்பெனற் கியையாக்கருத்து காட்சிப்
பொருள்களனைத்து மசத்தேயெனப்படும்
எத்திறத்தானு மறுக்கினுமென்ப.

(இ-ள்.) இது சுயம்பெனற் குடன்படாத கருத்துப் பொரு ள்காட்சிப் பொருளெனப் படுவனவெல்லாம், அசத்தேயென்று சொல்லப்படும்; யாதோர் வல்லபத்தான் மறுக்கினுமெனச் சத் துக்கள் கூறுவர்.—எ-று.

மறுப்பது பேதவாதமாகுனும். உடன்படாதது, அபேதவா தமைந்தானும். உபாதான வுபாதே யதர்ம்மமகன்றதுயாது மின்மையின் திருக்கேதிரிசியமெனப்படு மன்றித்தனித்தோா முதலாகவுஞ் சுயம்பாகவும் வரையறுத்து நிற்பதெங்ஙனு மெ ன்றுமின்று. ஆதலின் திரிசியமெனப்படுவது - அசத்தேயெனப் படுமென்றார். (உ)

காமவெகுளி மயக்கஞ் செய்யாப்
பொருளிடங்காலமின்றெனை லசத்தைக்
காட்டுங்குறியெனற் கையமின்றே.

(இ-ள்.) காமவெகுளிமயக்கத்தைச் செய்யாத பொருளிட ங்கால மின்றென்பது - அசத்தைக்காட்டுங் குறியெனற்கைய மென்னை - இன்றே.—எ-று.

அனைத்தும் விகாரமயமாதலின் முக்குற்றத் தகலாவென்று யிற்று. ஆகவே - அசத்தெனற்கைய மின்றேயென்றார். (௩)

நானெனுங்காறு மல்லதையசத்தே
யவத்தாவயப்படுங் குறியதானே.

(இ-ள்.) நானெனற்கு யோக்கியதல்லா ததையறியாமையா லெனுங் காலமளவும் - அஃதசத்தெனற்கே யுடன்படும், சத்தாவத்தா வயப்படுங்குறியிலைல்.—எ-று.

நானலதைநானெனல்; அகர்த்தா - தேகம், அநாத்மா-முதலி யவாகவழங்கும். இவ்வாபாசத்துக் ககன்றாரரியர். எனதெனற் ககல்வதெங்ஙனம். (௪)

விகாரநெறியை மாறியறியின்
சத்தெனலெல்லா மசத்தெனப்படாவோ
அசத்தென லெல்லாஞ் சத்தெனப்படாவோ
உறுவதெவ்வாறு பசாந்தநிலையே.

(இ-ள்.) விகாரநெறியினையதெனச் சற்றுமறியாது மாறியறி யின்-தாங்கூறுஞ் சத்தெனப்படுவன வெல்லாம், அசத்தெனற் கியையாவோ, அசத்தெனற் கியைவவனைத்தும் சத்தெனப்படா வோ, இங்ஙனந் தெளியாநிலையுறின், உபசாந்தநிலை யடைவ தெங்ஙனமோ யாமறிகிலம்.—எ-று.

அரிசியின் விகாரமாவெனின் மீண்டு மரிசியாகவேண்டும், கூடாமையாற்குற்றமே. இதுபோல - நாமரூபமே சங்கற்பமெ னின், மீண்டு நாமரூபமாகவேண்டும். சங்கற்பம் - நினைவு நினைவே நாமரூபமாகத் தடிப்பதால் - மீண்டுநினைவாகின்றது ஆதலினது கூடாது. இங்ஙனமயங்கிஉப சாந்தம்வாய்க்கா தென்பது. (௫)

அறிபடுபொருளே திரிசியமென்னில்
அர்த்தமில்லா வனர்த்தரூப
மாதலின்முற்று மசத்தெனற் கிழுக்கென்.

(இ-ள்.) அறிவு - அறிபடுபொருளென்னு மிரண்டில், அறி படுபொருளே திரிசியமெனப்படுமாயின், அஃதார்த்தமென்பது

சற்றுமில்லாத வனர்த்தரூபமாகமுற்று மிருத்தலின், அசத்தென்பதற்கு வழுவென்னை.—எ-று.

தனக்கெனச் சொருபமொன்றின்மையே கிரிசியமாயின் முற்றும்விகாரரூபமென்பதாயிற்று. இதனினு மசத்தெனற் கிலையவதியாதுளது இன்றாதலின் அசத்தெனற் கிழுக்கென்னென்றார். பராமுகத்தினர்க் கிஃதெட்டரிது. (௬)

விகாரமயமே யுலகெனிற்சத்தெனல்
எங்கனமிலையதற் பாலதாகும்
இன்றாலசத்தே முரணதென்னை.

(இ-ள்.) உற்றுநின்றாய் வுழியுலகென்பது விகாரமயமாகுமாயின், எங்ஙனஞ் சத்தெனப்படும், அங்ஙனங்கூறினு மிலையதற் பாலதெங்ஙனம் கூடாமையின சத்தேயாம், இதற்குமாறெய்து மாறென்னை.—எ-று.

சத்தென்பது - கூறுவார் குற்றமன்றி இலையுங் குற்றமுலகின் மிசைத்தன்று. இஃதறியார்யாது சாதித்து மென்பயன். (௭)

எங்ஙன மெங்ஙனம்யாது நிற்பினும்
அங்ஙனமங்ஙன முணர்தல்சத்தெனில்
ஐயந்திரிபுக் ககலிலேற்பம்
இன்றேல் முரணதாகுமென்ப.

(இ-ள்.) யாதுயாது எவ்வெவ்வா றிருத்தற்பாலதோ அவ்வவ்வாறிருக்க அவ்வவ்வண்ண முணர்தலே சத்தெனப் படுமாயின், ஐயந்திரிபுக் கிடமின்றாகவேண்டும், இன்றாயின் சத்தென்றேற்குதும், ஏற்றற் கிடம்பெறுவதின்றேல் சத்தெனல் மாறாகவே முடியுமெனச் சத்துக்கள் கூறாநிற்பர்.—எ-று.

அலையாதிபோறலி னிசவடிவமன்று, ஆமெனக் கோடலேயசத்தெனலன்றி யயலன்று (௮)

அகம்புறநோக்கே சத்தசத்தன்றி
யிருமைவினை முதலெங்ஙனமிலையும்
இங்ஙனமுணராக் குற்றமசத்தே.

(இ-ள்.) அந்தர்முகநோக்கும் பகிர்முகநோக்குமே சத்தெனவு மசத்தெனவுங் கூறற்கிலையுமன்றி யிவ்விருவகை புடைபெ

யர்ச்சிக்கும் வினைமுதல்யாதோ வஃதெங்ஙனமியையும், இங்ஙனமாய நிலையை யுணராக்குற்றமே யசத்தெனப் படுவதன்றி வேறன்று.—எ-று.

இருவகைநோக்காலியை வதுசத்தசத்தென்னற்க. இங்ஙனமாய நிலையையுணராமை யசத்தெனலும், உணர்தல் சத்தெனலுங் கோடல்மரபென்க. (கூ)

விடயமேபயனுக் கோடலளவும்
தன்னைநன்குணர்ந்து மவலமென்ப.

(இ-ள்.) விடயமே பயனாகக்காணு மயக்கந் தெளியாவளவுந் தன்னைத்தானே யந்திரிபற நன்குணர்ந்தும் யாதுபயனுறும் அவலமேயெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

அனைத்தையுந் தானாகக்காணத் தெரிந்தும் விடயமயக்கம் விடாமையால் அதுகாறு மசத்தேசத்தாகக்காணும், காணளவு மல்லலே பயனாகவமைதல் திண்ணமாலிதன், அவலமென்றார்.

கலக்கந்தெளியா வயினெவனுய்ந்தும்
சத்தெனுமங்குரங் காண்டலெங்ஙனம்
இன்மையினசத்தே மயமதாகும்.

(இ-ள்.) திருக்குதிரிசியார்த்தவள புதெளியாவிடத்தவையனைத்து மொருங்குணர்ந்தும் யாதுபயனுறும், இங்ஙனமாயின் சத்தென்னு மங்குரமெங்ஙனந் தலைகாட்டும், காட்டற்கிடமின்மையின், அசத்தேயுண்மைமயமாக முடியும்.—எ-று.

கலக்கம் - பிராந்தி. அது - சித்தப்பிராந்தி, செகத்பிராந்தியென்றிருகூறும். இவ்விரண்டு மொருங்கேயொருவலைத் தெளிதலென்றார். (கக)

சத்தை யன்றி யசத்தென லுண்டேல்
சத்து முண்டாந் தானென லன்றி
யின்றெனி லற்றே யஃது மென்ப.

(இ-ள்.) சத்தெனலை யன்றி யசத்தெனல் வேறு முதலாகவுளதாயின் தானெனலை யன்றிச் சத்தெனலோர் முதலாகவுண்டாயிருக்கலாம் இன்றெனி லஃதுமன்னதேயென் றறிஞர்கூறுவர்.—எ-று.

எனவே தானெனு நிலையையன்றிச் சத்தும் அந்தச்சத்தை யன்றி யசத்து மின்றெனப்பெறும். பெறவே கூடஸ்தபிரமம் சத்தும் சீவேஸ்வரர் அசத்துமென்றாயிற்று. ஆகவே தானே யுண்மையெனக் கண்டாம். இங்ஙன மெட்டிக்காணு வளவு மிழுக்குறுமாதலி னிதுவே யசத்தென லெமதுமதம். இஃதிருவர் மாறுகோளொரு தலைதுணிவென்க. (கஉ

சத்து மசத்து நானே யன்றிப்
பிறிதன் றெனவுணுங் காறு மசத்தே
யெத்தடை யுறினு மிதுவா முடியும்.

(இ-ள்.) சத்தாகவு மசத்தாகவு மிருப்பது யாது நானென லோ அதுவே யன்றிப் பிறவெனப்படுவன வெல்லா மல்லவெனச் சிந்தித்துத் தெளியாவளவு மசத்தேயாகும் அன்றென மறுக்க வெத்தடை நேரிடினு மிங்ஙன மசத்தாகவேமுடியும். எ-று

அஞ்ஞானமாகிய தேகத்தை நானென்றதூஉம். ஞானமாகிய சொப்பிரகாசத்தை நானென்றதூஉம் யானே யாயினும் இவ்விரண்டும் பருவத்தவசரமன்றி யானன்று என்றுணராமையே யசத்தெனப்படு மென்பார். பிறிதன் றெனவுணுங் காறுமசத்தே யென்றார். (கங)

புறமுக நோக்கே செகமாத் தோற்றும்
வேறென லெல்லா மகறற் கன்று
அகமுக நோக்கே யறிவா விளங்கும்
இதுதெரி காறு மசத்தென மொழிப.

(இ-ள்.) பகிர்முக திருஷ்டியே செகத்ரூபமாகத் தோற்றும் இங்ஙன மன்றிச் செகத்துக்காதாரம் வேறெனப்படுவனவெல்லா மதனை விலகற்கன்று விலகற்குபாயம் அந்தர் முகதிருஷ்டி வாய்க்கிலதுவே சிற்சோதியாக விளங்கும் இந்த மார்க்கமுணராவளவு மசத்தென் றறிஞர் கூறுப.—எ-று.

இவ்விருவகை நாட்ட மறிவானுண்மை யுணர்ந்த பரஞானி யன்றி அபரஞானியன்று. ஏனையரைச் சொல்வதென்னை. (கசு)

உடலே யுயிரென் றுன்ன லொழியா
அனுபவத் திடமத கலா ருலகைச்
சத்தென லெங்ஙன் தடையுறு தெய்தும்
மற்றவுங் கூறுவ தென்னை யென்ப.

(இ-ள்.) அநாத்மாவான வுடலே யாத்மாவென் றுள்ளபடி கொள்ளு மனனஞ் சற்றுந் தளர்வுறு வனுபவத் திடஞானத்தி னின்றுந் தினைத்துணையு மகலாதா ருலகைச் சத்தெனக்கொள் ளுங் கொள்கை யெங்ஙனம் விக்கினமின்றி யமையும் இம்மட மை காரணமாகவெய்து மேனைய கொள்கை யனைத்துங் கூற வேண்டுவ தென்னையுளவென் றறிஞர் கூறுவர்.—எ-று.

விபரீத நாட்டமுங் கருத்து மகலாக் காறும் பண்டிதரு மு ண்மையெனக் கோடலனைத்துஞ் சத்தெனற்குடன்படுவ தெங் ஙனங் கூடாதென வறிக. விட்ட விலக்கணைக் குடன்படா வளவு மெய்துந்தோட மினையதென வுணர்த்தியவாறு காண்க

உலக மயமாச் சித்தங் கொள்ளாக்
குரவர் கண்டில மிவர்சத் தெனலே
நிவர்மொழி யேற்றல் மடமை மடமை
அல்லல் பயனு வமையு மென்ப.

(இ-ள்.) உலக மயமாகத் தமது சித்தமாக்காக் குரவர் சிகா மணிக ளிருக்கக் கண்டில மெங்களும் இத்திறத்தினர் கூறுஞ் சத்தென லெங்ஙனமாயதோ இவர் மொழியை யாயாதேற்றல் முழுது மடமையன்றோ அதனாலெய்தும்பயனல்லல் மயமன்றி யாதுங் கண்டிலமெனச் சான்றோர் கூறுவர்.—எ-று.

எனவே சித்தத்தின் பிரதிபலனஞ் செகமென்றறியாமென் பார் உலகமயமாச் சித்தங் கொள்ளாக் குரவர் கண்டிலமென் றார். அசத்தினிலே காணலரிது. (கக)

நினைவே நிணைபா விடமென லறியாத்
திறமசத் தென்ப தெளிந்திசி னோரே.

(இ-ள்.) நினைவே நினைபாவிடமாப் பரிணமித்திருப்பதல் யயலன்றெனலைச் சொல்லினு முணரவறியாத் திறமே யசத் னக் கூறு நிற்பர் ஐயந்திரிபறத் தெளிந்த சிந்தையர்.—எ-று

யாவரேனுந் தத்த நினைவைத் தள்ளிக் காலதேச வஸ்து ளிருக்கக்கண்டன ருளரோ உளரெனில் அன்னியோன்னி பாவமுறற்கே தென்னைகொலோ ஆதலினிலரொன்பம். இ பகிர்முகநோக்கா லெய்திய பிராந்தியெனச் சற்று முணர திறத்ததாதலி னிதனையே யசத்தென்றும். நினைவைச் சலியா நிறுத்தி லிங்ஙனமாய வனுபவம் விளங்கும். இன்றேல் அ லாம். அயலெனல் வாஸ்தவமன்றாதலின் மூடமென்றாயிற் இந்த மூடத்தை யசத்தெனற்கிழுக்கென்னை. இங்ஙன முண விடத்துத் திரிகாலஞான முதலியவற்றாலெய்தும் பயன்யா மூடமேயென்க. (கஎ

மாயா காரிய முலமெனற் கிசையா
ஆஸ்திக நாஸ்திக ரொனுங்கலை வல்லோர்
நாட்டுவர் சத்தென விதுவியப் பாகும்
முற்று முணர்ந்தவர் முன்ன ரொன்ப. (கஅ

பிறந்திறந் துயிர்கள் வருத வியற்கைக்
கிடமுல கன்றோ வென்று மாதலின்
அசத்தென லெங்ஙன மாகுமென்பர். (கக

தனக்கெனச் சொருப மின்றாய் முடிவதென்
றாய்தலின் கண்ணே யதுதின் ணமதேல். (உ0

ஆய்தலி னழிவுறின் முன்போ லிருப்பதென்
எப்பொரு ளுந்தா னீதசத் தன்றே. (உக

அணுக்கள் குழுவா லமையாப் பொருளிலை
என்ன வுன்னைக் குற்றத் தன்றோ
காம வெகுளி மயக்க விளைவு
இஃதழி தற்கிட மின்றோ வுண்டோ
உளது பற்றிய சத்தெனல் சத்தியம். (உஉ)

காட்சிக் குளதாக் காண்டலி னதுவது
ஆய்தலின் பின்னரு மசத்தெனல் பிழையே. (உங)

பழுதையைப் பழுதையாப் பார்த்த பின்னர்
பாம்பெனத் தோற்றினும் பயகம் பனமிலே. (உச)

தோற்ற லென்னே திடப்படா ததினல்
தோற்றமெதன் பாலதோ வறிவின் பாலதே
விடயத் தன்றோ வாய்தலி னெங்கே
அயலெனப் படுவதெ னன்றெனப் படுவதென்
அனைத்து மறிவோ வயலா விலாதென்
என்பய னிதனு லென்பய னதனல்
உலக விழப்பெனின் மயலிழப் பன்றோ
மயலிழப் பென்பயன் மயனுதிப் பென்பயன்
உலகந் தோற்றுந் தோற்றிக் கண்டதென்
சுகப்பே றன்றோ துயருற லென்னே
சுபாவ மன்றோ வுறக்கத் தெங்கே
கண்டபோ தின்றோ வனித்திய மன்றோ
தோற்ற மறப்பை யேற்றலி னயலே
ஞெப்தி யன்றி யிவ்விரண் டெங்கே
ஆதலி னனைத்து மறிவன்றி யிலதால்
அசத்தெனப் படுதற் கையமின் றென்ப. (உரு)

அயலெனக் காணின் மனவலே வுக்கிடம்
அன்றெனக் காணின் மனமமை திக்கிடம்
அயலெனத் தோற்று மாயு மட்டும்
அயலாத் தோற்றலு மன்றுத் தோற்றலும்
அறிவை யன்றி யிலதா லசத்தே. (உசா)

மாயையை மெய்யெனல் மடமையில் பொருள்
அதுவே யுலகாத் தோற்று மதுவிடிற்
சற்று மில்லை யாதலி னசத்தே. (உஎ)

சத்தெனற் கருத்த முள்ள தாதலின்
உள்ள தென்பதை யேற்றலொன் றிலாதலின்
அசத்தெனற் குலக மைய மின்றே. (உ…

சகமுள தென்றிங் கறிதலு மறிவே
சகமில தென்றிங் கறிதலு மறிவே
அறிவொன் றாயினு மறிவினை யிரண்டாம்
இதனால் வினைமுத லறிவறி யாமை
யெனும்பெய ரேற்கு மென்மனார் புலவர். (உ…

ஒன்றே சத்து மசத்து மாகும். (௩…

சத்தெனு மவசர மெய்மை மெய்யெனல்
அசத்தெனு மவசரம் பொய்மை மெய்யெனல்
இங்ஙன மறித லறிவா தலினாற்
சத்தே யசத்தெனச் சாற்றப் படுமே. (௩…

அசத்தே சத்தெனற் கிடையூ றென்னெனிற்
படமே நூலுங் கடமே மண்ணும்
பணியே பொன்னு மென்னு மாதி
யனுபவ முளதே லேற்ப மென்ப. (௩…

(ஆதலின்) சத்தே யசத்தெனற் சத்திய மிதனை
மறுத்தற் கிடமிலை யெவ்வகை யானும். (௩…

அறிவின் பரிணமிப் பாதலி னனைத்தும்
அறிவை மறைப்பதற் கதிசய மென்னை
தினகரன் கதிரி னென்றுபுய லாதலின்
ஆதே யந்தணு லாதார மறைதல்
எவர்கண் டிலாதா ரெங்கணு மென்ப. (௩…

ஒன்றை யொன்று யறிதலஞ் ஞானம்
அதனாற் றோற்று மொன்றென் றாக
எங்ஙன மென்னிற் பூத மன்றிப்

பௌதிக மிலையாற் கற்பித மன்றோ
இதற்குப் பூத முண்மை யன்றோ
பௌதிகந் தன்னை யுண்மையாக் காண்டலென்
காண்ட லாலே மிகுமுக் குற்றம்
அல்லல் விளைவுக் கிதையன்றி மூலம்
இல்லை யதனு லனர்த்த நோக்கை
விட்டாற் றோற்றுமோ முன்போ லனர்த்தம்
அறியாமை யன்றி யனர்த்த முளதேல்
அறிவை யன்றி யறியாமை யுளதென்
றேற்றற் கைய மில்லை யென்ப. (௩௫)

சத்தே யசத்தெனல் சோதனை ஞாய
சம்மதத் தாதலி னுபநிட தங்கள்
மேற்பிழை யென்னை விவர்த்தம தென்ப. (௩௬)

கிளிஞ்சலை வெள்ளி யென்னக் கருதிப்
பணிசெயப் புக்கது போலுறுங் கொள்கை
அவலத் தழிவீ ராயுமி னென்ப. (௩௭)

உளதுபோற் காட்டி யவலத் தழுத்தும்
உலகின் றன்மை யறியா ரினிதென்
றுணர்ந்து நித்தியஞ் சாதித் திடுவர்
இவரை யறிஞ ரென்ப தென்னை. (௩௮)

சத்தெனி னசத்தென் றிடம்பெறற் கென்னை
காட்சி யனைத்துங் கருத லனைத்தும்
எத்தகை சோதனை யானு மென்ப. (௩௯)

முன்பின் னின்று மொன்றறி யாவுயிர்
இடையினு முடலை யன்றி யறியா
பந்தத் தென்பயன் பாருமி னுலகீர்
இதனைச் சத்தெனற் குறுதியென் னென்ப. (௪0)

மனத்தை மயக்கச் சத்தெனக் காணும்
மனந்தெளிந் தக்கண் மயக்க மெங்கே
ஆதலிற் பிராந்தியே சகமெனல் சத்தியம். (சுக

பிராந்தி யென்ன லொன்றையொன் றாக
வறிதலி னங்ஙனந் தோற்ற லென்ப. (சுஉ

அசத்தெனற் கின்னு மைய மென்னை
உயிர்பர மெனலே யோர்து மினியாம்
சத்துயி ரொன்னி லுபாதி மூன்றும்
அன்றே யுயிரென லெதனைச் சான்றெனின்
அளவு குறிக்கி லசத்தென லேற்பம். (சுங

எந்தத் தனுவோ டேனு முயிர்த்திருப்
பதனு லுயிரெனப் பகரப் படுமே. (சுச

உயிரெனப் படுமோ வுபாதி கழலில்
உயிரெனற் கருத்தம் வெறுஞ்சொல் லென்ப. (சுரு

அறிவை யன்றி யுயிரென விலையால்
அறிவைச் சத்தெனி லேற்ப மென்ப. (சுசா

அறிவை யன்றி யயலுயி ரொன்னில்
அசத்தெனற் கைய மின்றென மொழிப. (சுஎ

அன்னிய முணரினுந் தனையறி யாதவை
யறிவெனப் படினு மாகா தென்ப. (சுஅ

தனையறி யாததே யபர மென்றூர்
அறிவதே பரமென் றூர்தெளிந் தோரே. (சுகூ

அபர வுணர்வை யசத்தெனலாகும்
பரவுணர் வதனைச் சத்தெனத் தகுமே. (ருo

அபர வுணர்வைச் சீவ னெனவும்
பரவுணர் வதனை யான்மா வெனவும்
ஞானநூ லனைத்து நவிலு மென்ப. (ருக)

பிம்ப மான்மா பிம்பப் போலி
உயிரெனு மறையி னந்த மென்ப. (௫௨)

பிம்பஞ் சுயம்பு போலி கற்பிதம்
என்பர் சோதனை முகத்தி னானே. (௫௩)

உயிரெனல் கற்பித மாதலி னசத்தே. (௫௪)

ஆதலின் மாயா காரிய மெனப்படும். (௫௫)

ஆன்மாவை யன்றி யுயிரென விலதால்
வெறுஞ்சொற் றோற்ற மென்மனார் புலவர். (௫௬)

சகமுயிர் போலப் பரமு மாயா
காரிய மெனலை யாய்குது மிங்கே. (௫௭)

உபாதிகுணந் தொழிலை யுயர்பர மென்பர்
கற்பித மென்று காணா தவரே. (௫௮)

உபாதி பரமெனி லசத்தெனப் படுமே. (௫௯)

உபாதி குணந்தொழின் மூன்றும் வியட்டி
சமட்டி யெனப்பட் டுயிர்பர மேற்கும். (௬0)

உபாதி தூலஞ் சூக்குமங் காரணம்
என்ன மூவகை யேற்கு மென்ப. (௬௧)

சமட்டி வியட்டி யேற்குமம் மூன்றும். (௬௨)

சமட்டி வியட்டி யுபாதி மூன்றுஞ்
சடமசத் தாதலி னுயிர்பர மன்று. (௬௩)

குணமுஞ் சமட்டி வியட்டி யாயினுங்
குணமுத லன்று குணியிருட் பதினால்
உயிர்பர மெங்ஙனங் குணமெனப் படுமே. (௬௪)

பஞ்ச கிருத்தியஞ் சிறிது பெரிதா
யிருக்கினும் வினையே வினைமுத லாமோ
வுயிர்பரம் வினையன் றென்மனார் புலவர். (௬௫)

உபாதி குணந்தொழி லுயிர்பர மன்றெனக்
கணித்ததற் கைய முளதே லேற்குநும்
சோதனை யாதி மூன்றி னானும்
அன்றென் றடரு மேலா ரென்ப. (சாசா

ஒற்றுமை நயத்தா லபேதமாக் காணினும்
வேற்றுமை நயத்தாற் பேதமாய்ப் பிரியுஞ்
சிரவண மாதி சோதனை யானே. (சாஎ

முதற்குச் சினைகுணந் தொழிலோ டன்றிச்
சினைகுணந் தொழிற்கு முதலோ சினைகுணந்
தொழிற்கு முதலெனி னிறைமை யிருவகை
யென்ற தென்னை யிலக்கணந் தன்னில்
ஆதலிற் பரமுயிர்க் கிவைதற் கிறைமை
விலகி முதலா யிலகயி னென்ப. (சாஅ

ஆயிற் பரமுயி ரிவையன் றெனின்யா
தறிவெனப் படுதற் கைய மின்றே
சோதனை யாதி முதற்றி றானே
மறுக்கி லேற்பந் தடையுறிற் குடைபடும். (சாகூ

அவ்வழி வேறு முபாதி வசத்தானின்
அபர மெனலா லசத்தெனப் படுமே
படலான் மாயா காரிய மெனப்படும். (எo)

பரஞான மன்றி யபர மிலையால்
முதற்கா ரணகா ரியமென மொழிப. (எக)

இங்ஙனம் பற்றிப் பராபர மென்றார்
இவ்விலக் கணமெலா மொருங்குணர்ந் தோரே
அல்லார் சொலிப்பய னென்னை யென்ப. (எஉ)

அபர வுணர்வே சகமுயிர் பரமெனல்
அல்ல வென்பார் காட்ட வகையிலார். (எங)

அபர வுணர்வை யறியாமை யென்ப. (எச)

பரவுணர் வதனை யறிவெனக் கூறுப. (எரு)

பரவுணர் வென்பது தனைமற வாத
அவசர நிலையென் றறையப் படுமே. (எசு)

அபர வுணர்வெனல் தனைமறந் தவசரம்
அதுவே சகமுயிர் பரமாத் தோன்றும். (எஎ)

பித்தமே யுறினுஞ் சன்னிமே யுறினும்
புத்தி விகற்பப் பட்டெதி ரில்லாக்
காட்சி விபரீ தம்பல வாகத்
தோன்று மதனை மெய்யெனக் கண்டு
பற்பல வாகப் பிதற்றலைக் காண்பம்
நீங்கில் விகற்பமுந் தோற்றமு நீங்கும். (எஅ)

(அதுபோல்) புத்தி விகற்பே மாயை யென்னல்
அதுவே சகமுயிர் பரமாத் தோன்றும்
விகற்பறி லறிவாய் விளங்கு மென்ப. (எகூ)

பொய்யெனல் சோதனை முகத்தாற் றெரிதும்
சொல்லா லேற்கின் மயக்கரு தென்ப. (அ0)

உபமான மெல்லா மேக தேசம்
ஏற்கத் தகுவதை யேற்றலி னென்ப. (அக)

காரிய நோக்காற் காரணம் விகாரம்
காரண நோக்காற் காரிய காரண
மென்ப தின்றிச் சுயம்பா நிற்றலின்
அவிகார மென்ன வறையப் படுமே
விகாரம் பற்றிய விகார மாதலின்
இதனையே மாயா விகார மென்ப. (அஉ)

இல்லை யல்ல வெனுந்தகை யேலா
தாமுண் டெனுந்தகை யேற்கக் காட்டின்
மாயா மயமென தனைத்து மென்பம். (அ௩)

இல்லவே யில்லை யதனு லசத்தே
அனைத்து மாயா மயமெனற் கிடையூ
றென்னே வுபநிட தங்க ளென்ப. (அச

உண்மையென் றறிவார் தோற்ற மதனைச்
சகமாதி மூன்றுஞ் சத்தென மொழிவர்
இவர்முடி பேலா ரெங்கணுங் கண்டிலம்
இதுவே சகல மதசம் மதமெனல். (அரு

இவரைக் குருவென் றேற்கிற் குளிக்கப்
போய்ச்சே றதனைப் பூச லொக்கும்
மயக்க மறுக்கா ரதனு லென்ப. (அசு

கள்ள வேட மாசா ரத்தாற்
கள்ளரைக் குருவென் றேற்கி னரகே. (அஎ

காட்சிக் குண்மைபோற் காணினுஞ் சோதனை
யாட்சி தன்னு லனைத்து மித்தையே
மித்தை யாதலி னசத்தென மொழிப. (அஅ

அசத்திலக்கணமுற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்பட சூத்திரம்-௬உ0.

பத்தாவது

## சடவிலக்கணம்.

இலையென லெதுவோ வதுவே மாயை
ஆதலி னசத்தென் றறைந்தா முன்னர். (க

காரண மென்பவை யெல்லாங் காரிய
மாக முடிவ தபவாத மென்ப. (உ

காரிய மென்பவை யெல்லாங் காரண
மாக முடிவது கற்பனை யென்ப. (ந

மெய்யெனக் கொள்பவை பொய்யென முடிவது
அந்தர் முகத்தி லென்மனூர் புலவர். (௪)

பொய்யென் பவற்றை மெய்யெனக் கோடல்
பகிர்முகத் தென்பர் பழகி னோரே
இவையெலா மசத்தெனற் கியையா தொன்றிலை
யிருக்கி னன்றோ வறிதற் பாற்றும்
ஆதலி னஃதே சடமெனற் கியையும். (௫)

யாதனு வேனுஞ் சத்தெனற் கியையின்
சித்தெனற் கையஞ் சிறிது மின்றே. (௬)

பரமு முயிருஞ் சாட்சி யிரண்டுஞ்
சித்தெனற் படாவோ வறிதலி னென்னில்
அதிட்டான மன்றி யவையுள வாயிற்
சத்தெனப் பட்டுச் சித்தென லேற்கும்
ஆயா தார்க்கீ துடன்பா டென்ப. (௭)

அறிவ தெதுவென் றறிவ தெதுவென்
றாயுங் காலை யலவல வென்னப்
போவ தெவன்கொல் பொறியாதி யாவும்
உளதேற் சத்துசித் தெனற் கிடையூறென். (௮)

கல்லா ரல்லா ரன்றோ கற்றும்
அசத்தைச் சத்தெனக் காணுங் காலை. (௯)

இல்லை யாயிற் சுகதுக் கங்கள்
எய்துவ தென்னை யாய்ந்த வக்கணம்
இரண்டு மிலாதென் னுள்ள தாயின்
தொலையா மயக்கந் தொலைவதெவ் வாறெனின்
கூறுதும் ஞாய மாதி யானே. (க0)

இல்லை யெனும்பொரு ளேலா தொன்றிலை
இருப்ப தாகத் தோற்றிச் சுகத்தைத்

கருத லேலா வுயிர்க ளொன்றிலை
இங்ஙன மிருத்த லிரண்டும் பகிர்முகத்
தவசரத் தென்ப வறிந்திசி னோரே. (௧

சித்தே சடமாத் திரிபுவே றன்றும்
காரணங் கருதா வவசரஞ் சத்தாம்
காரணங் கருது மவசர மசத்தாம்
இங்ஙன மியையா திருக்கு மோர்பொருள்
கற்று மறியார் கலையுணர்ந் தோரே. (க

சோதனை யாவுறு சுகமோ தோற்றங்
காரண மாவுறு சுகமோ மாறு
நிலையதென் றுரைத்த லோர்பாற் றுணிபும். (க

மாறுமை சோதனை மாற வின்மை
யென்றே கொள்வ ரெவரு மென்னின்
றனக்கன் னியத்தைத் தாவலென் னுயிர்கள்
சுகமது பற்றி யென்று மாறுஞ்
சுகநிலை வாய்க்கின் முயற்சி யெற்றுக்
கிருந்த வண்ண மிருப்ப தாகும்
என்பது பொய்யோ மெய்யோ விதனை
யறிந்த விடத்தே யாருந் தேர்வே. (கச

கணத்தின் மாறலென் சுகநிலை யென்று
மெய்யாப் புகுவார் காண்பரோ வுலகை
அல்லார் காண்டற் கவறி யென்னை
பல்சான் றீரோ யவலப் படிப்பில்
பல்சான் றீரோ பயனின் மூப்பில்
என்சிறப் பிதனா லஃதினை யொப்பீர்
வாழ்வி னிங்ஙன மயறலைப் பின்றி
இதனா லச்சை யென்னே விலையே. (கரு)

அசத்தெனற் கைய மென்றே வனைத்தும்
ஆய்ந்துணர்ந் தோருக் கென்மனர் புலவர். (கசு)

சத்தெனக் காணுந் தகையதெ னனைத்தும்
உற்றுண ராமையி னென்ன வேண்டுமோ
ஆயினு மசத்தே சத்தெனக் காண்டலின்
சத்திரு மூவித மாகு மென்ப. (க௭)

(என்னை) ப்ராதி பாதிகம் பாரமார்த்திகம்
வ்யாவகா ரிகமென வேண்டற் பாற்றே. (க௮)

இவற்றை மேலோ ருரைத்திருப் பதனால்
விட்டன மினியா முத்திக் கியையப்
புகுது மதுர்த சடமிரண் டொன்றென
இந்நிலை கண்டா ரோற்கு மாறே. (க௯)

இல்லை யெனும்பொரு ளெங்ஙன முணரும்
தன்னை யுணராத் தகையி னானே
யறித லனைத்துஞ் சடம தென்ப. (௨0)

அசத்தே சடமெனற் கைய மிலதால்
சடமே யசத்தெனற் கென்றே வையம்
உளதேற் காண்ப முறையி னானே. (௨க)

தமையறி யாத பொறிகர ணங்கள்
அயலறி கருவி யாயினு மிருந்து
அன்றே வறியுஞ் சடமசத் தென்பதென். (௨௨)

அதிட்டான மன்றி யிலையுணர் கருவிகள்
பிம்ப விகார மெனப்படு மன்றிச்
சுயம்பெனற் கேதென் னசத்தெனப் படுமே. (௨௩)

எல்லாப் பொய்யும் மெய்போற் காண்டலின்
இதனை யசத்தெனற் கென்றே பிழையே. (௨௪)

அசத்தே சடமய லெனிற்சத் தாகும்
சத்தெனி லெங்கே சுயம்பெனுந் தர்மம். (உ

சடமே யசத்தய லெனிற்சித் தாகும்
சித்தே லொன்றை யொன்ருக் கொளலென். (உ

அசத்துஞ் சடமு மொத்திருப் பதனுல்
திரிசிய மதனுற் றிருத்தி யுற்றவரார்
அலைவு விட்டெங்கு முளமொனிற் சொல்லே
யுத்திக் கியையா வுறுதி தன்னுல்
எங்ஙனஞ் சுயநிலை யாகு மென்ப. (உ

உயிர்கட் கமைதி யிலாதற் கேதென்
அல்லா தவற்றைச் சத்துசித் தெனலால்
எப்பத விக்கணு மென்மனுர் புலவர். (உ

எவ்விதப் பண்டித ரோனு மிதனை
மறுத்தற் கிடமிலை மறுக்கி லடமெனக்
காட்டற் கியைந்த குறியிது திண்ணம். (உகூ

எந்நிலை சொல்லினுஞ் சத்துசித் தொவ்வா
முரணி னுத்திக் கெதார்த்த மன்று. (ருO

அசத்து சடமெனு மிலக்கண மேலாத்
திரிசியங் கண்டில மினிமேற் றுக்க
நிலையிலக் கணமதை நிகழ்த்துது மன்னே. (ருக

சடவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம்-ருடுக.

---

பதினென்ருவது

## துக்கவிலக்கணம்.

திரிசிய மெல்லா மநூர்த சடத்தின்
மயமலா தில்லை மாற்றத் தேடினும்

இதனைச் சுகமென் றெண்ணி யெண்ணிக்
காத்துப் பற்பல விதமாக் கோடி
கோடி கற்பஞ் சுகித்தவ ரெல்லாம்
நித்திய திருத்தித் தருமென வெண்ணம்
இழந்தன ரன்றோ தேகாந் தத்தில்
வாழ்ந்த காலத்துங் கிலேசப் படாரிலை
இலையெனிற் சிலரு மமதை யானே
மரண பயமதை மறந்தன ரன்றோ
விவேகி யல்லர் திரிசியந் துயரே. (க)

திரிசிய மனைத்து முண்மை யாயின்
சுகசா தனமெனக் கொளற்கிடந் தரலென். (உ)

விருப்பு வெறுப்புக் கிடந்தர லென்னை
சுகவடி வாயிற் றோற்ற மனைத்தும். (ங)

உள்ள தாயிற் றோற்று தென்னை
உறக்கத் தெவர்க்குஞ் சுகமிஃ தாமோ
சுகமெனக் கருதிற் றுயர்தர லென்னை
தற்சுக விழப்பே துயமொன் றறியீர்
நன்குணர்ந் தீரோ நன்குணர்ந் தீரோ
இதனை யுணரா தெதையுணர்ந் தீரோ
நல்ல கீர்த்தி வாய்த்தனிர் சாலும்
மூடர் வியக்கப் பெரும்பா லும்மே. (ச)

பசையிலாப் பழைய வென்பைச் சுவையென்
றெண்ணித் தன்சுவை யென்றுணராது
விடாது கறிக்கு நாய்போற் சுகித்தென்
உள்ள தாயின் வெறுப்புற லென்னை. (ரு)

சத்துப் போன்ற மூன்று சத்தை
யின்னதென் றறியா ரியற்கை யுலகிற்

கௌத்திடங் கொண்டு சுகிக்க லாமோ
பிரியமே துயரொன் றறியாத் தகையால்
அவாவெனுந் தாக மடங்கக் கண்டிலம். (

சுகமூல காயின் றுக்கந் தாவென்
இதனு லெவரு மிருதாராச் சுகமுன்
டெனவெண்ணி யாகந் தவமாதி செய்வர். (௭

ஈடணைத் துயர மியற்கை யுலகிற்
கென்பதற் கிணங்க வேற்ப தென்னை. (௮

உலகஞ் சுகமே லொருபடித் தெங்கே
வறியர் செல்வ ரெனப்பட லென்னை. (௯

வறுமையுந் திருவு மாறலென் னிலையா
திதுசுக மாமோ மடமை மடமை. (க0

ஈட்ட றுயரோ காத்த றுயரோ
யின்னும் பல்வழி முயற்சியுந் துயரே
யெங்ஙன மூலக மின்ப மெனப்படும். (கக

துயர்மய மூலக மென்றலோ யோகிகள்
கற்ப கோடி காலமுங் காணூத்
துறிபோற் கிடப்பர் சாட்சியே றென்னை. (கஉ

ஞானிக ளுலகைச் சின்மய மாக்கிக்
காண்ப தெற்றுக் கிறுதி யின்றித்
துயர்மய மென்றலோ துணிந்தன ரிங்ஙனம். (கங

காமியத் தவத்தருங் காணு துலகைத்
தவம்புரி வானேன் சாற்றுமோர் கிலாதென். (கச)

காளி பிடாரி யாதி பூசை
செய்கு வோருங் கண்ணை மூடிக்
கணநேர மேனுங் கருதிவந் திப்பர்

இஃதெலா முலகந் துயர்மய மென்னக்
காட்டக் கிடந்த குறியெனப் படுமே. (கரு)

அன்னிய தேக மன்னிய வுலகஞ்
சுகமு மன்னிய முறவு மன்னியங்
இருப்பது மிறவ லெண்ணமு மிறவல்
சுதந்தர மிறவல் பிறவியு மிறவல்
என்ன பாத்திய மிருப்பதாக் களிப்பம்
எண்வகை யின்பமுந் துயரோ மாறலின். (கசு)

பொய்யுட றன்னை மெய்யெனக் காண்டல்
சுகமோ துயரோ சொலவேண் டுவதென். (கஎ)

தேகி யணுவாத் தேக மகத்தாத்
தெளித றுயரெனச் செப்ப வேண்டுமோ. (கஅ)

பௌதிக மனைத்தும் விகார மெனுது
சுயம்பெனச் சுகசத் துறுத றுயரோ. (கக)

தனித்தனி சொலப்புகி னளவின் றுதலால்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவுந்
தெற்றென வுணர்த றெளிந்தோர் கடமை. (உ0)

துக்கவிலக்கண முற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்பட சூத்திரம்-௬௭க.



பன்னிரண்டாவது

## அநித்தியவிலக்கணம்.

அநித்திய மென்பது நிலையிலா மைத்திறம். (க)

மெய்போற் றோற்ற லனைத்து மென்றும்
அழியா துறுமெனுங் கொள்கைக் கிணங்கா
திருத்தலி னித்திய மகற்றப் படுமே. (உ)

தூலஞ் சூக்குமங் காரணத் தொடுமகா
காரண மாதி பூதமு மண்ட
நிரைபல கோடியும் வரையில் காலம்
இருக்க வநித்திய மியம்ப லென்னை
உடல்போ லன்றே யுலக மென்ப.

தீர்க்க சொப்பன சகமெனச் சான்றோர்
இசைப்ப தென்னை யிருசந் தாயின்
சோதனை யாதி முகத்தி னானே.

அசத்தெனற் கியையி னளவில் காலம்
அளவில் பலனை முக்கா லத்தினுந்
தருவ தென்னை யனுபவித் திடுமுயிர்
உடலெடுத் தழிவதற் கிடந்தர லென்னை
இவ்வுயிர் தம்முண் மக்கட் பேறு
பற்பல நூதன வதிசயச் செயல்கள்
மேலு மேலும் வியக்கப் புரிந்து
சுகிப்ப தென்னை யெவருங் காணத்
திணையா விடமா யிருப்ப தென்னை
யின்னும் பற்பல வாக விருக்க
உடன்படற் கியையோம் வெறுஞ்சொல் லானே. (டு

எதற்கிது சத்தோ வறிவுக் கெனின்மெய்
அயனுரு மயமா யாகா னுணர்ந்தப்
கப்போ திருக்கத் தெரிக்கி லேற்பம்
திருக்குத் திரிசிய மென்னு மிரண்டிற்
சயகிலே மிகுநிம் பிக்கா திருக்கத்
தனித்தனி காட்டி லன்றெது சத்தோ
வறிது மென்ப வறிந்திசி னோரே.

புகையுள போது மிலாத போதும்
கனல விருக்கக் கண்டன மதுபோல்

சகத்தோற் றத்து மின்றியக் கண்ணும்
அறிவ திருக்க வறிவ மெவரும்
ஞானவஞ் ஞான கால மிரண்டினும்
தானிலாக் கால மறியோ மெவரும்
அவத்தை தோறு மதுவது வாதலை
யறியார் சகலத் தன்றியின் றென்பர்
அங்கங் குளதிலை யங்கங் கிருந்துணர்ந்
துணர்ந்துவ தெதுவோ வோரறிவன்றி
ஆயாக் குற்றமோ வறிவிலாக் குற்றமோ
என்ன கற்று மென்பய னென்ப. (எ)

(அதாஅன்று) அறிவுக் குடலோ வுடலுக் கறிவோ
உடலுக் கறிவெனி னுறக்கத் தெங்கே
தோற்ற விலையெனின் முனைத்தோற் றுவதென்
அறிவிருப் பாலெனிற் கனவு கேவலம்
அறிந் துணர்ந்துவ தேதறிவை யன்றி
யின்னு மொன்று சொல்லக் கேண்மின்
அவத்தை தோறு மவ்வவ் வுடலா
யாகா தறிவுறி லெங்ஙனந் தோற்றும்
அறிவு மயமா யாவ துடலோ
உடன்மய மாவ தறிவோ வுடலெனிற்
சடம தன்றோ வெங்ஙன மாகும்
அறிவே னித்திய மனைத்து மநித்தியம்
என்றது பெற்றும் நும்மொழி யானே
என்னவா இங்கினு மென்பய னென்ப. (அ)

திரிபெய சொதனை செய்வ தறிவோ
பிறிதோ வறிவைச் சோதனை செய்வது
பிறிதெனின் முன்னமோ மூட மென்றும்
அறிவா தலிற்பிறி தனைத்தையு மித்தை

யாக்கத் தருஞ்சோ தனைமுதல் தெரிந்து
சர்வ சூனிய மயானம தாக்கித்
தான்மாத் திரமிருந் தகண்டபூ ரணமாய்த்
தனைத்தான் கண்டு முன்னுமிவ் வணமே
நின்றுள மிதுநா தனமன் றென்றும்
அறிவே நமதுரு வெனத்திடங் கொண்டு
நின்ற நிலையி னிற்கு மென்ப. (

ஆதலி னித்திய மறிவெனற் பாற்றே. (க

அறிவின் பிரதி பலனமே சிற்சடம்
அறிவ தாமோ திரிசிய மனைத்தும்
ஆதலி னனைத்து மநித்திய மெனப்படும். (க

ஞாபக மன்றிப் பொருளிடங் காலம்
எங்ஙனங் காணு மெவர்க்கு மேனும். (கஉ

ஞாபக நழுவிற் சகலமு நழுவும்
ஞாபகத் தடிப்பெறு வதுவே காணும்
ஞெப்தியொன் றுநி லெதிர்பொருள் காணு
ஞெப்தி மயமே மயமென லன்றி
ஞேய மயமென லாயார் பக்கம். (கங

நித்திய மறிவே ஞேய மநித்தியம் (கச

துக்க நிவர்த்தி ஞானக் காட்சியிற்
சோக மேவிடல் திரிசியக் காட்சியில்
இதனு லுண்மை யிஃதெனப் படுமால்
அதுவே நித்திய மென்ன லேற்கும். (கரு

அறிவை யன்றி யறியாமை யெங்கே
நித்தியந் தானே யநித்திய மென்னல்
அநித்திய நித்தியம் போலத் தோற்றலின்

அந்தநித்திய நால்வகை யாக
அபாவ மெனப்பெய ரேற்கு மென்ப. (கசா)

முன்பி னிடையோ டென்று மித்தை
யெனும்பொருட் கியைந்து சத்தெனத் தோற்றலின்
நான்கு சத்தென நவிலப் படுமே. (கஎ)

திரிசிய மனைத்துஞ் சத்தென வெவரும்
சாதித் தவிற னித்திய மேற்கும்
அபாவ மதனைச் சத்தெனக் கோடலின்
நான்கு நித்திய மென்ன வமையும். (கஅ)

ஒன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னுக்க மாந்தற் கிழமை
மயமலா துலகைக் காட்டும்வகை யின்மையின்
சுயம்பெனப் படா அதகசத்தெனற் கையம்
என்றே வநித்திய மெனத்தகு மென்ப. (ககூ)

அசத்தென் றதனை லனுபவத் தெவர்க்கும்
நிசத்துற லென்னை சையோக மன்றித்
தனித்தொரு பொருளைக் காண்டற் கிலாதென்
சையோகப் பொருளைச் சத்திய மென்னிற்
கொள்வர் மயக்கை யறுக்கவேண் டாதார்
ஆதலி னனைத்து மசத்தே நித்தியம்
எங்ஙன மேற்கும் விகாரப் பொருள்கள்
அறிவின்றி நிற்கினு மறிஞர் மயங்கார்
எனையர் பொருளா யேற்பநிற் சிறப்பென்
கற்பனை யறியாக் கடைய ரென்ப. (உ0)

கல்வியிற் சிறந்தென் கற்பனை மெய்யெனின்
பாமரர் கொள்கையிற் சிறந்த தென்னை
மக்க ளனைத்தமை மதித்தலி னென்னை
இங்கிலை யகலாக் குருக்களு மலேழினை. (உக)

சையோகப் பொருளைச் சத்தெனக் கொள்ளிற்
காம மாதி வதையினுட் படுப
கொள்ளா ரவலக் குழிவிழா தவரோ. (உ௨

பொருளல் லவற்றைப் பொருளெனக் கோடல்
மயல்பிற மாற்றினு மாகு மென்ப. (உ௩

என்று முளதாத் தோற்றினு முலகஞ்
சுயம்பின் மையினு லநித்திய மென்ப. (உ௪

எவ்வெப் பொருள்கள் யாதாத் தோற்றினுங்
கற்பனை கழற்றிக் காண்பதே காட்சி
அல்லாக் காட்சிய ரறைவத னர்த்தம். (உ௫

அல்லாக் காட்சிய ரறைவது சத்தேல்
நித்திய மெனலே நீக்கற் பாற்றே. (உ௬

அநித்திய மெல்லா முண்மைபோற் றோற்றினும்
விசாரத் தகலார் மறந்தும் மயங்கார். (உ௭

கண்டார் சிதம்பரக் காட்சி யகலார்
உண்டோ வநர்த சடமுத லாதி
யொருதன் மையரா யொளிர்வதி னென்ப. (உ௮

சத்து சித்தின்ப நித்திய வகண்டம்
சொற்பிறி வானிலை காட்ட லன்றியும்
ஏக மெனற்கிங் கிடையூ றிலையே. (உ௯

அதுபோ லசத்து முதலிய வைந்தும்
நிரைநிரை யாதலி னேற்கு மவ்விதி. (௩0

சத்தே யசத்து சித்தே சடமெனல்
பிரியமே துயரஞ் சதமே யநித்தியம்
அகண்டமே கண்ட மாகுமென்ப. (௩௧

சத்தை யன்றி யசத்திலை யுண்டேற்
பொன்னை யன்றிப் பணியில லென்பம். (௩௨

(அதுபோல்) எதுசக பரமுயி ராகத் தோற்றல்
அதனை யன்றிக் காட்டி லயலாம். (நக)

மூன்றுந் தனித்தனி சுயம்பெனிற் சோதனை
முகத்தி லல்ல வல்லவென் றகறல்
என்னை யோர்முத லன்றி விகாரம்
இருக்கக் கண்டிலஞ் சத்திய மதனாற்
சத்தே யசத்தெனச் சாற்றப் படுமே. (நச)

(அறிவே) ஒன்றை யொன்றாக வறிதலின் மூடம்
எனப்படு மன்றி வேறன் றாதலிற்
சித்தே சடமென றிண்ண மென்ப. (நரு)

சுகநாடி யுன்னில் சுகத்தடை யுண்டேற்
றுயரம தாகுஞ் சுகத்திரி பன்றே
சுகமே துயரெனச் செப்ப லாகும். (நசா)

தனது நித்தியந் தனக்கய லேற்றிக்
காண்டலி னித்தியம் போலயல் விளங்கும்
நித்தமே யநித்த மெனப்படு மென்ப. (நஎ)

சத்தெது வோவது தனதுபூ ரணத்தை
யயல்மே லேற்றி யகண்ட மாகப்
பார்த்தலி னகண்டமே கண்ட மென்ப. (நஅ)

தன்னை யன்றி யயலிலை யுளவாக்
கொண்டதா லன்றே வநூர்தாதி யேற்றல்
தன்னைக் கண்டார்க் கிதுதிண் ணமதாம். (நகூ)

அறியாமைக் கேயிவ் வைந்து மாதலின்
அபேத மென்ப ரறிந்தி சினோரே. (சய)

அநித்தியவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - சகக.

---

# கண்டவிலக்கணம்.

அகண்ட மெனலே கண்டமாத் தோற்றும்
அகண்ட பேத முள்ளமட் டுண்டு
கண்ட மெனலைக் காணுங்காலை. (க

பரிச்சேத மூன்று மிறந்த தகண்டம்
அல்லது கண்ட மாகு மென்ப. (உ

இன்னும் பூரணத் தடைபல வுளவாம்
அவையெலாஞ் சுருக்கி யறையக் கேண்மின். (ங

வியாபக வியாப்பிய மெனுநிலைக் கியைந்த
விண்பல கோடி கடமுட் சிறிது
கூறுது மின்னென வவற்றின் பெயர்முறை. (ச

தூலஞ் சூக்குமங் காரண மகாகா
ரணத்தொடு பிரணவஞ் சத்தி கலாதம்
மகத்தங் கவித்தம் வித்த மகதம்
மகாவிண் ணொடுமகாப் பிரணவங் கலையும்
விந்து நாதப் பரைசிவ சுயமும்
சுத்தஞ் சிதம்பர மெனப்படு மென்ப. (ரு

(இவைதாம்) ஒன்றி லொன்று வியாப்பிய மாகி
முறையே சென்று முடியு மென்ப. (சு

சிதம்பர மன்றி வியாபக மில்லை
உண்டேல் வியாப்பிய மென்னற் கியையும்
அதினிலக் கணத்தா லென்மனார் புலவர். (எ

ஞானவிண் டனையே பூரண மெனற்குத்
தடையிலை யாதலின் ஞானமுக் கியமெனல். (அ

ஏனைய விண்ணெலாம் வியாப்பியத் தகைமை
யேற்றற் பாலதிற் கண்ட மெனப்படும். (கூ

பூத விண்ணிற் சுட்டபடு மவற்றைக்
கண்ட மென்னவும் வேண்டுமோ வேண்டா. (க0

சத்து மூன்றுஞ் சித்து நான்கும்
ஆனந்த மெட்டும் நித்திய நான்கும்
பூரண மூன்றும் போலி யாதலின்
இவையெலா மாயா விலக்கண மன்றே
பாத்தைவிட் டகலா மாயையென் றதனால்
விசாதி பேத மிறந்த தெங்கே. (கக)

அறிவை யன்றி யறியாமை யிலையால்
அறிவுத யத்தி லறியாமை யென்னும்
இருளெலாஞ் சின்மாத் திரம தாக
இலகு மதனால் விசாதி பேத
மென்னுங் கற்பனைக் கிடமிலை யென்ப
தன்னைக் கண்ட தெளிவி னோனே. (கஉ)

சத்துசித் தின்ப நித்திய மகண்டம்
என்னு முண்மை யிலக்கண மதனை
யெட்டுவ தெங்ஙனம் போலி மயத்தைப்
போலியென் றறியா விவேகத் தானே
உண்மை யிலக்கண மேயுரு வாய
பரமு மெங்ஙன மெட்டு மென்ப. (கங)

சத்து முதலிய வைந்தை யன்றி
அநார்த முதலிய வைந்துமின் றதனால்
எல்லா மாகியு மிருக்கும் பரமெனக்
கருத்தங் கண்டா மறுத்தற் கிடமெவை
னுண்டேற் சோதனை முகத்தால் வம்மின். (கச)

அசத்தாதி யைந்தும் விகார மன்றே
சத்தாதி யைந்து மாமோ வதனால்
அல்லவு மாகியு மிருக்கும் பரமெனக்
கருத்தங் கண்டா மறிஞர்கோ டற்கே. (கரு)

ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யென்னுமா ணிக்க வாசகர் கருத்தி
தன்றோ வன்றே லெங்ஙனஞ் சோதனை
முகத்தால் விளக்கி லேற்குது மக்கணஞ்

சொல்லாற் கூறின் மடையரு மேலோர்
சைவ னொற்குச் சொல்லும் வேடமும்
புராணிய மன்றிப் பொருள்வே றிலையே
மயக்கற் றிதுவே நல்ல சமயம்
என்றது பெற்று மருந்த விழப்பில். (க

வைணவர் தாமு மிங்ஙன மேயல். (ப

ஏனைய மதத்தரைச் சொல்வ தென்னே. (க

சடகோபர் கண்ண பிரான்முதன் மேலோர்
இசைத்த மொழியி னுமு மதனில்
இறங்க நோ மில்லார் பகடி
வேட மதனு மென்பய னென்ப. (க

புராணி திந்திய சுகந்தரு மென்பது
என்னமே யன்றி யுத்திக் கிலையா
தாதலி னிங்கே கூறிய விலக்கணம்
மயக்கறக் கேட்டுத் தெளிதனுங் கடமை. (௬

கண்ட மெல்லா மாயா காரியம்
என்னக் காட்டின பிலக்கிய விலக்கண
வகையி னுனே வழிபடற் கென்ப. (உ

உண்டு போகித் திடற்கோ சென்மம்
எடுத்தன மாமே லெவர்போ தனையோ
மக்கட் குயர்வெ னவ்விழினை தன்னினும்
மாண முன்னர் தெளியின் றெளியின். (உ )

போலி யிலக்கண மைந்தி லடங்காப்
பிறவுள வேவையை யெற்று மிடமறிக்
தேர்க வறிந்து ரமைத்துக் கொண்மின். (உ )

உண்மை யிலக்கணத் தடங்கா தனவும்
ஏற்கு மிடமறிக் தேர்க்கக் கொண்மின். (௬ )

கண்டவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - சாகு.

பதினொன்காவது

## பாநிலேகுறியிலக்கணம்.



பாநிலே யதற்கியை குறியெனல் யாதெனில்
வெளியா யொளியாய் வெறுந்தெரி வேமய
மாயகம் புறமொன் றிலதாய்த் தெளிவாய்ச்
சொச்சமாய் நீக்க மெங்கணு மிலதாய்
என்று மொருபடித் தாயம லமதா
யதிசய மிதுபோ லறிந்திடப் படாதா
யன்னிய மிலதாய்த் தானே தானு
யுடன்பா டெதிர்மறை யிலதா யுளதா
யிலகல தன்குறி யென்மனர் புலவர். (க)

சண்முகி யாதி குறியிது போல்வதன்
றக்குறி யெல்லா முடலவ யவக்குறி
காரண மாகக் காட்டதி சயக்குறி. (உ)

இக்குறி யெனலோ சாதன நான்காற்
கேள்வி மனனந் தெளிவு தன்றாற்
பக்குவ நோக்காற் பகராப் பகர்குறி
யுபாதித் திரைய மவத்தாத் திரைய
மபிமா னத்திரை யங்க ளாதி
யுதித்தொடுங் கற்கிட மாகுங் குறியே. (ங)

இக்குறி தானுய் வருகுறி யேனைய
தொடுகுறி யால்வர லென்மனர் புலவர், (ச)

இக்குறி யகண்டத் தெழுகுறி யேனைய
கண்டத் தெழுகுறி காணு மென்ப. (ரு)

சொலாதுறு குறியிது சொல்லுறு குறியது. (சு)

சுயம்பிது குறியது கற்பிதக் குறியெனல். (எ)

இக்குறி யுதய ஞானமெய்ஞ் ஞான
மக்குறி ஞானங் கற்பித ஞானஞ்

சிந்திப் பாலுறு மென்றுமிஞ் ஞானந்
தொடருறி யென்றும் வேண்டாது தோன்று
தந்த ஞான மென்றனர் கண்டோர்
இன்ன பேத மறியா ரதுவே
யிதுவெனக் கூறி யென்சிறப் புற்றார். (

கண்ட திதுவே கேள்வி யதுவே
கண்டது ஞானங் கேட்டது பாவனை
கண்ட ஞான மழிக்குமஞ் ஞானம்
பாவனை ஞான மென்னு மழிந்ததா
காட்சி யிதுவே கருத லதுவே
காட்சி மறவாக் கருதன் மறக்குங்
காட்சி யானந்தங் கணத்தினு மகலா
கருத லளவே பாவனை யின்பங்
காட்சி விளக்க மிடைவிடா திலகும்
பாவனை விளக்கம் விட்டா லகலும்
காட்சி ஞானம் பரோட்ச மாகும்
பாவனை ஞானம் பரோட்ச மாகும்
பார்வை விளக்க மிதுவே யதுவோ
குருட்டு விளக்க மென்னவும் வேண்டுமோ. (

இன்னொரு சார்பா ரிசைக்கு ஞானம்
பன்னப் புகுதும் பகுப்புணர் தற்கே. (ட

அறிவினைச் சிறிது பெரிதென வகுத்துச்
சிறுயிர் பெரிறை யெனப்பெயர் தந்து
வுயிர்க்கிறை ஞான முணர்த்தா துணரா
வெனப்பறை சாற்றி ஞானியென் றிருப்பர். (க

அறிவுக் கறிவெனு மாகம மென்று
மிறுமாப் புறிற்பெரி தறிவுக் குணர்த்தல்
வேறோ ரறிவு வேண்டு மன்றோ

இங்ஙன மறிவுக் கறிவுக் கறிவு
வென்று சொலப்புகி னெல்லை யின்றி
யனவத் தாதோட மறையப் பாற்றே. (கஉ)

(நன்றே)முன்னுணர் வகமெனிற் பின்னுணர் வவனென
லெனப்படு மன்றோ விதின்பிழை கேண்மின். (க௩)

முன்னுணர் வெல்லை முட்டா திசைக்கிற்
பின்னுணர் வெல்லை தானே விளங்கும். (க௪)

முன்னுணர் வெல்லை யுடலள வென்னி
னுபாதித் திரைய முணர்வினி லன்றோ
தோன்றி மறையுந் தினமனு பவத்தால். (க௫)

அந்தந் தவத்தையி லவ்வவ் வுபாதி
நானெனப் படினு முபாதி மாறின்
நானென வின்றோ நானிவை யாமோ
அல்ல விவற்றிற் கறிட்டான மாய்நின்
றறிவது சான்றா யதுநா னெனப்படல். (க௬)

இங்கிலை யறிவுக் கெல்லை யென்றே
வெட்டிப் பார்த்திங் கிருக்கக் கூறி
னயவினைப் பேரறி வாகு மென்பம். (க௭)

அகிலாண்ட கோடி யனைத்து மிதனி
லடங்காது கண்டில னுற்றுநின் றுணரி
னென்னுடை யாயி னிருப்பதெ னப்பால்
வெறுஞ்சொல் லடுக்கே விபரீத மென்ப. (க௮)

அப்பாற் போத விழப்பருட் பரைசுக
சுகாதீத மென்ன நவநவ வற்புதங்
காண்டற் கென்றோ கற்பனுந் தத்திற்
பேரறி வுளதாக் காட்டுமிக் குறிகள். (க௯)

எனின்முத லறிவு காணி னிவற்றை
யிவ்வெல் லேயிலே யென்று நிலேயான்
முதலறி வுக்குள வியப்பி தென்றுணர்க. (உ

அகண்டசின் மாத்திர மயமாம் வெளியே
முதலறி வின்குறி முற்றுமுற் றுயி
னிங்கிலே நம்முரு விதனே மறக்கினு
மிதுமறை யாதில கும்மொரு படித்தா
யெப்பொழு தேனு முண்ணுட் டங்கொண்
டெட்டிநின் றுற்றுப் பார்க்க முதலில்
இவ்வெளி யுலக மயமா யிலகும்
இங்குல கேதென் றுற்று நோக்கிற்
பாழ்மய மாகக் காணு மப்பா
ழிப்பா ழேதென் றுற்று நோக்கி
ணென்றுந் தோன்று துறுமே லக்கணஞ்
சகத்தோற் றத்தி லிப்பா ழிலேயிப்
பாழி லுலகிலே யிருப்ப தென்னென்
றுற்றக லாதுள திலகு மட்டும்
வெளிமுக மாகா திருக்க வேண்டுங்
காணு தாயின் முச்சுட ரோதிங்
கெவ்விளக் கத்தா லிவ்விரு தோற்றமுங்
காணப்படு மெனக் காத்தல் வேண்டும். (உ

இங்கே பாவனே யெதுவுங் கூடா
கூடி னுண்மை விளங்கா தென்ப. (உ

விளங்கு மாயிற் கதபுண் ணியமா
மின்றே லிலேயெனு முபகிட தங்க
ளிதனே யறிந்தங் ககலா திருக்க. (உ

விளங்கு மாயின் விளக்க மயமாம்
விளக்கமய மன்றித் தெரிவுவே றின்றுய்த்

தெளியுந் தெளிவே முன்னற் புதங்கள்
அன்றிவே றிலையென லாங்கே நமக்குக்
காணு மதனு லயலெனல் சொல்லே. (உச)

தானு மறிவைத் தக்கவா றுணர்ந்தோர்
அன்னி யின்றி யானந்த மாவர்
என்பது பொய்யோ மெய்யோ கர்ண்மின்
இக்கண மிருந்திங் கென்மனுர் புலவர். (உரு)

இதனைப் பிரம மென்ப தென்னெனிற்
சிற்சோதி யன்றிச் செகமுயிர் பரமிலை
யாதலி னெப்பா லறையினுங் கூடும். (உசா)

இன்னெரு சாரா ரிசைக்கு ஞானந்
தன்னை விட்டுத் தனக்குட் பிரணவம்
அகார வுகார மகாரக் காட்சியும்
ஐந்தா றெட்டெழுத் தாதிக் காட்சியும்
உண்டெனக் கண்டிங் கோங்கிக் குதித்தும்
அதிசய நடிப்பு மனேக விதமாங்
கோலமுந் தம்பித் திருக்கும் வியப்புங்
காட்டியு மிருப்பர் காணு ரிதுவே. (உஎ)

இன்னெரு சாரா ரிசைக்கு ஞானம்
பேச்சுமுச் சடக்கிப் பிணம்போற் கிடக்கை. (உஅ)

இன்னெரு ஞான மாண்டா னடிமை
யென்று கொண்டிங் குழல்வ தென்ப. (உகூ)

முயற்சியென் செய்யு மவனருள் சுரக்கி
னென்று போகத் துழல்வதோர் ஞானம். (௩0)

உபாதி வைராக் கியமதே ஞான
மென்றெவ் விடத்து முழல்வ தொன்று. (௩௧)

மொட்டை தாடி காவி தண்டங்
கொபின மின்மை சாத்திரத் திறமை
யறியா மோன மென்பதோர் ஞானம். (ரு.

சுத்தி பூசை ரவிக்கை யுச்சவங்
கொண்ட கோலம் பிப்பாய் மூழ்கல்
அபினி கஞ்சா போதத் தாழ்தல்
இன்னு மிருபோ லனேக மாடல்
ஆகு ஞான மென்ப தொன்று. (ரு.

இக்குறி தம்மை ஞான மென்றூற்
பரவுரு வாமோ பார்த்ததற் கியைய
ஏற்றன் மெய்ஞ்ஞான மென்பர் ஞானிகளே. (ரு.

பரஞான மன்றி யபர மியையா
தென்பது கண்டன மிதுநிண் ணமதே
ஐய முளதே லாய்ந்துநீர் கொண்மின். (ரு.

அட்ட மூர்த்த மென்னலு மல்ல
வென்னலுங் குறியா மிஃதொரு ஞான
மல்லலென் றைவயு மறிந்தகன் றனரார்
இந்த ஞான வெல்லைகண் டனரோ. (ரு.

(இதனைற்) கண்டதெ னென்னிற் களங்கமின் ஞான
மயமே பரமெனன் மற்றொன் றிலையே. (ரு.

ஆயின் ஞான விலக்கண மென்னை
யனைத்தையு மறியு மறிவினி லையை
யினைத்தென் றுணர்த்த லென்மனூர் புலவர். (ரு.

பாகிலைகுறியிலக்கணமுற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்பட சூத்திரம் - ௪௭௯.

பதினைந்தாவது

## மாயாநிலைகுறியிலக்கணம்.

---

இல்லதை யுள்ளதா யுள்ளதை யில்லதா
யாமென லல்லதா யல்ல தாமதா
மகத்தெலா மணுவதா யணுவெலா மகத்ததாய்ச்
செய்த்தகும் வழியாற் கடனு கடனெனக்
கோடற் கியைவ ததன்குறி யென்ப. (௧)

இச்சா ஞானக் கிரியை யாதி
பனையெனத் தகுபெயர்க் கியைவ தாகி
யெங்கணுந் தானு யிலகுவ தக்குறி. (௨)

உண்மையைத் தேடுநர்க் குட்புற மெங்கு
மென்றுங் காணு நவநவ மான
வற்புத நிலைக ளனந்தங் காட்டித்
தான்மூன் றுறுவ ததன்குறி யென்ப. (௩)

அறிவறி யாமை யாகல தன்குறி. (௪)

எத்தனை யடுக்கா யிருக்கினு மேல்கீழ்
அங்கங்கு முண்மை தானெனக் காட்டி
யுள்ளதை மறைப்ப ததன்குறி யென்ப. (௫)

மேலுக்கு மேலாய் மேலுக்கு மேலாய்ச்
செல்லினு நிட்டையிற் றுனது வருவாய்
விளங்கி நிற்ற லதன்குறி யாகும். (௬)

பந்தங் கற்பிதம் முத்தி விதெி
என்றிவை யிரண்டும் பாவ மாதலின்
இன்னவு மாயா குறியெனப் படுப. (௭)

பஞ்ச கோசமு மாயா காரியம்
இதனை யகன்ற வுயிரென லெங்கே
இவ்வுயி ரெல்லாம் பொய்மைய மன்றே
நாம்பொய் மயமா யிருக்குது மென்று

நாடலு முளதோ வினையே பொய்மையைப்
பொய்யென் றுணர்வ தெவ்வா றகம்புறத்
தரிதரி தாதலி னனைத்து மெய்யாய்த்
தோற்ற லதன்குறி யென்மனார் புலவர். (௮

இம்மையக் ககலாக் குருக்களே புவிமுழு
தன்றிக் கண்டிலம் பொறிப்ப தென்னை
இதனையே மெய்யெனப் புண்ணிவீ யென
மொய்ப்பவ ரல்லா லுண்மைக் கணுகார்
இத்திற மதன்குறி யென்னுமா கமமே. (௯

ஒன்றினை யொன்றாக் கொளாவகை காட்டின்
மெய்யினை யுணர்ந்த மனமிஃ தென்பம். (௧௦

எல்லாம் பொய்ம்மைய மன்றே வன்றேல்
விசவடி விஃதெனக் காட்டல் வேண்டும்
சொல்லா லன்றிக் காட்ட வகையிலார்
எங்கு மயமா யிருப்ப தோர்குறி (௧௧

மெய்யைமெய் யென்பா ரிலவே யிலையுமின்
உரிப்பா ரிலையவ மொழியா லன்றி
யிஃதோர் குறியென வியம்பவும் படுமே. (௧௨

ஆன்மா தனைத்தா னணைவதுஞ் சுகிப்பதும்
எங்ஙன முடலா தென்றுரை தொட்டி
நகைப்ப தோர்குறி யாகு மென்ப. (௧௩

மேல்கீ ழொப்பிலாப் பிரம மெனலெவன்
மேலொப் பிலகீ ழிலையோ விஃதெவன்
மடமையென் றிகழ்குழு வளதஃ தோர்குறி. (௧௪

அகம்பர மென்ப தென்னையோ வெனின்
நாகத் தகலா தெனப்பய முறுத்திக்
கேட்பவர்க் கினையக் கூறிப் பழிக்கும்
பேய்களு முளதா லஃதோர் குறியாம். (௧௫

ஞானமே பரமென லென்பதென் மூடம்
அதுவே றெனக்கொண் டிலக்கலா விலக்கை
வைத்துழல் பேய்களு முளதா லோர்குறி. (கசு)

உருவம் பரமெனக் கொடுமணி துலக்கிக்
கிணுகிணென் றசைத்துப் பூசித் தோமென்
றகங்கொளும் பேய்களு மோர்குறி யென்ப. (கஎ)

அருவம் பரமென் றுவோ பரமே
யெனக்கர்த் தபம்போற் கூஉய்க் கதறிப்
பூசித் தோமெனக் கொள்வதோர் பேய்க்குறி. (கஅ)

ஐம்பூ தத்தொன் றரனெனக் கொடுபணிந்
தேத்திக் களிகூர்ந் திருப்பதோர் பேய்க்குறி. (ககூ)

இதிலெலா மென்பய னென்றிகழ்ந் துண்டு
கண்டு புணர்ந்துறங் கிக்களித் துலாசமதாய்
நிற்பதே சுகமெனும் பேய்களு மோர்குறி. (உ0)

பற்பல பேத சத்தி யெனக்கொண்
டொவ்வொரு மதத்தரு முயிர்வதை செலுத்தித்
தத்தமக் கவதி யகன்றதா வெண்ணிக்
களிப்பன பேய்களுங் கணக்கிலா தோர்குறி. (உக)

இந்திர சாலச் செகசால மாதி
வித்தைக ளவகவ மாகக் காட்டி
வியப்பைத் தந்துழல் பேய்களு மோர்குறி. (உஉ)

இலக்கிய விலக்கண தர்க்க சோதிட
மாதி பற்பல வித்தைகள் கற்றுச்
செருக்கினி லகலாப் பேய்க ளோர்குறி. (உங)

தேகமே யான்மா போகமே முத்தி
யெனப்பறை சாற்றி யடங்கா தெங்கும்
உழன்று களிக்கும் பேய்களு மோர்குறி. (உச)

இக்கருத் தெவரு மறியா தடக்கித்
தேவதா பூசையிற் சிறந்ததாத் தம்மைக்
காட்டி நகருங் கள்வ ரோர்குறி. (உ

ஞானமல் லவற்றை ஞானமென் றெண்ணிக்
குருக்கோ லங்கொண் டுழல்வ தோர்குறி. (உ

ஆன்மா வல்லதை யான்மா வென்றே
குறிபல சொல்லிக் குளறி யழியுங்
குருக்கண் மயமே குவலயத் தோர்குறி. (உ

பரமல்ல வற்றைப் பரமெனக் கருதிக்
குறிபல சொல்லிக் குருடர் கண்ட
யானை வழக்கெனப் பொருணிலை தெரியா
தென்று மலைவுறுஞ் சமைய ரோர்குறி. (உ

சுயம்பிது வென்னத் தெளியா தொன்றுஞ்
சகமுயிர் பரமிவை சத்திய மாக்கொண்
டுழன்று சகத்தைச் சுகிப்ப ரோர்குறி. (உ

உடலை யுயிரொன் றெண்ணு மாக்கள்
கற்று மிலராற் கடைய ரோர்குறி. (௩

அனைத்து மித்தை யறிகுறி வேண்டில்
தினைத்துணை யேனுஞ் சுயம்பிலா மையினுல்
அனுபவித் தற்கண் விருப்பு வெறுப்பெனுஅ
இன்பத் துன்பெனுஅ வகலா வாசை
கலக்க மரண பயமய மதனுல்
என்றே யுணர்ந்து முடங்கிட தங்கள்
தப்பித நூலெனுஞ் சழக்கின ரோர்குறி. (௩

தன்னுண்மை நோக்காச் சற்குண ரோர்குறி. (௩

சுகசா தனத்தைச் சுகமென லோர்குறி. (௩

சொல்வழக் கதனை யர்த்த வழக்கெனக்
கொண்டு திரியும் பேயக ளோர்குறி. (௩

புழுமல மூத்திரக் கூடென் றுணரா
தாண்பெண் ணெனக்கொண் டழிவ தோர்குறி. (௩

இக்கருத் தெவரு மறியா தடக்கித்
தேவதா பூசையிற் சிறந்ததாத் தம்மைக்
காட்டி நிகருங் கள்வ ரோர்குறி. (உ

ஞானமல் லவற்றை ஞானமென் றெண்ணிக்
குருக்கோ லங்கொண் டுழல்வ தோர்குறி. (உ

ஆன்மா வல்லதை யான்மா வென்றே
குறிபல சொல்லிக் குளறி யழியுங்
குருக்கண் மயமே குவலயத் தோர்குறி. (உ

பரமல்ல வற்றைப் பரமெனக் கருதிக்
குறிபல சொல்லிக் குருடர் கண்ட
யானை வழக்கெனப் பொருணிலை தெரியா
தென்று மலைவுறுஞ் சமைய ரோர்குறி. (உ

சுயம்பிது வென்னத் தெளியா தொன்றுஞ்
சகமுயிர் பரமிவை சத்திய மாக்கொண்
டுழன்று சகத்தைச் சுகிப்ப ரோர்குறி. (உ

உடலை யுயிரொன் றெண்ணு மாக்கள்
கற்று மிலராற் கடைய ரோர்குறி. (ங

அனைத்து மித்தை யறிகுறி வேண்டில்
தினைத்துணை யேனுஞ் சுயம்பிலா மையினுல்
அனுபவித் தற்கண் விருப்பு வெறுப்பெனு அ
இன்பத் துன்பெனு அ வகலா வாசை
கலக்க மரண பயமய மதனுல்
என்றே யுணர்ந்து முயங்கிட தங்கள்
தப்பித நாலெனுஞ் சழக்கின ரோர்குறி. (ங

தன்னுண்மை நோக்காச் சற்குண ரோர்குறி. (ங

சுகசா தனத்தைச் சுகமென லோர்குறி. (ங

சொல்வழக் கதனை யர்த்த வழக்கெனக்
கொண்டு திரியும் பேய்க ளோர்குறி. (ங

புழுமல மூத்திரக் கூடென் றுணரா
தாண்பெண் ணெனக்கொண் டழிவ தோர்குறி. (ங

போகத் தவதி யனேக முறினும்
உன்று தனையே யுவப்ப தோர்குறி. (நசு)

மண்ணுரு வாவதைக் கண்டு மீண்டும்
எண்ணுவ தேதோ வுறவயல் சுற்றமென்
றின்ன வறிஞரு மோர்குறி யென்ப. (நஎ)

தான்வேட மென்னத் தனைத்தெரி யாது
வர்ணாச் சிரம வேடம் புனைந்து
பின்னு மயக்க மேறின ரோர்குறி. (நஅ)

இன்ன தேயத்த னென்றுனி வேடந்
தரித்துத் தன்சுய நிலைதனை மறந்து
இறுமாப் பாலுழல் பேய்களு மோர்குறி. (நகூ)

நெற்றி யிற்குறி வைத்தவர் வையார்
கொள்ளுங் கொள்கையு மோர்குறி யென்ப. (ச0)

உடலு முயிரு மொத்ததே பந்தம்
விரிவதே முத்தி யென்பது மோர்குறி. (சக)

நன்மையைக் கனவிலுங் காணார் தத்தமை
நல்ல னெனக்கொள லோர்குறி யென்ப. (சஉ)

காட்சி யுணவு பிறப்போ டிறப்பு
அனைதற் கிடமுரு வொத்தே யிருக்க
மனிதர் விலங்கு பட்சி யாதி
பேதங் கொளற்கிலை பேதிப்ப தோர்குறி. (சந)

தன்னைத் தானென விசார முகத்தால்
உண்மையாத் தெளிதலு மாயை யென்னில்
என்னவே றுரைப்ப தன்னதுங் குறியே. (சச)

சுத்த குறியு மசுத்த குறியும்
மாயா மயமெனி னெங்கே நீக்கம்
ஞானமஞ் ஞானமு மோர்குறி யென்ப. (சரு)

மாயாநிலைகுறியிலக்கணமுற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்பட சூத்திரம் - ருகஅ.



போகத் தவதி யனேக முறினும்
உன்று தகையே யுவப்ப தோர்குறி. (௩௬)

மண்ணுரு வாவதைக் கண்டு மீண்டும்
எண்ணுவ தேனோ வுறவயல் சுற்றமென்
றின்ன வறிஞரு மோர்குறி யென்ப. (௩௭)

தான்வேட மென்னத் தனைத்தெரி யாது
வர்ணாச் சிரம வேடம் புனைந்து
பின்னு மயக்க மேறின ரோர்குறி. (௩௮)

இன்ன தேயத்த னென்றுனி வேடந்
தரித்துத் தன்சுய நிலைதனை மறந்து
இறுமாப் பாலுழல் பேய்களு மோர்குறி. (௩௯)

நெற்றி யிற்குறி வைத்தவர் வையார்
கொள்ளுங் கொள்கையு மோர்குறி யென்ப. (௪0)

உடலு முயிரு மொத்ததே பந்தம்
விரிவதே முத்தி யென்பது மோர்குறி. (௪௧)

நன்மையைக் கனவிலுங் காணார் தத்தமை
நல்ல னெனக்கொள லோர்குறி யென்ப. (௪௨)

காட்சி யுணவு பிறப்போ டிறப்பு
அணைதற் கிடமுரு வொத்தே யிருக்க
மனிதர் விலங்கு பட்சி யாதி
பேதங் கொளற்கிலை பேதிப்ப தோர்குறி. (௪௩)

தன்னைத் தானென விசார முகத்தால்
உண்மையாத் தெளிதலு மாயை யென்னில்
என்னவே றுரைப்ப தன்னதுங் குறியே. (௪௪)

சுத்த குறியு மசுத்த குறியும்
மாயா மயமெனி னெங்கே நீக்கம்
ஞானமு ஞானமு மோர்குறி யென்ப. (௪௫)

மாயாநிலைகுறியிலக்கணமுற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்பட சூத்திரம் - ருகஅ.



இக்கருத் தெவரு மறியா தடக்கித்
தேவதா பூசையிற் சிறந்ததாத் தம்மைக்
காட்டி நுகரும் கள்வ ரோர்குழி. (உ

ஞானமல் லவற்றை ஞானமென் றெண்ணிக்
குருக்கோ லங்கொண் டுழல்வ தோர்குழி. (உ

ஆன்மா வல்லதை யான்மா வென்றே
குழிபல சொல்லிக் குளறி யழியுங்
குருக்கண் மயமே குவலயத் தோர்குழி. (உ

பரமல்ல வற்றைப் பரமெனக் கருதிக்
குழிபல சொல்லிக் குருடர் கண்ட
யானை வழக்கெனப் பொருணிலை தெரியா
தென்று மலைவுறுஞ் சமைய ரோர்குழி. (உ

சுயம்பிது வென்னத் தெளியா தொன்றுஞ்
சகமுயிர் பரமிவை சத்திய மாக்கொண்
டுழன்று சகத்தைச் சுகிப்ப ரோர்குழி. (உ

உடலை யுயிரொன் றென்று மாக்கள்
கற்று மிலராற் கடைய ரோர்குழி. (ங

அனைத்து மித்தை யறிகுழி வேண்டில்
இனைத்துணை யேனுஞ் சுயம்பிலா மையினால்
அனுபவித் தற்கண் விருப்பு வெறுப்பறு
இன்பத் துன்பெறு வகலா வாசை
கலக்க மரண பயமய மதனால்
என்றே யுணர்ந்து முடிவிட தங்கள்
தப்பித நாலெனுஞ் சழக்கின ரோர்குழி. (ங

தன்னுண்மை நோக்காச் சற்குண ரோர்குழி. (ங

சுகசா தனத்தைச் சுகமென லோர்குழி. (ங

சொல்வழக் கதனை யர்த்த வழக்கெனக்
கொண்டு திரியும் பேயக னோர்குழி. (ங

புழுமலை மூத்திரக் கூடென் றுணரா
தான்பெண் ணெனக்கொண் டழிவ தோர்குழி. (ங

போகத் தவதி யனேக முறினும்
உன்னு ததையே யுவப்ப தோர்குறி. (ஙசா)

மண்ணூரு வாவதைக் கண்டு மீண்டும்
எண்ணுவ தேனோ வுறவயல் சுற்றமென்
றின்ன வறிஞரு மோர்குறி யென்ப. (ஙஎ)

தான்வேட மென்னத் தனைத்தெரி யாது
வர்ணாச் சிரம வேடம் புனைந்து
பின்னு மயக்க மேறின ரோர்குறி. (ஙஅ)

இன்ன தேயத்த னென்றுனி வேடந்
தரித்துத் தன்சுய நிலைதனை மறந்து
இறுமாப் பாலுழல் பேய்களு மோர்குறி. (ஙகூ)

நெற்றி யிற்குறி வைத்தவர் வையார்
கொள்ளுங் கொள்கையு மோர்குறி யென்ப. (ச0)

உடலு முயிரு மொத்ததே பந்தம்
விரிவதே முத்தி யென்பது மோர்குறி. (சக)

நன்மையைக் கனவிலுங் காணார் தத்தமை
நல்ல னெனக்கொள லோர்குறி யென்ப. (சஉ)

காட்சி யுணவு பிறப்போ டிறப்பு
அணைதற் கிடமுரு வொத்தே யிருக்க
மனிதர் விலங்கு பட்சி யாதி
பேதங் கொளற்கிலை பேதிப்ப தோர்குறி. (சங)

தன்னைத் தானென விசார முகத்தால்
உண்மையாத் தெளிதலு மாயை யென்னில்
என்னவே றுரைப்ப தன்னதுங் குறியே. (சச)

சுத்த குறியு மசுத்த குறியும்
மாயா மயமெனி னெங்கே நீக்கம்
ஞானமஞ் ஞானமு மோர்குறி யென்ப. (சரு)

மாயாநிலைகுறியிலக்கணமுற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்பட சூத்திரம் - ருகஅ.



பதினாறுவது

## விசாரவிலக்கணம்.

---

விசார மென்பது விசாரணைக் கூறுவது. ௧)

(என்னை) உலகெனல் யாது யாமா ரென்பதூஉம்
உலக நமைப்போ லறியா ததற்குச்
சடநிலை வாய்ந்ததற் கேதென் னென்பதூஉம்
எழுவகைத் தோற்ற மாதற் கேதென்
னென்பதூஉ முயிர்கட் கிறப்பொடு பிறப்பு
சுகதுக்க மாதி யுறுவதே னென்பதூஉம்
இங்ஙன முறுத வழியே தென்பதூஉம்
யாது பற்றி வந்த தென்பதூஉம்
முதலிய நிலைமை விசாரித் திடலே. )
இங்ஙன மாய்தல் விடுதி விசாரந்
தத்த மயலைக் கடக்கற் கென்ப. )

அருந்தல் பொருந்த லுறங்கற் கேற்ற
தந்திரம் பற்பல வாய்தல் பந்த
விசார மாமயல் விளைவுக் கென்ப. )

பந்த விசாரம் விடுதி விசாரம்
என்றிரு பாற்று மியலு மென்ப. )
பந்த விசார மென்பதை யகலாப்
பற்பல சமயரு மேற்கும் பதவிகள்
எத்திறத் தானு மறுக்கி விழுக்குறும். )
சோதனை ஞாயம் பொருந்த முன்று
தேற்கிற் பதவி முத்தி யாகும்
அன்றே லுஞ்சொற் பிழையா கும்மே
தன்னைத் தெளியாக் காரணத் தானே. )

தனக்கயல் சுகமே தற்சுக மென்ப
அல்ல வெனினுங் கேளார் சற்றும்
இங்ஙனந் தெரிப்பா ரின்மை யானே. ( )

தெரிப்பா ருளரோ லணுகா ரெவரும்
அணுகி லொருவ ரெவர்க்கும் பகையாம்
பொய்யை மெய்யென் றேலா மையினல். (கூ)

அபரஞா னத்தைப் பரஞான மென்னு
மாதி யாகக் கீழ்ப்படு நிலைகள்
அனைத்தும் பந்த விசார மெனப்படும்
தார தம்மியம் பலவா யிருப்பினும்
அறிஞ ரேகணிக் கற்பால தென்ப. (கo)

அபர ஞானிகள் ஞானிகள் போலச்
சுருதிகள் பலவா யுத்திக்கு முரணக்
கற்று வேட மபிநயிப் பாதி
காட்டி மருட்டிக் குருத்தனம் விழைவர்
இவரெலாம் பந்த விசாரத் தவரே. (கக)

உண்மைய ராயின் றெரிய விழைவர்
என்சிறப் புறினுந் திப்பிபோற் காண்பர். (கஉ)

அனைத்து நிதமு மெங்கே தோன்றி
மறையுநா னெனனு முலக மெனனும்
மிசிரிம் பிக்கா திவற்றி னெல்லை
கணித்தற் கெய்ங்ஙன மென்னு மாதிக்
கெதிர் மறை யனைத்தும் பந்தவிசாரம்
இதனை விடுதி விசார மென்னின்
ஞாயஞ் சோதனைக் கியையி னேற்பம். (கங)

பந்தத் தகற்று முயற்சி யனைத்துஞ்
சிறந்த தாயினு மென்பயன் றக்க
சிரவண மனன மாதி யைந்தாற்
கேட்ட னுன்ன றெளிவுறுக் கண்ணே. (கச)

பகவத் யானந் தவம்பல விரதம்
யோகஞ் சண்முகி முதலன வரிய

வட்டமா சித்தியு முத்தியுந் தருமென்
றறைவதென்னை யருமறை யனைத்தும்
பந்த விசார மெனப்படா தென்ப. (கரு

சிற்சட மென்னுந் துவித வழக்கெங்
கற்ற தனுத்துணை யேனுஞ் சொல்லால்
அன்றி யெங்கணுங் கண்டில மதனால்
விடுதி விசார மெனப்படா தென்ப. (கச

சிற்சட மென்னுந் துவித மனுதி
யியல்பிற் றெங்ஙன மேகம தாகும்
சித்தெனல் தனுவ தின்றித் தனியா
துடன்பா டெவர்க்கு மறுந்தற் கிடமென்
ஆண்டா னடிமை யழகிற் றென்ப. (கஎ

உயிர்க்கெவ் வுடலுஞ் சுதந்தர மன்றால்
ஒற்றுமை நயத்தா லொன்றெனத் தோன்றினும்
வேற்றுமை நயத்தால் வேறு முடலுயிர்
உத்திக் கிதுமுர ணன்று தவின்மேல்
விசார மன்றி விடாமய லென்ப. (கஅ

தன்மை முன்னிலே படர்க்கை யெங்கணியும்
விசார முகத்தா லழியு மென்னின்
விசார மிலாக்க ணுறுமென லன்றே
இவ்விரு தகையு மியற்கையாக் காணும்
விதிவிலக் கென்பயன் வீணுறப் பாமே. (கக

இவ்விரு தகையு மாகியு மாகா
திருப்ப தென்னை விசாராந் தத்தில்
இருந்த வண்ண மிருப்பதைக் காண்டற்
கன்றோ விசார மென்மனூர் புலவர். (உ௦

பந்த முந்தி பாவம தாகும்
அறிவுங் கேதிங் காணி விருத்தி
கொள்வதே யன்றி யியையா தென்ப. (உக

இன்ன திலைய முளதேற் சோதனைக்
கிளையினக் கணங் காணு மென்ப. (உஉ)
இலக்கிய மறியார்க் கிலக்கண மென்பயன்
நன்குணர்த் துகினு நழுவுமென் றறிஞர்
முந்துவ ரதற்கே முடியா தகலார்
தடைகளே துறினு மாறு தென்ப. (உ௩)
விசாரத் தெளிவே பயகம்ப ஞதிக்
கிடந்தரா தருமே லாய்து மிக்கணம்
எவர்க்கு மிலையய வென்மனுர் புலவர். (உ௪)
பந்த விசாரத் தெளிவுமுக் குற்றம்
ஊன்றவால் விழுதை யொக்கு மென்ப. (உ௫)
விடுதி விசாரத் தெளிவு வோர்கல்வி
வெந்நீர் விட்டு வளர்ப்பது போலும். (உ௬)
காம மாதி விளைவுக் கிடமாம்
பந்த விசாரத் தெளிவ கலாதுறில்
இதற்குச் சான்று மெவ்ரு மென்ப. (உ௭)
நேதி நேதி வாக்கியத் துழைப்பாற்
களைவ தனைத்துங் கழற்றித் தனதுரு
வாக்கித் தானே தானு யிலகின்
றுக்க நிவர்த்தி யிடையறு வின்பம்
எய்தற் பாற்று விடுதி விசாரத்
தெம்மதத் தவர்க்குஞ் சம்மத மையந்
திரிபறுக் குறையா னென்பது திண்ணம். (உ௮)
ஒன்றையொன் றுக்கொளா வுயிர்க ளில்லை
ஒன்றுவொன் றுகத் தோற்று தொன்றிலை
யிதுவே பந்த விசாரத் துறுநிலை
யிதனைக் கடக்கற் கியைந்த கருவி
யாமோ சரியை கிரியா யோகம்

பொய்யைப் பொய்யா மெய்யை மெய்யா
வைய மின்றி விளக்கு ஞானக்
கருவி யன்றி விடுதி விசாரம்
இயைந்தது துக்க நிவர்த்திக் கென்ப. (உகூ)

யோகம் விடுதி விசார மெனுமென்
திருக்கு திரிசிய மன்றித் துவிதஞ்
சிறந்ததொன் றில்லை யிவற்றின் மயக்கைக்
களங்கறத் தெளிக்கத் தகைய தன்று
உலகுக் கொளிக்கும் பெருமை யானே. (௩0)

எவ்வெவ் விகார மெவ்வா றிருப்பினும்
அவ்வவ் வாறு காதுள மயக்கைக்
கண்டு களைதல் விடுதி விசாரம். (௩க)

இணைபா விடமா யிருக்கினு மெவையும்
தனக்கிலாத் தெளிதல் விடுதி விசாரம். (௩உ)

தனக்கய வின்றித் தான்மாத் திரமாத்
தனித்து விளங்கச் செயத்தரும் விசாரம்
விடுதி யன்றி வேறிலை மாறும். (௩௩)

கிருத கிர்த்தியந் துக்கா பாவம்
பிராப்தி பிராப்பியஞ் சர்வகா மாப்திகம்
என்பவை யெய்தற் கியைந்த விசாரம்
விடுதி யன்றி வெறிலை மாறும். (௩௩)

உபாதி குணந்தொழி லுண்மைய தாகக்
கொண்டவை தமையே யுயிர்பர மென்னத்
தெளிக்க வல்ல மறையாதி யாவும்
பந்த விசாரக் கருவி யன்றேல்
சோதனை யாதிக் கியையா தென்னை. (௩ரு)

இயைவ தாகச் சொல்வா தச்சூழல்
கற்ற வலத்திற் கலக்கினு மஞ்சோம்

அர்த்த வாதந் தபேத ரசத்தாற்
பொய்பொய் யாகப் போகு மாறே. (௩௫).
மெய்யை மெய்யா விளக்கல்வே தாந்தம்
பொய்யை மெய்யா விளக்க லயலே
மாறினு மாறுந் தெளியாத் தகையால். (௩௭)
மெய்யை மெய்யென் றுணர்ந்த வீரன்
பொய்யை மெய்யெனக் கொள்ளான் கொள்ளிற்
பேடி யேனைய விழிவன் றுகும். (௩௮)
இந்நிற முணர்ந்த பேடி ஞானிகள்
முழைவன மெங்குங் காண்டற் குரியர். (௩௯)
சோதனை யாதி முகத்தான் மெய்யை
யுணர்ந்த வல்லார் காண்டற் கரியர்
காணினு மவர்சொல் கற்கை யரிது
மனனுறி யெங்ஙன் வாய்ப்ப தரிது
கற்பனை யற்றுத் தனிப்ப தரிது
அரிதரி தெனுமறை யின்னதா லென்ப. (௪0)
கவலை யாது முருகிலை வேண்டார்
கண்டிலம் மேலாம் பதத்த ராயினும்
சுசாதி யாதி விகற்பந் ததாகில்
எங்ஙன மெய்தும் விடுதி விசாரம்
முகாா விடத்தி லென்மனுர் புலவர். (௪௧)
அன்பர் சரிதங் கேட்டல் சிவத்தொண்
டகலா தியற்ற லறம்வழா தியற்றல்
என்னு மாதி விடுதி விசாரம்
எனக்கொளிற் போலி சத்து மூன்றும்
சித்து நான்கு மானந்த மெட்டும்
நித்திய நான்கும் பூரண மூன்றும்
அனுத்தனை யேனு மகறற் கேதென்
னுத்திக் கியையா திருக்கி னென்ப. (௪௨)

பந்த விசாரம் விடுதி விசாரம்
என்றிரு பாற்றைப் பொதுவா யியம்பினம்
இனியவற் றிலக்கண மியம்பக் கேண்மோ. (சரு)

விசாரத்தின்பொதுவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம்-ருசுக.

---

பதினேழாவது

பந்தவிசாரத்திலக்கணமைந்தனுள்

## உற்பத்தியிலக்கணம்.

---

பந்த விசாரத் திலக்கண மைந்த னுள்
உற்பத்தி யிலக்கண மூந்த வுரைக் குறும். (க)

தோற்றந் திதி சங்கார மூன் ளெடு
மறைப்புந் தெளிவு மெனவைந் தாகும். (உ)

(அவற்றுள்) தோற்றமென்ன லகண்டத் தெழுமோர்
ஸ்புரிப் பேயென் னுமறையி னந்தம்
யுத்தி யனுப வத்தி யைய வென்ப. (ங)

(என்னை) வெளியா யொளியாய்த் தெரிவே மயமாய்
சொச்ச மதாகி யெங்குணுந் தானாய்
சுசாதி யாதி விகற்பம தின்றி
யென்று மொருபடித் தாகி யொன்றாய்
பலவா யன்று யிருந்த வண்ணம்
இருக்கும் பரம்பொரு ளொன்றுண் டதன்ஸ்புரிப்
பகண்ட கடலோர் திவலை யொக்கும்
இந்நிலைக் கைய முளதேற் செப்புதும். (ச)

உடலா லன்றோ வான்மா பலவெனல்
ஆன்மா வுடலெனிற் பலவா மன்றேல்
ஒன்றா மன்றேற் சொல்வா தம்மே. (ரு)

விட்ட லக்கணை யதனு லுபாதி
யனைத்து நினையா தான்மா மாத்திரஞ்
சிந்தித் திடவே விளங்கு மான்மா
உபாதி யென்னுங் கண்ட மிலதால்
அகண்ட மென்னற் கைய மென்னை
உபாதி யொன்றி லுறுமான் மாவை
ஸ்புரிப்பெனற் கைய மென்னை யென்ப. (சா)
அறிவை யன்றிப் பரமென விலையால்
அறிவை யன்றி யில்லை யான்மா. (எ)
கடலுந் திவலையும் போலு நீரால்
என்னற் கைய மிறையு மிலையே. (அ)
எங்கெங் கெவ்வா றெழுந்த தெதுவோ
அங்கங் கதுவா யடங்கல் பற்றி
யின்ன வுவமை யேற்கு மென்ப. (கூ)
உவமான மெல்லா மேக தேசம்
ஏற்றற் கியைவதைப் பற்றி யென்க. (க0)
ஆதலின் ஸ்புரிப் பெனற்கைய மிலதால்
தன்னை மறந் தற்பால தாகும்
இன்ன மறப்பே கிரிசிய மனைத்தும்
மறப்பா லென்னிற் பழுதுறு மென்ப. (கக)
ஸ்புரிப்பெனு மணுப்போ லொப்பதோ ரணுவு
மில்லை யிதனி லாதொன்று மில்லை
சோதனை முகத்தா லின்றே காணுதும்
இங்ஙன மின்றி நம்புதன் மூடம்
இதனு லையமுந் துயரு மருவே. (கஉ)
ஸ்புரிப்பினைத் தோற்ற மென்று விழுக்கென்
னுண்டேல் விடுதுந் தக்க தாயின்
இன்றே யிதுவே திண்ணம தாகும். (கங)

விஸ்மரணை தன்றாற் றிரிசியஞ் சத்தா
விளங்கற் பாலதின் மறைந்தது சத்து. (கச)

தானென் பதுவு மயலென் பதுவும்
திரிசிய மயமாத் திரியு மன்றோ
பகுதியீ தெனற்குப் பழுதுறு தென்ப. (கரு)

இலக்கிய மதனுக் கிலக்கண மாதலின்
இங்ஙனங் காட்டா துரைக்கிற் றள்ளுதும். (கசா)

இலக்கிய மறியா ரிலக்கண முரைத்தென்
யானை கண்ட குருடர்தீர் வொக்கும். (கஎ)

தானு மேட்டைச் சந்ததங் காண்பார்
அன்றிப் பகுதி யுரைக்கி னிழுக்கே
எவ்விதத் தானு மென்மனூர் புலவர். (கஅ)

கண்டவர் போல வெண்ணினு மாமோ
ஒருதீர் வேனு மிழுக்குறு மென்ப. (ககூ)

முழுதுஞ் சோதனை ஞாயமா தலின்
இன்னதே தீர்வென் றெடுக்கற் பாற்றே. (உo)

எருமை யட்டை மூடர் வெறுவாய்
மெல்வர் போலும் பகுதி யறியார்
பகுதி யுரைக்கும் பாங்கிற் றென்ப. (உக)

(என்னை) பேதந் தோன்றப் பகுதி யுரைப்பார்
இலக்கிய முரணினுங் கேளார் செவியில்
தக்க சான்றோர் மொழிவழி யில்லாத்
திறத்த ரதனுற் செப்பினு முவமை. (உஉ)

பகுதி விகுதிக் கபேதந் தோன்ற
வுரைத்த தென்னை யுதாரண முகத்தால்.
நான்மறை யந்தமு நால்வ ராள்வா
ராதிய ளௌவை வள்ளுவர் வேத

வியாசர் சங்கரர் திருமூல ருந்தாம்
அவரினும் வல்லிரோ பேத முரைப்பீர்
அல்ல வில்லை யென்றொரு பொருளும்
இயையா தாமுண் டென்ன வேற்க
வறியாது கற்ற புலமைநும் புலமை. (உங)

அறிவின் ஸ்புரிப்பே யுதிப்பெனக் கண்டாம்
மறுத்தற் கிடமின் றுதலிற் றீர்வாம்
இனியாந் திதியை யியம்பக் கேண்மோ. (உச)

யாவ ராயினு மிங்கிலை சோதனை
ஞாய மின்றி மறுக்கில் வீழ்வர்
அழியா நரகத் தவர்நண் பினரொடு
ஆணவ மதனு லென்மனூர் புலவர்
சத்தியஞ் சத்தியஞ் சத்தியஞ் சத்தியம்
எங்கணு மாய்கினு மிதுபோ லிலையே. (உரு)

உற்பத்திலக்கணமுற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்பட சூத்திரம்-ருஅசு.

---

பதினெட்டாவது

## திதியிலக்கணம்.

திதியெனப் படுவது கற்பனை தூன்று
தெழுதற் கியைந்த முயற்சி யென்ப. (க)

தஸ்மர ணைக்கும் விஸ்மர ணைக்கும்
பேதந் தோற்று மயக்க முறுமிம்
மயக்க மேலுற லால்வீ ழொக்கும்
இதுவே திதியி னிலைய தென்ப. (உ)

ஸ்புரிப்பை யன்றி யெழுவகைத் தோற்ற
வுயிர்க்குப் பொருளிலை யுளதேன் மருளாம்
கல்வி யென்செயும் பொருணிலை யியல்பை. (ங)

ஸ்புரிப்பெனுந் தெரிவு திரிசிய மயமாய்
மறைப்புறுந் தனது சுயநிலை காண்டற்
கின்றித் தன்னுற் ருனென மொழிப. (ச

சொல்லா லன்றிச் சோதனை முகத்தால்
எய்து வோர்க்கே யிந்நிலை யுண்மை
அல்லார் தீர்வினி் ககற்றப் படுமே. (ரு

பகுதி படும்பா டிங்ஙன மறியார்
மயமே யுலக மாட்சித் தாயின்
எங்ஙன முண்மை விளங்கு மாறே
அறிவா ரெங்கு மரிதரி தென்ப. (சா

அறிவா ரின்றே லுண்மைக் கழிவென். (எ

பகுதி யிங்ஙனம் பிறழத் திணைபா
விடம தாகுந் தன்னுற் ருனெனற்
கிடையூ றென்னை யெவரிவ் வனுபவம்
இல்லார் கண்டில மில்லை யாதலின்
பகுதி திதியி னிலையிஃ் தாகும். (அ)

அவத்தாத் திரைய முபாதித் திரையம்
அபிமான மூன்று மாணவ மாயா
காமிய மூன்று மடுக்கடுக் காக
வாவது மன்றி நாயக னயகி
மக்கள் சுற்ற மன்னிய நண்பு
பகைமுதற் பேத மாகு மதன்மேல்
ராகமா திபதின் மூன்று குணமுந்
துன்ப வின்பமுந் தொலையாக் கவலையும்
ஆரா வியற்கை யவாவொடு பிறவியும்
ஆதி யாக வுழறல் திதியே. (கூ)

காட்சி கருத்து வென்றிரு முகத்தால்
அகம்புறத் திரிசிய மனைத்து முணர்தல்

எவருஞ் சான்று யிருப்ப மதனல்
அவ்விரு கருவிக் கிலக்கு விடையம்
அவ்விடை யத்துட் சுயம்பொன் றிலையால்
சுயம்புபோற் காணினும் விகாரத் தன்மை
யிழப்புக் கிடமெ னின்று தவினுல்
இலக்கா காது கொள்ளி விச்சா
ஞானக் கிரியைகள வலத்த தாகும். (க0)

சுகந்தர லென்னே யுலக மெனிலோ
இலக்கு நிலைமை மறந்துழி யென்ப. (கக)

(ஆதலின்) மறப்பே பகுதி யென்று முன்னர்
மறப்பே யனர்த்த மென்று லென்னே
மறப்பை யன்றிக் காட்ட வறியீர்
மறப்பே பகுதி திதியெனற் கையம்
இன்றெனப் பெற்றுஞ் சோதனை யானே. (கஉ)

மறதி பேதம் பற்பல வீதோ
அவற்றிற் கெல்லா மாதி யென்ப. (கரு)

ஸ்புரிப்பெனற் கருத்த மறதி யன்றே
நினைவை மறதி யென்ற தென்னே
தன்னை மறத்தலி னென்மனுர் புலவர். (கச)

ஸ்மரணை யென்னு நினைவை யன்றி
மறதி யெனற்குப் பொருள்வே றில்லை
இந்த நினைவே பகிர்முக மாங்கால்
அடுக்கடுக் காகக் கீழுறப் பெற்று
வனந்த நிலைய தாகு மதனல்
அனந்த நினைவ தாகி யவ்வவ்
வவசர நிலைக்கியை நாமம் பெற்றுத்
தனைமறந் ததுபோற் கீழுறு நிலைகள்
அடுக்கடுக் காக மறத்தலின் மறதி
யெனப்பெயர் முழுது மேற்ற தென்ப. (கரு)

இதனை யறிய வேண்டினஞ் ஞான
பூமி யேழென் றதனுள் விளங்கும். (க

நினைவொன் றேபல நினைவா மென்பதும்
அந்நினை வுள்ளே பலநினை வென்பதும்
அதுவே மறப்பாய்ப் பலவா மென்பதும்
யுத்திக் கியையிற் சுருதி யேற்பம்
என்னிற் கூறுது மேற்கு மளவறிந்
தெவர்க்கு முதாரண முகத்தா னென்ப. (க

எவர்க்கு மனுபவ சாக்கிரந் தன்னில்
இயம்புது மன்னதை விளங்க யாமே. (க

சாக்கிர மென்னல் நினைப்போ மறப்போ
நினைப்பெனில் விந்து நினைவா காது
மறப்பெனி லாதி மறப்பா காது
மேலடுக் கனேக முளது பற்றிக்
கீழ்கடை யாதலி னினைப்பெனற் பாற்றே. (க

நினைப்பே மறப்பாய் மறப்பே நினைப்பாய்
நிகழக் கண்டனந் தினமனு பவத்தால்
உன்னிடாக் குற்றமே யிலாக்குற்ற மன்று
எக்கா லத்தினு மென்மனார் புலவர். (உ

சொப்பன முன்னிற் சாக்கிர மறப்பாம்
சுழுத்தி யுன்னிற் சொப்பன மறப்பாம்
சாக்கிர முன்னிற் சுழுத்தி மறப்பாம்
மூன்றினு நினைவின் றேலந் தந்த
வவத்தாக் காட்சிக ளெங்ஙனங் காணும்
மறப்புற லென்னி லவ்வவ் வேடாங்
கலைதலி னன்றி வேறன் றென்ப. (உ

எச்சென னத்தினு மிதுபோ லென்ப. (உ

நினைப்பே மறப்பு மறப்பே நினைப்பெனற்
கிதுவே தக்க வுதாரண மென்ப. (உங)

வேடங் கலைத லென்பது பாவங்
கலை தலை யென்றார் கற்றுணர்ந் தோரே. (உச)

நினைவொன் றேபல நினைவா மென்னல்
சாக்கிர மென்ன னினைவங் நினைவே
பலநினை வாகப் பரவக் காண்பம்
சாக்கிர நழுவி னிலையிவ் வளவும். (உரு)

விடய மெல்லை யின்றிப் பலவால்
சாக்கிர நினைவும் பலவாச் சிதையும்
ஆதலி னொன்றினொன் றின்றா மதனால்
நினைப்பே மறப்பாய்த் தன்னு ளடங்கும். (உசா)

பலநினை வாதலிற் பலமறப் பெனற்குத்
தகுந்தகு மென்ப வறிந்திசி னோரே. (உஎ)

அம்மறப் புள்ளே பலமறப் பென்னல்
சாக்கிர நினைவு தனைமறந் ததனால்
அந்நினை வேபல வாகு நினைவும்
தனைமறக் கற்கிங் கைய மென்னை
ஒருமறப் புள்ளே பலமறப் பென்றாம்
தினமனு பவத்திற் காணப் படுமே. (உஅ)

இப்போது தானினைத் தேன்மறந் தேனிதோ
வந்த தென்று மெங்குவைத் தேனதைக்
காணோ மென்று மிதுபோற் பலவா
வழங்கக் காண்ப மிதினா னினைவி
னிலையிஃ தெனவு மிதையலா தில்லை
காண்பன வனைத்து மெனவு மறப்பும்
இல்லை யெனவு முணர்ந்தா மினியாம்

திதியி னளவைச் சொலப்புகிற் பெருகும்
சொற்றவற் றியலாற் கவர்வர்நுண் ணுணர்வோர்
மற்றைய பிறவு மென்மனூர் புலவர். (உக

இவையெலாம் பகிர்முக நோக்கு விசாரத்
தாலுற லன்றோ வவர்மேற் பிழையென்
றன்னல் வந்த வனர்த்தமுந் திதியும்
இதுவா தலினு லழிவு முரைத்தும். (ஙட(

திதியிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம்-சுகரு.

பத்தொன்பதாவது

## சங்காரவிலக்கணம்.

சங்கார மென்ன லழித்தலென் றாயினும்
விடுதி விசார மென்பதிற் செவியைக்
கொடாம னங்கசங் துவைநு தூரம்
என்று மகல நிற்றலென் றேற்கும். (க

(என்னை) உடலுயி ரொற்றுமை வாழ்வி லென்பயன்
இவ்வா றெத்தனை வந்துவந் தகன்றன
நம்பி நம்பி நாசமா னோம்
என்னில் விடம்போ லிருக்கு மென்ப. (உ

அருந்தல் பொருந்த லுறங்கலி னென்பயன்
இடையி லழிதற் கேற்றலி னென்னில்
அவல மொழியென் றகலு மென்ப. (ங

போக சாதனக் கருவிக ளனைத்தும்
போக மென்னக் காண்ப தன்றி

யுற்று நின்றுண ரிற்போக மெனப்படா
நிலையதா மெனிற் பகையொப்ப தில்லை. (சு)

ஆயுள் விர்த்திக் கவாவுவ தென்னை
இதற்கு முன்கால மிருப்பதாற் காலம்
பின்னு மிருக்கு மெனப்படு மன்றோ
இடையிற் கால மெத்தனை யிருந்தென்
வரவு செலவென் றோற்ற மையினால்
விடுவதே நலனெனில் வெறுப்பொப்ப தில்லை. (ரு)

தனமீட் டற்கிங் கவாவுவ தென்னை
போக நுகர்தற் கென்னி னில்லை
யல்ல வென்னு நுறுபொரு ளொன்றிலை
எத்தை நுகர்தற் கென்பய னீட்டல்
என்பது மிழுக்கா யிகலு மென்ப. (சா)

உலகலக் காலென் பயன் காணும்
ஆயுங் காற்பொரு ளொன்று மிலாதென்
விடுவது நலனெனி னினைதயும் விட்டுப்
பாழா குவதோ வென்ன விகலும். (எ)

பாலிய மூட மெவ்வனங் காமம்
வயோதிகந் தளர்வு மூன்றூற் சுகமென்
இடம்பொரு ளேவல் வாய்ப்பினு மாறுந்
தகைய தாதலிற் பிறவி வேண்டற்
பாற்ற தன்றெனி லெங்ஙனஞ் சுகித்தல்
எப்போ கத்தையு மென்றிகழ்ந் துரைக்கும். (அ)

பதவி யவையு நிலையா வாதலின்
வேண்டற் பாற்ற தன்றெனின் மறுத்துக்
கருவி யவையே கருதி யுழைக்கும். (கூ)

நன்மையுந் தீமையு மியற்றுவ தாற்பலன்
புண்ணிய பாவம் வருமெனன் மெய்யே

மாறுவ தென்னை யங்ஙன மென்றும்
இராது விடுத னலனெனின் மாறு
வியற்றக் கண்டன மிதுசங் காரம். (க0)

நாற்கதிக் கியைந்த பயன்றருங் கிரியை
நன்மார்க் கச்செய லீதன் றென்ன
மறுத்தல் பந்த விசார சங்காரம். (கக)

ஒன்றே யொழிய விரண்டிலை யென்னில்
நாரா சங்கா துற்ற தொக்கும். (கஉ)

சிற்சட மொன்றே யிரண்டல வென்ன
ஞாயங் காரண நவிலினு முனம்போல்
ஆவ தன்றிப் பயனொன் றிலையே. (கந)

அதனை யழிப்ப தாக வுன்னித்
தான்கே டெய்த றுனறி யாது
மயலி னழிதல் சங்கா ரம்மே. (கச)

எட்டி நோக்கா திறையு மயலில்
இனிதினி தென்றே வெறுமை தன்னைச்
சுகிப்ப தாகக் கருதி மூழ்கித்
திசைகா ணமை சங்கா ரம்மே
யெவரு மில்லை மீந்தவ ரொன்ப. (கரு)

ஸ்மரணை தானே பூத பௌதிக
மாகி யதையே நானீ யவனவ
ளதுவாக் கொண்டு பெண்டு பிள்ளை
யுறவயல் சுற்ற மென்னு மாதி
பந்தத் தாழ்ந்து நிலைதெரி யாது
குழம்பி நின்று துயர்சுக மென்னக்
கருதி விடுதி விசார மிழத்தல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (கசா)

அனைத்துங் கோற லறிவுக் குடன்பா
டனைத்துங் கோடல் மனதுக் குடனபா
டிவ்விரு பாற்றி லிங்கே மனவர
சதனு லறிவைக் கோற லொக்கும்
அறிவி னரசை யடக்கிவிட் டதனல். (கஎ)

மானதன் மோகன் காம னாதியர்
ஆணையே யிக்கண மெங்கு மாதலின்
விவேகன் ஞாயன் சாந்தன் பொறையன்
ஆதியர் தலைகாட் டற்கிட மெங்கே
இன்னவ ரரசை யழித்துவிட் டதனல்
சங்கார மென்னச் சாற்றலாமே. (கஅ)

விவேக னாதியர் நிலைமை கற்கினும்
அந்நிலை நில்லாக் காலென் பயனுறும்
மோக னாதியர் வயமே னகலும். (கக)

பொய்ம்மய மோக னாதிய ராணை
மெய்ம்மயம் விவேக னாதிய ராணை. (உ0)

தனக்கென் றொருபொரு ளிலாத தோற்றம்
அல்லாச் சகமுயிர் பரமிலை யிவற்றை
மெய்யெனக் கோட றெளிவோ மூடமோ
தெளிவெனக் கோடற் கோரணு வேனும்
இயையா தென்னை விகாரந் தவிர்ந்து. (உக)

தோற்ற மெல்லாஞ் சுயம்பெனற் கியையா
சொல்லாற் சுயம்பெனிற் சோதனை மறுக்கும்
இருப்பதற் கன்றோ சிருட்டி திதிசங்
கார மூனாத்த விலாமைக் குனாத்தென். (உஉ)

ஸ்மாணைதன் சுயம்பு நிலையணு வேனும்
புலப்படா தெங்குந் தனது கற்பித

வடிவாற் றனக்குந் தெரியாது மறைத்தல்
சங்கார மென்ன லெமது கருத்தே. (உ௩)

தனதுகற் பிதத்தை மித்தை யென்றுந்
தனதெதார்த் தத்தை யுண்மை யென்றுந்
தெரியாத் தகையால் ஸ்மரணை யென்னும்
உயிர்கள் மறுக்கு மகம்பிர மந்தா
னெனலைக் கண்டிலிர் கொல்லோ வெங்கும்
ஞான மெனலை யழிப்ப தாதலிற்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (உ௪)

அர்த்த மதனை யனர்த்த மதனுன்
மறுப்ப தெங்கு மாதலி னிதனைச்
சங்கார மென்னச் சாற்றத் தகுமே. (உ௫)

நானல் லவற்றை நானெனும் பாவம்
உள்ள வளவு மொழியாப் பிறவி
யொழியினு மொழியா வவித்தைநீங் காதால்
இதனை நீக்கற் கேற்ற சாதனஞ்
செவியிற் கொள்ளா மறுத்தல்சங் காரம். (உ௬)

புலப்படு மனைத்துஞ் சுயம்பொன் றேனு
மில்லை காண்மி னெனவொவ் வொன்றுஞ்
சோதனை ஞாய முகத்தாற் பிரித்து
நேரே காட்டி நினைவுறு தொழிமின்
துக்க மனைத்து மொருங்கொழி தற்கு
எனற்கு மாறு வியைதல் சங்காரம். (உ௭)

மனமடங் கற்கு மருந்துக் கலையார்
எங்கனுங் கண்டில மிதனை யுணர்த்தில்
அடையோக மாதி செயற்குடன் படுவர்
அன்றி நிலையார் நினையார் சுற்றும்
ஆதலி னிதனைச் சங்கார மென்ப. (உ௮)

பற்றிப் பாய்த விலாவகைக் கலையார்
எங்கணுங் கண்டில முணர்த்தி விதனை
யிதுபோற் கட்ட மொன்றுங் கண்டிலம்
அருந்தல் பொருந்தற் கேற்ற முயல்வுக்
கானி யிதுவென் றெட்ட வகறல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (உக)

இங்ஙன முணர்த்தும் புத்தியைச் சற்றும்
உணர வறியார் மாயா வாத
மென்ன விதனைச் சாற்றித் தத்தமக்
கியைந்த வாறு பிதற்றிக் கோலங்
கொண்டே யுழறல்சங் கார மாகும். (ௗ0)

பொருளல்ல வற்றைப் பொருளெனக் கொள்ளிற்
பிறவிக்கு வித்தெனப் பேசினர் மொழிவழி
நில்லாமை யன்றோ சங்கார மென்னல்
இதனை யறியார் சான்றோ ரொன்னல்
வேறு மூட மில்லை யென்ப. (ௗக)

எல்லா மென்னிற் றிரிசிய மாகும்
அல்ல வென்னிற் பாழெனலாகும். (ௗஉ)

(ஆதலின்) எல்லாமாகியு மல்லவு மாகியு
மிருத்தல் பரத்தி னிலைய தென்ன
அருமறை யுரைக்குஞ் சொன் மாத்திரத்தை
கற்கி லிந்த வழக்கெங் ககனும்
அருத்தந் தன்னைத் தெளியா திழத்தல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (ௗௗ)

சர்வ மித்தை யெனுமுப நிடதத்
துரையைக் கோறல் சங்கார மென்ப. (ௗச)

கோறலி னாற்றய ரெய்த லறியா
தின்பெனக் கொள்ளு மடமைசங் காரமே. (ௗரு)

சர்வம் பகவத் மயமெனுஞ் சொல்லைக்
கற்றுத் தத்தங் கொள்கை மொழியால்
வழங்குத லன்றி யெங்கணு மென்றும்
அர்த்த முகரா தனர்த்த மதாக்கல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (௩௬)

தானெனு மொழியொன் றேதிணை பாலிட
மாதற் கேதென் னென்னுமா கமத்தின்
சங்கையை யசட்டை செய்தல்சங் காரம்
ஈதெலாம் பந்த விசாரசங் காரம். (௩௭)

நானெனக் கொள்ளா வுயிருந் தேவரும்
இல்லை யதனு ளுனென லெப்பொருள்
எனுமுப நிடதத் துறையைச் சிந்தித்
திடற்கிடம் பெறுஅ துடனுறை யாக்கொளல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (௩௮)

குருத்தனம் வேண்டிக் கோலம் புனைந்து
கள்ள மனத்தைக் களைக்க வறியா
நூல்பல கற்று நுவலினு மென்பயன்
எனுமுப நிடதத் துறையே லாமை
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (௩௯)

இம்மை யொழியி னெவர்பவங் கண்டார்
எனுந்துணி பான்விதிக் கெதிர்மறை தழீஇக்
கிடக்கை சங்கார மென்மனூர் புலவர். (௪0)

செகமுயிர் பரமெனல் ஞெப்தி யன்றி
யிலையெனச் சோதனை ஞாயம் பொருத்த
முகத்தால் விளக்கினுஞ் செவிகொடா தகன்று
தம்மனோர் கொள்கை தழுவல் சங்காரம். (௪க)

சங்காரவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம்-சுருஎ.

இருபதாவது

# திரோபாவவிலக்கணம்.



திரோபவ மென்னல் மறைவெனற் பாற்றே. (க)

மறைவு மறதி யென விரண்டாகி
யியலு மென்ன வியம்பினர் புலவர். (உ)

தனது கற்பிதந் தன்னை மறைத்தல்
மறைவெனக் கூற்று வியலு மென்ப. (ங)

விந்து நனவை மறதி யென்றார்
தனைத்தான் மறத்தலிற் றனையுணர்ந் தோரே. (ச)
ஆதலினிங்கே மறைவெனப் பெற்றும். (ரு)

(என்னை) தனைமறந் ததுவே மறதி யென்றும்
அதுவே மாயை யெனப்பெய ராகும்
தம்மொடு மாயை மோக மவித்தை
யநிர்த்த மென்ன வைவகை யாமே. (சா)

இந்த வைவகை தம்மாற் றன்னிலை
தான்கா ணாது மறைதல் மறைவே. (எ)

(அவற்றுள்) தமமென னனவை மறைத்த வினிப்பெ
யர், ஏற்றற் பால தென்மனார் புலவர். (அ)

மாயை யென்ன விலையல வெனற்கே
யியைதற் பால துலகினுக் காதி
பற்றி யாதலி னிப்பெய ரேற்கும். (கூ)

மோக மென்ன வேற்றுப் பொருளை
மெய்யென் றுணர்த்தற் பாலதி னப்பெயர்
ஏற்றற் பால தென்மனார் கண்டோர். (க0)

அவித்தை யென்னல் வித்தையி னிலையை
மாற்றலி னப்பெயர்க் கியைதற் பாற்றே. (கக)

அநிர்த மென்ன வுண்மையை மாற்றலின்
அப்பெயர்க் கியைவ தென்மனார் புலவர். (கஉ)

இங்ஙன மாய வவசர நிலையைப்
பேறலி னிப்பெய ரைந்தும் பெற்றும். (கங)

மறதி யன்றி மாயை யெனற்குப்
பொருளிலை யதுவே மறைத்த தாகலிற்
றிரோபாவ மென்னச் செப்பற் பாற்றே. (கச)

முன்பி ெனருபடித் தாக மொழியாத்
திறத்தர் பாற்றதித் திரோபவ மென்ப. (கரு)

பஞ்ச கோசப் பகுப்புமே லீட்டால்
உறுபய னறிவை மறைப்ப தாதலிற்
பந்தத் திரோபவ மெனப்படு மென்ப. (கசா)

தத்த மயலெனத் தாந்தெரி யாது
தத்தந் தெளிவுக் கியைந்த கருவி
யாமென் றயலை யுணர்த்தற் பால
நூல்பல கற்றுத் தெளிவுறல் பந்த
விசாரத் திரோபவ மெனப்படு மென்ப. (கஎ)

சகல கேவலந் தோன்றி மறைதற்
கியைந்த விடமே தெனுமுப கிடதத்
துரையை யேலா துடலெனத் திடங்கொண்
டதனுன் மறைப்புறல் திரோபவ மென்ப. (கஅ)

அறிவலா தில்லை திரிபுடி நிற்கத்
திரிப்புடி தன்னைச் சத்திய மெனக்கொண்
டாதார விழப்பே திரோபாவ மென்ப. (கசு)

ஞெப்திப் பிரிய மன்றி யனுவும்
இலையெனு மறையி னந்தத் துரையைச்
செவிக்கொளா துலகைச் சத்தெனக் கொளலால்
அதுவே தன்னை மறைப்பது பற்றித்
திரோபாவ மென்னச் செப்பத் தகுமே. (உ0)

நானெனக் கொள்ளா வுயிர்க ளிலையால்
நானென லன்று வுபாதி யாவும்
நானென லெல்லா மொன்றெனப் படுமால்
நானென லறிவை யன்றி யிலையால்
நானன் னியமா யிருப்பது பந்தம்
நானே நானா யிருப்பது முத்தி
யென்னு மாத்தர் மொழிகொளா துடலான்
மறைப்புறல் பந்தத் திரோபாவ மென்ப. (உக)

கபட மாதி சிவச் செயல்பிற
தனுபூத மாதி பரச்செய லென்னில்
ராகத் துவேஷ காம மாதி
வினைவெதி ஞலோ பரத்தா லென்னில்
விதிவிலக் கெற்றிற் குயிர்கட் கென்பம். (உஉ)

உயிரா லென்னி லெதுமுத லென்பம். (உங)

அனாதி முதலெனி லேதுவென் னென்பம். (உச)

சுகிப்பதற் கென்னி லெம்மத மறையும்
இவற்றை விலக்க விதிப்ப தென்னே. (உரு)

முத்தி பெறற்கெனில் யார்முயல் வாலோ
உயிர்முயல் வாலெனிற் பந்த வினைவும்
யார்முயல் வாலோ வுயிர்முயல் வாலெனிற்
பரத்தைவந் திப்பதென் பலன்றரு தற்கெனின்
முயல்வு பற்றித் தருவ னன்றோ
விடிலொரு வினையு மிலையொரு பலனும்
மோன மன்றி யென்பது பொய்யோ. (உசா)

தன்னாற் பந்தமுந் தன்னால் விடுதியும்
என்ப தெமது சித்தாந் தம்மே. (உஎ)

தன்கட் டமதைத் தள்ளிப் பரத்தை
நோவ தென்னே யருநர கென்ப. (உஅ)

தன்று லயலேச் சுயம்பெனக் கோடலுங்
கற்பித மென்னத் தன்னைக் கோடலும்
அன்றோ பந்தத் திரோபவ நம்மால்
ஆய தென்று மறுத்தன் மடமை. (உக)

பிறவி தோறு மிங்ஙன மன்றோ
முன்பி னென்றதற் கைய மென்னை
இம்மை யிற்று முணர்த லரிது
உணர்ந்தது முன்செய் புண்ணியத் தன்றோ
மூற்று முணர்து மிம்மையிற் றானே. (ஙூ0)

பந்த கிருத்திய நான்கு முரைத்தனம்
அனுக்கிர கத்தை யினியுரைக் குதுமே. (ஙக)

திரோபாவவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - சுஅஅ.

---

இருபத்தொன்றுவது

## அனுக்கிரகவிலக்கணம்.

அனுக்கிர கந்தான் முற்றுந் தெளிதல்
என்னப் படுமே பதவுரை யென்ப. (க)

அறிவனு வாகவுஞ் சகமகத் தாகவும்
சத்துல காகவு மசத்தறி வாகவும்
ஐய மின்றித் தெளிந்துரைப் பதனை
யனுக்கிர கங்கா ணெண்பது திண்ணம். (உ)

இன்னதை யேலா ரொருவ ரெங்கணுங்
கண்டிலங் கண்டிலஞ் சத்தியஞ் சத்தியம். (ங)

இன்னதை யேலாச் சமையமொன் றில்லை
ஏது சொல்லினு மியையா ரென்ப. (ச)

சகமுயிர் பரமெனு மூன்றுஞ் சத்தெனல்
ஏலாக் குருக்க ளெங்கணு மில்லை. (ரு)

சகமெனு லொன்றை மாத்திரஞ் சத்தாச்
சோதனை முகத்தால் விளக்கறி யாதார்
எங்ஙனம் பரமுயிர் சத்தெனத் தெரிப்பர். (சு)

அகம்புற மெங்குஞ் சின்மாத் திரமாத்
தெரிக்க வல்லா ரல்லார் மயமே
யெங்கணு மாதலி னிஃதனுக் கிரகம். (எ)

தேக போகங் காத்துத் தானம்
பூசை யாதிய புண்ணிய கருமம்
இயற்றுதன் முறையெனுங் கருத்தினை ரெவரும்
ஆதலி னிதனை யனுக்ரக மென்ப. (அ)

எம்மதத் தவரு மியையா ரெவையுங்
கற்பனை யெனற்குக் கண்டோ மதனால்
அவர்போ தனையே யனுக்ரக மென்ப. (கூ)

குருடர் கண்ட யானை யொக்கும்
பாரிலை காணுக் குருக்கள் குறிகள்
இன்ன போதனை யனுக்ரக மாமே. (க0)

அனாத்தஞ் சுயம்பாக் காண்பா ரெதிரில்
எட்டா விடத்திற் பாஞ்சுயம் பென்னில்
ஏற்ப தன்றிங் கேலா ரிலையால்
இவர்மொழி தானே யனுக்ரக மென்ப. (கக)

சோதனை முகத்தாற் காணினு முலகை
மித்தை யென்ன மீண்டுஞ் சத்தாக்
கொள்வ தெவன்கொ லென்றுண ராத
பேதைய ரன்றிக் குருக்க ளிலையால்
இவர்மொழி தானே யனுக்ரக மென்ப. (கஉ)

எம்மதத் தன்பர் சரிதக் கேள்வி
என்செயுஞ் செனன மனைத்திலுந் தன்னைத்
தெளியாக் கடையெனத் தேர்ந்த குருக்கள்
ஒருவரு மிலையா விவர்மொழி கோடல்
அனுக்ரக மன்றோ வயல்வே றிலையே
உளதேற் கொள்வா ரில்லை யென்ப. (கங)

உள்ள தெனுவென் றுய்வா ரில்லை
யுளரோற் சகத்தை யாய்ந்தா ருளரோ
உளரோ வில்லை யல்ல வெனுது
உண்டெனக் கோடற் கியைவ தென்னை
இவர்மொழி தன்னை யனுக்ரக மென்றும். (கச)

எப்பொரு ளெங்ஙனந் தோற்றலைக் கண்டு
அப்பொருண் மெய்ப்பொரு ளாகக் கொண்டு
தத்தமக் காவன முடித்தாக் களிக்கும்
விவேக போதனை யனுக்ரக மென்ப. (கரு)

மெய்ப்பொருள் விளக்கத் தக்கநூல் பலவும்
யுத்தி முரணக் கற்றுப்போ திக்கும்
விவேகமு மற்றே யென்மனோர் புலவர். (கசு)

உயிருணர் வென்று தாவி யெனக்கொண்
டுணர்த்த வல்லது மனுக்ரக மென்ப. (கஎ)

ஒவ்வொரு மதமுங் கண்ட மகண்ட
மளவுயிர் பரமென் றெண்ணித் திடமா
யுணர்த்தல் பந்த வனுக்ரக மென்ப. (கஅ)

கண்ட மகண்டங் கடந்த சோதி
யென்று கூறி யுடலினுட் குறிவைத்
தங்கே போலி சோதி காட்டி
மயக்கு போதமு மனுக்ரக மென்ப. (கசு)

ஞான போதை கேட்டு மறியா
துணர்வை மயக்கும் போதைமேற் கொண்டு
கற்ற தெல்லாங் கூறி யறிமை
கொள்ளுங் கூற்று மற்ற தாகும். (உ0)

எங்குந் தானு யிலகு ஞானக்
கன்னியை மணந்து சுகிக்கறி யாது
மலபாண்ட தேக மருவிச் சுகிக்கத்
துங்கநூல் கற்று மயக்கலு மற்றே. (உக)

நானெனல் காண வகையறி யாது
நானல் லவற்றை நானெனக் காட்டி
ஊனை வளர்க்க வுணர்த்தும் போதம்
அன்னதே யென்றற் கைய மென்னே. (உஉ)

வேடங் காட்டி யுண்மைஞா னிகள்போல்
அபினயித் தெங்கும் பூசை கொண்டு
கள்ள போத முணர்த்தலு மற்றே. (உங)

பாதக் குறடு தாடி மொட்டை
காவி தண்டு சடைமுதற் கோலத்
தாசை யன்றி யனுத்துணை யேனும்
ஞானங் கனவினு மில்லா ஞானிகள்
கும்பிடு வேண்டிக் குருத்தனஞ் செய்யுங்
கள்ள ஞானமு மற்றென மொழிப. (உச)

விளக்கத் தக்கோர் மொழிரசஞ் சற்றும்
உணர்தற் கில்லாத் திறமைகாட் டாது
பேச்சுக் கற்றோ ரொனத்தன் னைத்தோர்க்
கோதிக் குருத்தனஞ் செய்வது மற்றே. (உரு)

உண்மை விளக்குவோர் குருத்தனம் விழையார்
அன்மை விளக்குவோர் விழைவ ராதலின்

எதுவோ பந்த வனுக்ரகங் காண்மின்
சொற்றது கொண்டிங் கிற்றது போல்வன
தேர்தற் பாற்றது தெள்ளியோர் கடமை. (உசு)

பந்த விசாரப் பஞ்சகிர்த் தியமும்
மொழிந்தன மினியாம் விடுதி விசாரக்
கிர்த்திய மைந்தி னிலக்கண முரைத்தும்
பந்த மகலப் பாற்றற் கென்ப. (உஎ)

அனுக்கிரகவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - எகரு.

---

இருபத்திரண்டாவது
விடுதிவிசாரத்திலக்கணமைந்தனுள்

## உற்பத்தியிலக்கணம்.

விடுதி விசாரப் பஞ்சகிர்த் தியத்துள்
உற்பத்தி யிலக்கண முரைத்து மீங்கே. (க)

தானு யன்றாய்த் தன்னை யன்றி
யிடம்பிறி தின்றி யென்று மொருபடித்
தெங்கணும் விளங்குஞ் சிதம்பரப் பொருளை
மறந்த மறப்பான் மறைத்தஃ துளதேற்
காணு தென்னை யனுமா னத்தால்
உளதாக் கொண்டு குறிபல கருதி
வழுத்தலும் போகங் கழறற் கன்றால்
தேகமே யான்மா போகமே முத்தி
யென்பது கொண்டே யிழந்த ராதனை
யிழப்பு நீங்க வுரைத்துமுற் பத்தி. (உ)

மதத்தர் கூறும் பதவி யனைத்தும்
உணர்வுக் கயல்சுக மென்பது திண்ணம். (ந)

தூல மன்றித் தேக போக
மில்லை யாதலி னுன்ம முத்தி
யதுவே யென்று ஞஸ்திக னென்ப. (ச)

சூக்கும மன்றித் தேக போக
மில்லை யாதலி னுன்ம முத்தி
யதுவே யென்று ரேனைய ரென்ப. (ரு)

அவித்தா தேக மாகு மறிந்திலர்
அதுவுள் ளளவும் போலி முத்தி
யெலாமெனக் கியாமே யுத்தரவாதி. (சா)

அவித்தா தேக மென்ற தெதனைத்
தன்னை மறந்த ஸ்புரிப்பினை யென்ப. (எ)

(அதுதான்) ஒன்றை யொன்று வுணர்தலெவ் வரிவோ
அதுவே தத்துவக் கூட்ட மாகும்
அன்னிய மென்பா ரதனைக் காணார். (அ)

எழுவகைத் தோற்ற வுயிரெலாம் ஸ்புரிப்பே
தானே தானு ஞானவிண் ணதனில். (கூ)

தனது ஸ்புரிப்பை மெய்யாக் காணில்
கிரிசிய மனைத்து மின்றி ஸ்புரிப்பும்
அகண்டசின் மாத்திர மாகி யழியும். (கo)

(இதனுல்) பிம்பப் பிரதி பிம்ப மென்றூர்
யாமு மறியச் சோதனைக் கியையும். (சக)

இதனை யறியா ரென்னசா திக்கென். (கஉ)

ஸ்புரிப்பெனும் ஸ்மரணை தனைமறந் தயலாய்
அர்த்தம் விட்டனர்த் தமயமாய்த் திகைதப்
பினமா னுயிபோன் மருண்டுபெல் பிறவிக்
கடலினிற் கையிற் கனைதெரி யாத்தன்

தெய்வ கதியாய் ஞான மரக்கலத்
தேறியங் கனுகக் கண்டடூ இரக்கங்
காட்டத் தொடங்குங் கதிமுறை நிற்றல்
விடுதி சிருட்டி யென்பது காண்டமின். (கங)

இன்பமுந் துன்பமும் வந்து வந்து
போய தெத்தனை யப்போ தப்போ
துண்மையா வெனது வுவந்துவந் தயர்ந்து
வாடியு மவைபோல் வந்துபோ காது
நிலையா நிற்றற் கேதென் யானும்
அவத்தைபோன் மாறு திருந்தற் கேதென்
பிறவி மாறினும் யான்மா றேதென்
மாறுவை யென்னி னவையா னலவே
யிந்த வையந் தவிர்த்தியென் றிரந்தனன். (கச)

உனது சுயம்பு வடிவோ வறிவே
யேனைய வென்னிற் சோதனை தன்னில்
அல்ல வல்ல வென்றகல் வானேன். (கரு)

அவ்வவ் வவசரத் ததுவது வாக
யானிற் றற்கிங் கேதென் னென்னில்
உன்னை யன்றி யவையிலா மையினால். (கசா)

யானே தத்துவக் கூட்ட மென்னில்
அல்ல வல்ல வென்றகல் வானேன். (கஎ)

உறக்கத் தொன்று மல்லா திருக்க
உலகாத் தோற்றி விழிக்கி லாதென். (கஅ)

உலகாத் தோற்றமு மலவாத் தோற்றமும்
அறிவை யன்றி யில்லை யல்ல. (ககூ)

(ஆதலின்) அறிவே நீயென் றறைந்தன முன்னோர்
சுருதி யுத்தி யொத்தாற் போல

அனுபவத் தெங்ஙன னென்னை யாயின்
உலகெனற் கருத்தஞ் சுயம்பாத் தெரிக்கில்
அதிலே தானே யனுபவங் காட்டுதும். (உ0)
தோற்ற மிதுவே யுலகா மென்ன. (உக)

உலகெனுஞ் சொல்லுக் கருத்த மெங்கே
அவ்வவற் றற்கியை பெயர்க ளன்றி. (உஉ)
இல்லை யென்னிற் றோற்றம தாகும். (உங)

பொருளிடங் கால மயமே யுலகுக்
கருத்த மென்னி லவ்வவற் றற்கியை
பெயர்க ளிருக்க வெங்ஙன மேற்றற்
பால தாகு முண்மை யன்றே. (உச)

அவ்வவற் றற்கியை பெயரு மிதுபோ
லாகு மவற்றி னுபாதா னத்தை
யுன்னுங் காலை யெதுவுண் மையதாம். (உரு)

காரிய மென்னும் பொருளிடங் காலம்
இருக்கக் கண்டில மின்ன வாறே
தத்தங் காரணந் தாமுங் காரியம்
ஆகு மெட்டா வளவு மாகிற்
சுயம்பெனக் கோடற் கெங்ஙன மியையும்
இயையாமை பற்றி மித்தையென் றுமெலன். (உசா)

தனுவாதி யாயின் றின்ப துன்பந்
தருமோ வுலக மித்தை யாயின். (உஎ)

தனுவு மதைநா னென்னு மறிவும்
ஒன்றன் றுடனு முலகப் பொருளே
யாதலி னிதைநா னென்பதை மறந்து
சொல்லி னுலகை மித்தையென் றிசையோம். (உஅ)
அங்ஙனம் பார்க்கி லெதுசத் தியமாம். (உகூ)

எங்ஙனம் பார்க்கில் யாவுஞ் சத்தியம். (௩௦)

இங்ஙனம் பகுக்கா விடத்தி லென்னிற்
சித்து சடமென் றெப்ப தென்னை. (௩௧)

மூட மன்றோ ஒன்று நோக்கல்
விவேக மன்றோ பகுத்து நோக்கல்
இதனை யேலா மூடரு மிலையே (௩௨)

உலகு சத்திய மூட நோக்கில்
உலக மித்தை விவேக நோக்கில்
என்றிரு பேதமு நோக்கை யன்றி
யின்றெனப் பெற்று மெனது வினையோ
இவ்விரு நோக்கமு மென்னிற் கூறுதும். (௩௩)

அறிவை யன்றி யிவ்விரு நோக்கமும்
இன்றெனப் பெற்றுஞ் சோதனை யானே. (௩௪)

வினைமுத லறிவே யிருநோக் கென்னும்
வினையிரண் டாமோ விருமுதல் வேண்டும்
வேண்டுவ தின்றேல் வினையும் பயனும்
மிசிறிம் பித்தின் குவல மாக்கும். (௩௫)

சாதனந் தன்னி லொருவினை சாலும்
சாத்தியந் தன்னி லிருவினை கர்த்தா
வாகியு மல்லாக் கர்த்தா வாகும். (௩௬)

பொருளல் லவற்றைப் பொருளா நோக்கலும்
பொருளைப் பொருளா நோக்கலு மறிவே. (௩௭)

(அதனால்) புறமுக நோக்கி லறியாமை யெனவும்
அகமுக நோக்கி லறிவா மெனவும்
இருபால தாகி யிசையவதோ ரறிவே. (௩௮)

புறமுக நோக்கிற் சுகமா யிலையும்
அகமுக நோக்கிற் பரமா யுறுதியும்
இருப்ப தென்னை யோரறி வுக்கே. (௩௯)

அங்ஙன மாயதூஉ மிங்ஙன மாயதூஉம்
ஓரறி வன்றி யில்லை யெங்கணும்
அவரவ ருரைப்பிற் காணுமீ துண்மை. (சo)

ஒன்றே யொழிவிரண் டில்லை யென்ன
ஓதிய மறையின் கருத்து மீதே. (சக)

சுருதி யுத்தி யொத்த தாதலின்
அறிவே பந்த முத்தி யென்றும்
மறுத்தற் கிடமின் றியைதற் குத்தி
யின்றே லென்ப முற்றுணர்ந் தோரே. (சஉ)

பந்த முத்தி யாவது மறிவே
மாறினு மாறா திருப்பது மறிவே
எல்லாந் தானா யிருப்பது மறிவே
விலட்சண மாக விருப்பது மறிவே. (சங)

(எங்ஙனம்) நானென லெல்லாஞ் சுகிக்கு முணர்வே
யுடலன் றாதலி னொன்றே யென்பம்
பிறவி மாறினு மாறா மையினால்
திணைபா லிடமா யிருப்பினு மன்றே. (சச)

தன்னை யன்றித் திணைபா லிடங்கள்
இல்லை தானு மல்ல வென்றே
விளங்கலி னங்ஙனங் கண்டோ ரதனை
யிலக்கிய மென்ன வதற்கியை யிலக்கணம்
உரைத்தன ரனுபவத் தசிபதத் தானே. (சரு)

அசிபத மென்ற தென்னை யென்ன
அறைகுவ மதனைச் சாயாது கேட்டி. (சசா)

தத்துவ மசியெனச் சாமவே தத்தின்
அந்தத் தொளிரும் வாக்கிய மாகும். (சஎ)

விரிக்கிற் பெருகு மாதலிற் சுருக்கிக்
கூறுதும் விளக்கக் கொள்ள வறிந்து. (சஅ)

தத்தெனல் பராமாந் துவமெனல் சீவன்
அசியென லேக மென்ப தருத்தம். (சுக)

ஞானமல் லாவுயி ருளரோன் ஞான
மல்லாப் பரமுண் டெனற்கு முரணென். (ருo)

இலையே விலையா மிதிலென் விரோதம். (ருக)

சமட்டி வியட்டி யுபாதி சடமே
யாதலி னறிவன் றற்பமகத் தெங்கே. (சுஉ)

இன்று தலினு லறிவென லொன்றே.
என்று விளக்க லசிபத மென்ப. (ருங)

அறிவொன் றேயெனத் தேர்ந்தனன் வாச்சியத்
தென்பயன் லட்சிய மிலாவிடத் தென்ன (ருச)

ஐயறி வன்றி யுலகெங் கேயென
காணேன் போய தெங்ஙனேயென
முன்னுள தெங்கே யிப்போ தென்ன
நோக்கப் பிறழ்வாற் றோற்றிலை யென்ன
நோக்கும் வினைக்கு முதலா ரென்ன
கண்டு சொல்லுது மென்றொரு முகூர்த்தங்
கண்ணுங் கருத்துங் கலங்காது நிற்கச்
சிற்சோதி யொன்று கண்டன னென்ன. (ருரு)

இதுவே மெய்யுணர் விதுவே நானெனுஞ்
சொல்லுக் கருத்தம் விடாதுபற் றென்ன
அங்ஙன மாக வானந்த மோங்க
இரண்டற் றொன்று யிருந்தன னப்பால். (ருசு)

விடுதிவிசாரவுற்பத்தியிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம்-எஎக.

## இருபத்துமூன்றாவது

# திதியிலக்கணம்.

அங்ஙன நெடுநா ளிருந்து விழித்து
இன்னசிற் சோதியே குருவென் றுணர்ந்து
நிருபா திகமா யிறைஞ்சா திறைஞ்சி
நில்லாது நின்று சொல்லாது சொல்லிக்
குறியாது குறிக்கத் தன்னனு பவத்தைக்
கேளாது கேட்ட வாசான் மகிழ்ந்து
நிலைக்கவிவ் வனுபவ நிகழ்த்துதல் திதியே. (௧)

சிற்சோதி யன்றித் திரிபுடி காணேன்
சிற்சோதி யாகத் திகழ்தலின் மீண்டும்
ஒன்றே யன்றி யிரண்டிலை யென்றான். (௨)

எங்ஙன மென்னத் திரிபுடி தன்னில்
ஞேயமே யெங்குந் தோற்ற லன்றி
யேனைய விரண்டுந் தோற்றா தென்னென
ஞேய மதனுக் குபாதான முன்ன
அப்பி லுப்புபோற் சிற்சோதி யாக
ஏனைய விரண்டு மங்ஙன மாகி
யேக மாகக் கண்டன னெங்கணும்
பல்காலு மென்னப் பகரக் கேட்டுச்
சிந்தை மகிழ்ந்து தெளிக்க லாயினன். (௩)

சிந்தையி லெழுங்கற் பிதங்க ளனைத்தையும்
அங்கங் கேகின் றகலாது விளக்கல்
கதிர்மதி விளக்கன் றவிர்சிற் சோதி
யெங்கணு மென்று மொருபடித் தாதலின்
அதுவே நமதுரு வேனைய வகலும்
கற்பித நாட்டம் விடுவிதை விட்ட
விலக்கணை யென்னு மறையந்த மாதி. (௪)

சிற்சோதி மயமே யெங்கு மாதலின்
அதனை விடாத நாட்ட மதனை
விடாத விலக்கணை யெனுமறை யந்தம். (௫)

இங்ஙன மென்றும் பழகப் பழகக்
கற்பித மனைத்துஞ் சின்மாத் திரமாக்
கரைந்தய வின்றித் தான்மாத் திரமா
யிலகி யதுவு நழுவி னவிற்
சுழுத்தியா வதுவே விட்டு விடாத
விலக்கணை யென்னு மறையி னந்தம்
இதன்வழி நிற்றன் முத்தி யென்ப. (௬)

(ஆதலின்) சிற்சோதி நாட்டஞ் சிதையாது நிற்றி
தடைக ளுளதேற் றவிர்க்குதுஞ் செப்பில்
என்ன வவனுந் தடைக ளீங்கிக்
கற்பித மகன்ற சோதி யானன். (௭)

சிற்சோதி தன்னை வளர்த்தலி தியெனச்
செப்புவர் முற்று முணர்ந்திசி னோரே. (௮)

எங்கெங் கெவ்வா றெழுந்த தெதுவோ
அங்கங் கவ்வா றதுவா மதனால்
அன்னதை யாங்காங் கறிந்துசிற் சோதி
யாக்கலே கடமை யென்றிருந் தனனே. (௯)

சிற்சோதி யன்றித் தினைத்துணை யேனும்
இன்றெனக் கண்டா னிவனுழைப் பதனால்
இதனைத் திதியெனச் செப்பத் தகுமே. (௧௦)

அறிவோ டறிபடு பொருளிரண் டாகி
யியையா விடமிலை யெவ்வகைப் படினுந்
தத்தமக் குரிய விகாரந் தானே. (௧௧)

இணையா விடமெனத் தோற்ற லன்றி
யெங்கே கண்டிலன் சிற்சோதி தன்னில்
என்னு மனுபவந் திதியெனப் படுமே. (௧௨)

கண்ணுரு வாயி னறிவல காகும்
ஆகா தென்னி லொன்று காது. (கங)

இரண்டெனி லெங்கே சோதனை முடிவில்
ஒன்றெனி லிரண்டா யிருப்ப தென்னை
ஞானவுஞ் ஞானத் தன்றியிந் நிலைகள்
இல்லை யிரண்டுங் கற்பித மாகும். (க௪)

அபரம் பரந்திர மெனத்திரி விதமா
நிகழு ஞான மென்மனார் புலவர். (க௫)

அபர ஞான நிச்சய ஞானம். (க௬)

பரஞான நேரே கண்ட ஞானம். (க௭)

நிரஞான மிவ்விரு ஞான மாகியும்
அல்ல தாகியு மிலகு ஞானம்
இதுவாப் பயிற நிதியென மொழிப. (க௮)

உருவன் றருவன் றுளதன் றிலதன்
றறிவன் றறியா மையுமன் றுண்மா
வன்றனுன் மாவு மன்றிவ் வுலகம்
எங்ஙன மென்னிற் றெரிக்குது மீங்கே. (க௯)

உருவ மாயி னுபாதான வடுக்கில்
இன்ன திசையென் றிலாதற் கேதென். (௨௦)

அருவ மாயின் தேக போக
மதற்கியை யிச்சா ஞானக் கிரியை
யிழக்கா தென்னை யென்மனார் புலவர். (௨௧)

(ஆயின்) உளதோ விலதோ வுளதெனி னிசைவுரு
விலதாப் போவதே னெங்ஙனு மென்ப. (௨௨)

இலதெனிற் கன்ம பத்தி ஞானமும்
அதற்கியை சாதன முயல்வும் பலனும்
இலவா மிலவே வுயிர்களென் செய்யும். (௨௩)

இங்ஙன மாகத் தோற்ற மெல்லாம்
அறிவன் றிலவா லறிவே யுலகெனின்
விகார மன்று லறிவு மல்ல. (உச)

அறியாமை யென்னி னறிவன்றி யெங்கே
அறியா மையுமன் றோர்முத லன்றால்
இதனை மறுத்தற் கிடமிலை யென்ப. (உரு)

ஆன்மா வுலகெனி லயலாத் தோற்றமென்
தோற்று மதனு லான்மாவு மன்று. (உசா)

அனான்மா வுலகெனி னான்மா வன்றி
முதலன் றுகலி னனான்மாவு மன்று. (உஎ)

இத்தனை யெல்லாந் திரஞான மன்றி
யில்லை யல்ல வென்றது வாகப்
பயிற றிதியெனப் பகரப் படுமே. (உஅ)

உயிரும் பரமு மிங்ஙன மாய
நிலைய தானெக் கூறிச் சான்றோர்
திரஞா னமதா நின்றன ராதலின்
அதுவாய்ப் பயிற றிதியெனப் படுமே. (உகூ)

தானெனப் படுவது திரஞான மதால்
தானே யறிவா னந்த மென்றனர்
தானே தானு நிற்ற றிதியே. (௩0)

தானெனன் ஞான மஞ்ஞான மன்று
தன்னை யன்றியு மின்று மதனுல்
தானே தானுய்ப் பயிற றிதியே. (௩க)

தானென வில்லாப் பொருளிடங் காலம்
இல்லை தன்னி லிலாதவை யில்லை
என்றவ் விழியாற் பயிற றிதியே. (௩உ)

தானே தானு யிலகு நிலைக்கு
மேலுள தோர்நிலை யென்னற் குத்தி

சற்று மின்றிங் குளதேற் சோதனை
ஞாயம் பொருத்த முகத்தா லேற்குறும்
நாட்டுவா ரெங்கணுங் கண்டில மதனால்
தானே தானாய்ப் பயிற றிதியே. (௩௩)

தானன் னியமாய்ப் பயிற லொன்று
தானே தானாய்ப் பயிற லொன்று. (௩௪)

(இவற்றுள்)சனன மரண சுகாசுக மென்றும்
அகலா தயலா நிற்றல் காறும். (௩௫)

அயலென வின்றிச் சின்மாத் திரமா
நிற்றல் விடுதி முத்தி யென்ப. (௩௬)

இதனை யறிந்து தானே தானாய்ப்
பயிற றிதியெனப் பகர்ந்தன மினியாம்
சங்கார மதனைச் சாற்றக் கேளுதி. (௩௭)

திதியிலக் கணந்தனைத் தேர வறியார்
சங்கார மெங்ஙனஞ் சாதித் தகல்வர்
(அதனால்)முயற லகலா திருத்தல் கடமை. (௩௮)

திதியிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம்உட்படசூத்திரம்-௮௦௩.

---

இருபத்துநான்காவது

## சங்காரவிலக்கணம்.

---

சங்கார மெனவிங் கறிவினுக் கயலாக்
காண்பன வனைத்து நீறு யழிய
ஞானக் கினியே மயமா யெங்கணு
மிலகப் பயிறல் சங்கார மென்ப. (க

வனத்தினும் வரையினு மணுத்துணை யாவெழு
கனற்பொறி யொன்றே யனைத்து மெரித்தழன்
மெழுகாக் கரைத லென்ன விருத்தி
ஞான மகண்டத் தணுத்துணை யாவெழுந்
தண்ட கோடி நிரைநிரை யனைத்து
மெரித்து நீறுக் குதல்சங் காரம். (௨)

பஞ்சுபொதி கிடங்கிற் படர்தீப் பொறியொன்
றுற்று லென்ன வுன்னல்சிற் சோதி
மின்மினித் துணையா வெழுந்தய லனைத்தையுந்
தினைத்துணை மிச்சமு மின்றி யெரித்தல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (௩)

சிற்சோதி கண்டு மயலெனக் கருதி
யானந்த மாகி யனுபவ மனைத்தும்
அங்ஙனங் கோடலிற் பதிபசு பாசம்
பந்தமுத் தியினு மறுதி யெனற்பாற்
றதுஞான மாயின் போலியெ னப்படும். (௪)

தினைத்துணை யேனுஞ் சிற்சோதி காணில்
அதன்வழி நிற்ற லுண்மை ஞானம். (௫)

அதனை வேறெனல் கற்பித ஞானம். (௬)

அதுதா னாகி லதுவே சொல்லும்
என்ற சான்றோ ரனுபவந் தன்னினும்
மிக்கார் போலுங் கற்பித ஞானிகள்
மடமை மடமை மடமை மடமை. (௭)

திணைபா விடங்கள் சிறிது மில்லாச்
சிற்சோதி தன்னைப் பகுப்ப தென்னை
கல்விச் செருக்கோ கசடறத் தெளியாக்
குருக்கள் தப்போ குழறி வழிதல் (௮)

அவத்தை யாவுங் காண்பதிவ் வறிவே
அயலெனி லாங்காங் குள்ள சுகாசுகம்
அனுபவித் திடுத னம்மை யன்றி
யின்று மாதலி னறிவென லொன்றே
யிதனை யுபாதித் திரையமாக் காண்பம்
எந்த வவத்தையு முரித்தன் றுமையின்
எந்த வுபாதியு முரித்தெனப் படுமோ. (௯)

உபாதி கழற்றி னுண்மைசிற் சோதி
வடிவை யன்றி யின்று மதனல்
ஒன்றே யறிவெனு மறையி னந்தம். (க0)

அந்தந்த வுபாதி யாயினு மாங்காங்
ககன்றுரைப் பானே னவ்வவ் வனுபவம்
ஒன்றே யறிவெனன் மறுத்தன் மடமை. (கக)

உடல்பல வாயினும் பூத மொன்றே [னக்
(அதுபோல்)உயிர்பல வாயினு முணர்வொன் றேயெ
கோடற் கெதிர்மறை காணுர் கூறுவர். (கஉ)

அனைத்தையுங் கற்கு மறிவினைக் கல்லா
தெனைத்துணை யுயர்ந்து மென்பயன் மூடம்
தானு மறிவினைச் சோதித் துணர்ந்தார்க்
கொன்றாய் விளங்குத லன்றி யிலையாற்
சொப்பிரகா சத்தனி யென்றனர் கண்டோர். (க௩)

அறிவ தொன்றுண் டறிவிப்ப தொன்றுண்
டென்றறி விரண்டா யிசைப்பதென் னங்கும்
தன்னுற் றன்னை யறிவதும் விளக்கலும்
விளக்கலுந் தானே யின்பமுந் தானே
யிரண்டற வியாபித் திருத்தலுந் தானே
ஆதலின் வியாபக விளக்கமொன் றேயெனக்
கண்டனர் விண்டனர் விண்டனர் கண்டனர் (க௪)

கற்பனை கடந்து மிரண்டெனிற் பந்தம். (கரு)

இங்கிலை ஞானம் போலி ஞானம்
(அன்றேல்)மோன மென்பது ஞான வரம்பு
எனற்கு மாறு விருப்ப தென்னை. (கசா)

தானே தானு யிருத்தல் ஞானம்
எனற்கு மாறு விருப்ப தன்றே
அறிவா னென்றிங் கனுபவ மொன்றெனிற்
பந்தத் திசையினுஞ் சிறந்த தென்னை. (கஎ)

சித்தஞ் செகமெனல் பந்த திசையே
சித்தஞ் சிவமெனல் முத்தி திசையே
யென்றன ராயினுஞ் சித்தமே தன்பாற்
றிரண்டிற்கு மிடமா யிருத்தலி னிதனை
யறியார் ஞானி யென்பதி னென்னை
சித்தமே செகபர மாதலி னன்றே
இரண்டிற்கு மிடமா யிருக்கு மென்ப. (கஅ)

சித்த மன்றிச் செகமதற் குண்மை
தெரிக்க வல்லார் சிவமதற் குண்மை
தெரிப்பவ ரவரைக் கண்டில மெங்கும். (ககூ)

சித்தத்தி னுண்மை நிலையறி வன்றித்
தெரிக்க வறியார் துவிதவா திப்பேன். (உ0)

அறிவை யன்றி சித்த முளதேல்
சித்த மன்றிச் செகபர முயிருள. (உக)

இங்ஙன மிலையே லங்ஙன மிலையாம். (உஉ)

(ஆதலின்)அறிவை யன்றி யனைத்துமிலை யென்றும்
மேல்கீ ழொப்பெனல் தோற்ற மன்றி
யுளதாத் தெரிப்பா ரின்மை யானும்
யறிவு மியைதற் கின்மை யானும். (உங)

அறிவென லொன்றே சத்தியம் பிறவோ
சோதனைக் கியையி னேற்ப மென்ப. (உ௪)

அறிவினை மூட்டி லனைத்து மெரியும்
அதுசங் கார மென்மனார் புலவர். (உ௫)

ஞானக் கினியின் மிக்கதோர் கனலும்
இன்றே யவித்தையு மெரிப்பதி னானே. (உ௬)

உபாதி பேதத் துணர்விரண் டென்னல்
பந்த திசைக்கண் விசாரமின் றதனால்
விடுதிக் கண்ணும் விளம்பல் பிழையே. (உ௭)

எவ்வெவ் வுபாதியு முணர்வன் றதனால்
ஒன்றே யுணர்வெனு மறையி னந்தம். (உ௮)

உபாதி யுணர்வா னோக்கல் சமட்டி
வியட்டி யானிரு வகைத்தென லேற்குநும்
பந்தத் தன்றி விடுதிக் கண்ணுமோ
இதென்ன ஞான மூடரு மேலா
வகைய தென்னற் கைய மென்னே. (உ௯)

(ஓரறி) சிற்றறி வெனலும் பேரறி வெனலும்
உபாதியா லன்றி யுணர்வா லன்றே
ஒன்றெனக் கொள்ளா வுறுதியென் மடமை. (௩0)

உபாதி தோறு நின்ற வுணர்வைத்
தக்கலக் கணையா லுன்ன வுன்ன
வுபாதியெ லாங்கழன் றுதிக்கு ஞான
தினகர னொன்றே சுசாதி யாதி
விகற்ப மின்றி யிலகித் தானா
யிதனைக் காணின் மூவிடந் தினைபால்
இருந்த திசையுங் காணு தேகலின்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (௩க)

ஓரறி வன்றி யிரண்டெனற் கெல்லை
காட்ட வறியீ ரற்புதத் தன்றி
அவ்வற் புதமு மவ்வோ ரறிவில்
(இதனால்)குணகுணி வாத மென்மனார் புலவர். (௩௨)

பகிர்முக நாட்டத் திடையறு நின்ற
காமனு தியருங் கலகமு மெங்ஙனே
அந்தர்முக நாட்டத் தவிந்தது கண்டிலன்
இதுசங் கார மெனிற்றடை யென்னை. (௩௩)

சுடலை யாடி யென்பது மிதுவே. (௩௪)

ஞானவிண் ணொன்றே மனோவிண் ணெனவும்
பூதவிண் ணெனவு மென்றிரு பாற்று
மிவைய தாகி யிலகும் பகிர்முகத்
தந்தர் முகத்தோ வெவ்வித பேதமும்
இன்றி ஞானவிண் ணொன்றே யிலகலிற்
சங்கார மெனற்கிங் கைய மென்னை. (௩௫)

அறிவொ டறிபடு பொருளிரண் டன்றே
அறிபடு பொருடான் பந்தத் துலகம்
முத்தியிற் சிவமென் றறைவீ ரதுமெய்
அறிவெதன் பாற்றோ வயலா வறிதலின்
விடயத்த தென்னிற் சிவமாத் திரிதலென்
சிவத்தின் பாற்றேல் விடயத் தெங்கே. (௩௬)

அறிவிவ் விரண்டினு மொத்துண லோகதி
நுமது ஞானத் தீர்வென் மடமை. (௩௭)

லௌகிக மதனினும் வைதிக மதனினும்
அறிவினுக் கழியா நிலையெங் குறைத்தீர்
மாறி யலையத் தகுநிலை யன்றி
என்ன ஞான மடைய ஞானம். (௩௮)

விடயா னந்தமும் பரமா னந்தமும்
அறிவனுக் கன்றித் தாமே நுகரா
மாறி மாறி நுகரினு நிலையா
எவ்வா னந்தமு மறிவுக் குரித்தன்
றின்னண மாயி னறிவுக் கமைதி
யில்லா துரைத்த ஞானமென் ஞானம். (௩௯)

ஒழிவி லொடுக்க மெனின்விரி வதனில்
விபரீத மென்றலோ பொருடாற் பாற்றே
அறிவினுக் கன்றி யெதற்கிவ் விரண்டும்
இன்று மாதலிற் சுதந்தர மாமோ
ஆமெனின் மாறலென் னமைதியெங் கறிவுக்
கிதன்மே லிரக்க மில்லார் ஞானி
யெனக்கோ டலினு மிறத்த னன்றே. (௪0)

இங்ஙன முளறு ஞானிக டமையே
எரிவா யெரித்தல் சங்கா ரம்மே. (௪க)

உணர்விய லாமுயி ரொன்றனர் பிறரும்
உணர்வே யான்மா வாதலிற் பந்த
முத்திக் கியைந்த விச்சா ஞானக்
கிரியை புரியுங் கட்ட மனைத்தும்
உணர்வுக் காதலின் மாறு வமைதி
புரையா தென்னை மொத்துண லன்றி
யிதுவோ ஞான மூடரு மேலார்
அணுவு மெரிக்கா தனைத்துமென் செய்யும். (௪௨)

எழுவகைத் தோற்ற வுயிரா முணர்வினுள்
ஒன்றனை முற்றுஞ் சோதனை செய்யில்
ஞானுக் கினியா நண்ணு மெங்கும்
அன்னிய மெல்லா மெரித்துநீ றுக்கி

(அதனால்) எல்லா வுணர்வு மிங்ஙன மாகும்
ஆதலி னொன்றே யறிவெனப் பெற்றும். (சரு)

பலதுளி யாயினுஞ் சலமென லொன்றே
(அதுபோல்)பலவுயி ராயினு முணர்வென லொன்றே
அதனை விளக்கி லனைத்து மெரியும்
இதுசங் கார மென்பதி விழுக்கென். (சச)

அறிவ தெதுவோ வதனைக் காணில்
அயலென வின்றி யனைத்துநீ ருக்கும்
இதனினு முண்டோ சங்கார மென்ப. (சரு)

கற்பிதந் தன்னை ஞானமென் பதனாற்
சகபர முயிரை யுண்மை யென்பீர்
அன்றே லன்னிய மிருப்ப தென்னை. (சசா)

அகமுக நோக்கினில்லா வுலகம்
ஞான முதிக்கி னெங்ஙன நிற்கும். (சஎ)

ஞானக் கினியெனற் கைய மில்லை
யனைத்தையு மெரித்தலிற் சங்கா ரம்மே. (சஅ)

ஞான மன்றி யுலகுள தென்னில்
ஆனந்த முந்தா னன்னிய மென்பம். (சகூ)

இலதெனி லிலதா வமையு மன்றோ
சோதனை முகத்தா லென்மனார் புலவர். (ருo)

அவித்தா விகார மனைத்து மாதலின்
வித்தை யுதிக்கி னெங்ஙன நிற்கும்
ஆதலி னிதனைச் சங்கார மென்றும்
திரோபாவ மினியாஞ் செப்பக் கேட்டி. (ருக)

சங்காரவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம்-அருo.

இருபத்தைந்தாவது

## திரோபாவவிலக்கணம்.

திரோபாவ மெனவிங் கொன்றையொன் றுக்கொரு
மயலை மூடல் சிற்சோதி தன்னால்
என்ப தருத்தம் மறுக்கா ரென்ப. (க)

சிற்சோதி மயமே செறிதலி னெங்கும்
விகார வடிவம் விழைந்துங் கண்டிலம்
திரோபாவ மென்னச் சொல்லப் படுமே. (உ)

எங்கணுந் தானு யிலகுசிற் சோதி
யன்றி யொன்றுங் காணு மையினால்
திரோபாவ மென்னச் செப்பத் தகுமே. (ங)

அணுத்துணை யேனுஞ் சகபர முயிரிவை
தலைகாட் டாதொளிர் சிற்சோதி யதனாற்
றிரோபாவ மெனற்குச் சமிசய மென்னே. (ச)

திரிபுடி யென்னல் சிறிது மின்றி
யெங்கணுந் தானு யிலகுசிற் சோதி
மயமா தலினாற் றிரோபாவ மென்ப. (ரு)

ஒன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னுக்க மென்னல் சிறிதுங்
காணு தொளிருஞ் சிற்சோதி யதனாற்
றிரோபாவ மெனற்கிங் கியையா தென்னே. (சா)

தானென லொன்றே யன்றி யிலையால்
தானய லறினன் றேயொன் றுதலின்
இதுதிரோ பாவ மென்மனார் புலவர். (எ)

தானென லொன்று மன்று தலினால்
தன்னை யன்றி யின்று மையினால்
திரோபாவ மென்னச் சிறப்புறு மெங்கணும்

இதனை வரைவார் மேற்பழி யன்றி
யில்லை யனுபவத் தென்மனுர் புலவர். (அ)

தன்னுள் விளங்குஞ் சோதிபோ லொன்றுங்
கண்டில மெங்கு மிதன்முனர்க் கற்பிதம்
எங்ஙன நிற்கு மிதுதிரோ பாவம். (கூ)

அறிவறி யாமை யென்னு மிரண்டில்
அறிவன்றி யுண்டே லறியாமை வேறும்
முதலன் ருகலின் வேறென லெங்ஙன்
எல்லா மாகியு மல்லவு மாகியும்
இருத்த லன்றே தானெனற் கருத்தம்
இங்கிலை தானே திரோபாவ மென்ப. (க௦)

சர்வமுஞ் சின்மாத் திரம தாயின்
அன்னிய மென்பதற் கிடம தெங்கே
(இதனால்)திரோபாவ மென்னச் செப்பத் தகுமே. ()

இருந்த வண்ண முலகினைக் காணில்
விகாரமோ சுயம்போ வெங்ஙனந் தெளிதும். (கஉ)

யாதாத் தோற்றினு மாய்தல் வேண்டும்
(அன்றேல்)உயிர்பர நிலைக ளெங்ஙன நிலைக்கும்
மதங்கண் முரண விதனு லென்ப. (கந)

அறியு மறிவி னுண்மை காணிற்
சகபர முயிர்நிலை யதுவா முடியும்
காணு தார்க்கிங் கைய மகலா
அகலாமை பற்றி மூன்று முடியும். (கச)

ஒன்றல் லனபல வென்றன ராதலின்
ஒன்றன் றென்னி னிரண்டெனா வருமே
இரண்டன் றென்னி னொன்றென வருமே
எங்ஙன மென்னி னிசைக்குது முறையே. (கரு)

சுசாதிக மாதி யின்று மதனால்
ஒன்றே யன்றி யின்றென மொழிப. (கசு)

சகமுயி ரெங்ஙன மப்பர மாகும்
சிற்சட பேதந் தத்தமுட் பலவால்
ஒன்றெனப் படாஅ தெங்கனு மென்ப. (கஎ)

எங்கெங் கெவ்வா றிருப்பினு மெதுவும்
அங்கங் கவ்வா றிருந்தா டுருவி
யதனுக் குரிய கற்பனை யனைத்தும்
ஒவ்வொன் றாகச் சோதனை முகத்தால்
ஒருக்கிச் சேட மாகநிற் பதனை
வேறு படாஅ காண்ட லுண்மை. (கஅ)

ஒன்றெனிற் சூனிய மன்றெனி லுலகம்
(ஆதலின்) ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவுள்
நின்றனர் நாரண னயனர னென்ன
இசைத்தனர் சடகோ பப்பெரு மானன்
றறிந்திலிர் கொல்லோ வாயா தென்னை
தோன்றிய வாறு செப்ப னர்கே. (கக)

அறிவாந் தன்னை யங்ஙன மறியா
தயலாக் காணி லறிவனு வாகும்
இதுவே பந்த திரோபாவ மாகும்
அயலெலாஞ் சின்மாத் திரம தாக்கின்
அயலனு வாகு மிதனை விதனை
விடுதி விசாரத் திரோபவ மென்ப. (உ0)

எங்ஙனஞ் செல்லினு மெங்ஙனங் காணினும்
எங்ஙனந் துணியினு மெங்ஙன நுகரினும்
எங்ஙனம் பிறக்கினு மெங்ஙன மிறக்கினும்
அறிவை யன்றி யின்று மதனால்
இதனை விளக்கி லனைத்து மறையும்
திண்ண மதனாற் றிரோபவ மென்ப. (உக)

பற்பல சமயக் கொள்கை திரிபுகள்
அறிவின் ஸ்புரிப்பை யன்றி யிலையால்
அறிவின் மயத்தைத் திரோபவ மென்றும். (உஉ)

எந்த விடயமு மெவ்வா றனையும்
எங்கெங் கெவ்வா றுதிப்பினு மங்கங்
கதுவது வாகா தறிவா விளங்குதல்
திரோபவ மென்னச் செப்பினர் புலவர். (உக)

ஒன்றை யொன்றாக் கோடல் சித்தை
மயலு மங்ஙனந் தோற்ற லுலக
மயலு மின்றிச் சிற்சோதி யாக
விளங்க லதனைத் திரோபவ மென்ப. (உச)

விடுதி விசாரத் திரோபவ மதனை
யியம்பின மினியாம் விளம்புதும் விடுதி
யனுக்கிர கந்தனை யகலா தன்றே. (உரு)

திரோபாவவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - அஅரு.

---

இருபத்தாறுவது

## அனுக்கிரகவிலக்கணம்.

விடுதி விசார வனுக்கிர கந்தான்
பொய்யைப் பொய்யா மெய்யை மெய்யா
ஐயந் திரிபற விளக்க லென்ப. (க)

வியாபக விளக்கந் தன்னை யன்றி
யயலென வுளதோ வறைதியென் றுணர்த்தல்
அனுக்கிர கந்தா னென்மனர் புலவர். (உ)

தேக முதலாக் காண்பன வனைத்தும்
சிற்சோதி யன்றித் தெரிக்கி லேற்குதும்
எங்ஙன மாயினு மெனலனுக் கிரகம். (ங)

யானுட லென்னும் பாவ மெங்கே
யறிவை யன்றி யின்று மதனால்
அறிவா விளங்க லனுக்கிர கம்மே. (ச)

நீயென னுந்தா னுடலன் றுணர்வே
யறிதருந் தகைமையின் மறுத்தற் கிடமே
தெனலனுக் கிரக மென்றனர் கண்டோர். (௫)

படர்க்கை யாண்பெண் ணலிபிற வுந்தான்
சராசர மேனு மெதிலே தோன்றி
மறைத லதனைத் தேருங் காலைச்
சித்தை யன்றி யின்று மதனால்
அறிவே யென்ன லனுக்கிர கம்மே. (௬)

சார்பே தறிவுக் கறிவே சார்பு
அயலென வெல்லா மகனு மதுபோல்
பாமு மகனு மயலென் றமையான்
இதுவே மிக்க வனுக்ரக மென்ப. (௭)

அறிவுக் கயலுள தேற்சுக மாகும்
இன்றெனி னறிவே சுகம தென்பம்
சோதனை முகத்தான் மறுப்பார் கண்டிலம்
இதுவே நிண்ண மெனலனுக் கிரகம். (௮)

அன்னிய மில்லையென் றாதடா காளம்
ஆனந்த மானேமென் றாதடா காளம்
அறிவே வடிவானேமென் றாதடா காளம்
என்ப தென்னை முற்று முணர்ந்தோர்
அவரினும் வல்லீ ரறிவைக் காணீர். (௯)

அறிவே சகபர முயிரொனல் மெய்யே
அயலெனிற் பொய்யா வனைத்து முடிதலென்
சோதனை ஞாயம் பொருத்த மதனால். (க0)

என்னவா திப்பினு மறிவைத் தள்ளிப்
பூர்வ பட்சமே யாகு மதனாற்
கொள்ளோங் கொள்ளோம் பிறிது கட்சி
அறிவென லொன்றே யெனலனுக் கிரகம். (கக)

இலக்கணந் தர்க்க மறிவுக் கயலாக்
கற்ற செருக்கிங் கறிவையென் செய்யும். (கஉ)

அறிவுக் கிலக்கணந் தர்க்கங் கல்லார்
அன்னியங் கற்றென் னசைக்கப் படுமோ. (கங)

எவ்வவத் தையினு மறிவென வொன்றே
யெம்மய மாயினு மாங்காங் கறிதலிற்
பவுரி யவன்போ லென்மனர் புலவர். (கச)

அவத்தை பலவா யினும்பந்த முத்தி
விளைவுக் கிடமோ சகல மன்றிப்
பிறவன் றுன்னற் பாற்றன் றூகலின்
அதுவே தகுதி யென்மனர் புலவர். (கரு)

புறமுகத் திச்சா ஞானக் கிரியை
பந்த விளைவுக் கேயிட மென்ப. (கசா)

அகமுகத் திச்சா ஞானக் கிரியை
பகுதி விகுதிக் கழிவே யென்ப. (கஎ)

பகுதியும் விகுதியு மறிவை யன்றி
யின்றே தானு மொன்று மன்று
இங்ஙன முணர்த்த லனுக்கிர கம்மே. (கஅ)

சொல்லா லன்றிப் பொருளால் விலக்கல்
இல்லை யிதன்மே லனுக்கிர கம்மே. (கக)

அறிவே காரண காரிய மன்றிப்
பிறிதிலை யுளதே லேற்பங் காட்டில்
என்னுங் காலை யொன்றென முடியும்
தானென வீதே யெனலனுக் கிரகம். (உ0)

ஐயந் திரிபிங் குளதே லிதனுக்
ககற்றுது மிக்கண முறையி னானே. (உக)

பராமுகத் தறிவே யயனா னென்னல்
மருள்சுகப் போலி யதிலதீ தமதாம்
அகமுகத் தவ்வறி வேதற் போத
விழப்பருள் பரைசுக சுகாதீ தமதாம்
நோக்க மெங்ஙனே வங்ஙனம் விளங்கும்
(இதனால்) அறிவிரண் டென்னற் கிடமிலை யென்ப. ()

அறிவென லொன்றே புறமுகத் தயலாய்
அகமுகத் தொளியா யிருத்தல் சுபாவம். (உங)

இஃதறி யாதிங் கிரண்டெனல் பிழையே
உழையா ரெனலை யிதுவே காட்டும். (உச)

அயலுஞ் சுயம்பு மாக விளங்கல்
அறிவை யன்றி யின்று மதனால்
ஒன்றே யென்ன வுண்மை ஞானம்
அன்றெனிற் போலி ஞான மென்ப. (உரு)

உற்றுக் காணி லொன்று விளங்கும்
அன்றேற் பலவாத் தோற்று மென்ப. (உசா)

(ஈதெலாம்)தானு யன்று யிருக்கு மிலக்கியம்
முற்று மையந் திரிபறக் கண்டோர்க்
கன்றித் தினைத்துணை யேனு மேலா
ஏனு மென்னிற் சொல்லள வாமே. (உஎ)

அனைத்து நிதமுந் தோன்றி மறைதலும்
அங்ஙன மாய நிலையை யறிதலும்
அறிவை யன்றி யின்று மாதலின்
ஞானத்தின் மிக்க நிலைசிறி தேனும்
இன்றெனக் காட்டிச் சரியை கிரியை
யோக ஞான மெனமுடி வைத்தார்
ஞானமே நமது நிசவடி வென்னல்
மேலா மந்திர மிதுவனுக் கிரகம். (உஅ)

தெரிவை யன்றிப் பரமாணு வேனும்
தெரிக்கப் படாமையி லனைத்து மறிவே
(அன்றேல்) பலவா யொன்றுத் தோற்ற லென்னை
விசார முகத்தி லெவையு மென்ப. (உகூ)

தானன் னியமா விளங்குங் காறும்
அயல்சுக மன்றித் தற்சுகம் விளையா
தெது செயினு மென்மனூர் புலவர். (கூ0)

தனக்கய லின்றிச் செயலனுக் கிரகம். (கூக)

தானே தானு விளங்கலு மதுவே. (௩உ

ஞானுஞ் ஞான நிலைதா னன்று
தானென லன்றி யில்லை யவையும்
இங்ஙன மிலகல் தானெனு நிலையே. (௩௩)

உணர்வின் பேதமு முலகின் பேதமும்
சித்து சடமா முடிதலின் வேறும். (௩௪)

எங்ஙன மொன்று மிசைப்ப தென்னிற்
பொறிசோ தனையி லுலகு மானத
சோதனை யதனிற் பொறியுஞ் சீவ
சோதனை யதனிற் கரணமுஞ் சீவ
சாட்சிசோ தனையிற் சீவனு மின்றி
யேகசின் மயமா யிலகிற் றுவித
பாவமுந் தோற்றமுங் காணு தென்னை. (௩௫)

உலக சோதனையி லணுத்திர ளன்றி
உலகமு மணுச்சோ தனைதனிற் றிரளும்
பரமா ணுத்திர ளன்றி யணுவும்
பரமாணு சோதனை தன்னிற் றிரளும்
ஞாபக மன்றிப் பரமாணு தானும்
வியாபக விளக்க மதின்ஞா பகமும்
இன்றித் தானு யிலக லென்னை. (௩௬)

செகத்திர ளெங்ஙனே வறியாமை யன்றி
அறியாமை யெங்ஙனே யறிவை யன்றி
அறிவுதா னெங்ஙனே தன்னை யன்றித்
தானு மெங்ஙனே குணுதித மன்றிக்
குணுதித மெங்ஙனே யியல்பா நிலையில்
இயல்பு மெங்ஙனே தானே தானுய்
இலகு நிலையி லிதுவு மெங்ஙனே
மோனு தீதத் திஃது மெங்ஙனே
சும்மா விருக்குஞ் சோம்ப னிலையி
லிதனினு மேலா நிலையின் றுதலின்
இதுவே யுண்மை யனுக்கிர கம்மே. (௩௭)

சடசித் தன்மை காணுங் காறும்
துவித பேத மெங்ஙன மறுமே. (௩௮)

அறுதார்க் கெங்ஙனம் போதிக் கினுமென்
சுதபுண் ணியஞ்சிறி தேனு மின்றேல். (௩௯)

சிந்தை யொன்றும் பார்வை யொன்றுஞ்
சிதறிற் பயனென் னெவ்வகை யுயிர்க்கும். (௪0)

சிந்தையும் பொறியு மொற்றுமைக் கண்ணே
விடய நுகர்தற் கியையு மன்றி
மாறு மாறிற் பராமுகத் தென்ப. (௪௧)

சிந்தையிற் சகமோ சகமதிற் சிந்தையோ
சிந்தையி லென்னி லயலாத் தோற்றலென்
சகமதி லென்னிற் சுழுத்தி தன்னினும்
யோக மதனினும் விசார முடிவினும்
எங்கே யிரண்டு மறிவன்றி யின்றேல்
ஒன்றே யென்ன லனுக்கிர கம்மே. (௪௨)

ஒன்றில் தோற்று முலக மென்னும்
பிரதி பிம்ப மென்றார் சான்றோர்
அதனைத் தெளித்த லனுக்கிர கம்மே. (௪௩)

உலகமு முயிரு மறிவா விளக்கல்
எவற்றினு மேலா மனுக்கிர கம்மே. (௪௪)

எடுத்தலு முடித்தலு மறிவை யன்றி
யின்றெனக் காட்ட லனுக்கிர கம்மே. (௪௫)

இங்ஙனங் காட்டிற் றுக்க நிவர்த்தி
இடையறு வின்ப மெய்த லன்றி
யெங்ஙன மெய்து மேனைய வற்றால். (௪௬)

இன்ப துன்ப மென்னு மலையால்
மொத்துண லறிவார்க் கியையு மிந்த
அனுக்கிர கந்தா னென்மனார் புலவர். (௪௭)

ற்கினு மன்னிய மென்னை யிங்கிலை
ல்லாக் காலை துக்க மறுமே. (௪௮)

பகிர்முக நோக்கத் துய்ந்தா ரில்லை
அகமுக நோக்கத் தழிந்தா ரில்லை
இங்ஙன மிருத்தலி னிசைக்கற் பாற்றே. (சக

பகிர்முக நோக்கத் தனர்த்த மகலா
அகமுக நோக்கத் தர்த்தமே சிறக்கும். (ரு

துக்க மொருங்கே தொலைவக நோக்கில்
சுயசுக மொருங்கே தொலைவய னோக்கில். (ருக

பந்த மனைத்து மழிவக நோக்கிற்
பந்த மனைத்து விளைவய னோக்கில். (ருஉ

காமனு தியருக் கிடம்புற நோக்கில்
விவேகனு தியருக் கிடமக நோக்கில். (ருங)

பழுதை பாம்பாக் காண்பதும் பழுதை
பழுதை யாகக் காண்பதூஉ மொன்றே
நோக்க மிரண்டா லெனினு மிருவகைத்
தோற்ற மெதன்கூற் றொருபொருண் மேற்றெனின்
இருந்த வண்ண மிருப்ப தென்னை. (ருச)

நோக்க மேற்றெனின் விழிமா றென். (ருரு)

உண்மையு மின்மையு மாகுந் தோற்றம்
அவாந்தர மாக வடைந்த தென்ப. (ருசா)

எழுவகைத் தோற்ற வுயிரெலா மறிவே
அத்தற் றகையான் மறுத்தற் கிடமென். (ருஎ)

உபாதித் திரைய முயிரெனி னெங்கே
தன்னையு மயலையு முணரு மாறு
இன்று கவிஞன் மறுத்தற் பாற்றே. (ருஅ)

உபாதித் திரைய முணர்வன் றாகலின்
உணர்வே யனைத்துயி ரும்மெனற் கென்னை
யையங் கண்டில மதனு லுபாதி
யனைத்தையுஞ் சிந்தையிற் கொள்ளப் படாமை
விட்ட லக்கணை யென்மனார் புலவர். (ருகூ)

உபாதி தோறு நின்ற வுணர்வை
மாத்திரம் விடாம லுன்ன வுன்னப்
பலவெனப் படாஅ தொன்றாய் விளங்கும்
உபாதி லட்சிய மகன்ற வதனால்
இதனை விடாத லக்கணை யென்பர்
சோதனை ஞாயம் பொருந்த விழப்பென். (௬0)

ஞெப்தி யன்றிச் சகமுள தாயிற்
பிரியமு மயலெனற் கைய மின்றே. (௬௧)

சோதனை தன்னின் ஞெப்தி யாகச்
செகமுடி தலினாற் பிரியமு மயலன்
றிங்ஙனந் தெளிபி லனைத்துந் தானா
யன்றா யிலகு மெனுந்துணி பானே
விட்டு விடாத விலக்கணை யென்பர். (௬௨)

இதனினு மேலா மனுபவ முளதேல்
இதனுட் படாஅ திருக்க வேண்டும்
எங்கணுங் காணினு மின்றா மென்னின்
இதுவே தீர்வெனற் கைய மென்னை. (௬௩)

அனுக்கிரகவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - ௬௪அ.



வேதாந்தவிலக்கணம்

முற்றிற்று.





# பரிசோதனபத்திரம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| கக | உ | யொய்யெனின் | பொய்யெனின் |
| உச | ௬0 | மென்பம் | மென்ப |
| அ0 | ச | மீகுதியாக | மிகுதியாக |
| கஉஉ | கக | ஞானம் | ஞானம |
| கஉ௫ | ௫ | அன்னி | அன்னிய |
| கஉகூ | உ | கொபினை | கௌபீனை |
| கஉஅ | கஎ | உரிப்பா | உவப்பா |
| கசஎ | கக | னிலனதயும் | னிதனையும் |
| க௫க | ௬ | யறிமை | யடிமை |
| கஎ0 | க௫ | தாமெனக் | தாமெனக் |